சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரியநூல்
தமிழ்த் தாய் 67 - வெளியீடு

# வாசுதேவமனனம் என்று வழங்கும்
# விவேகசாரம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies



"அறிவுச் செல்வங்கள் அனைத்தையும்
தமிழுக்குக் கொண்டுவர வேண்டும்.
இனிவரும் நூற்றாண்டுகளுக்கும்
அருந்தமிழை ஆற்றல் படுத்த வேண்டும்"

- மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்
புரட்சித் தலைவி
அம்மா அவர்கள்

ஸ்ரீ. வாசுதேவ யோகீந்திரர்

இயற்றிய

# வாசுதேவமனனம்

என்று வழங்கும்

# விவேகசாரம்

சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரியநூல்

தமிழ்த் தாய் 67 - வெளியீடு

பதிப்பாசிரியர்

முனைவர் **கோ.விசயராகவன்**

எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்.பி.ஏ.,பி.எட்.,பிஎச்.டி

இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்

தரமணி, சென்னை - 600 113

# நூல் விவரக் குறிப்பு

நூல் தலைப்பு : வாசுதேவமனனம் என்று வழங்கும் விவேகசாரம்

நூல் ஆசிரியர் : ஸ்ரீ. வாசுதேவ யோகீந்திரர்

வெளியீட்டாளரும் பதிப்புரிமையும் : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

தொலைபேசி எண் : 044 - 22542992

வெளியீட்டு எண் : 842

மொழி : தமிழ்

பதிப்பு ஆண்டு : 2015 : முதற்பதிப்பு :

பயன்படுத்திய தாள் : 16 கிகி டி.என்.பி.எல்.வெள்ளை

நூலின் அளவு : 1/8 டெம்மி

எழுத்தின் அளவு : 11 புள்ளி

பக்க எண்ணிக்கை : 344

அச்சுப்படிகளின் எண்ணிக்கை : 1200

விலை : ரூ.220 (ரூபாய் இருநூற்று இருபது மட்டும்)

ISBN : 978-93-85165-53-5

அச்சகம் : ராஜ் எண்டர்பிரைஸஸ்
திருவல்லிக்கேணி
சென்னை - 600 005.

முனைவர் **கோ.விசயராகவன்** எம்.ஏ., எம்.ஃபில்.,எம்.பி.ஏ.,பி.எட்.,பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

பழங்கால அரியநூல்களையும் சுவடிகளையும் பாதுகாக்கும் வகையில் 2014ஆம் ஆண்டு நிறுவனத்தில் 34 **இலட்சம் மதிப்பீட்டில் சுவடிகள் பாதுகாப்பு மய்யம் மாண்புமிகு மக்கள் முதல்வர் புரட்சித்தலைவி அம்மா அவர்களால்** தொடங்கப்பட்டது. அவ்வகையில் நாடெங்கினும் உள்ள அரிய நூல்களை, சுவடிகளைத் திரட்டும் பணி தொடங்கப்பட்டு, கண்டறியப்பட்டுள்ள நூல்களைத் தமிழ்த்தாய் 67 - பெருவிழா, பிப்ரவரி 2015இல் வெளியிடும் திட்டத்தின் கீழ், 1906 ஆம் ஆண்டு வெளிவந்துள்ள இந்நூல் இப்பொழுது மீட்டுருவாக்கம் செய்யப்பெற்று வெளியிடப்படுகிறது.

பிறர்க்கென வாழும் கருணை உள்ளமும் நிறைந்த மனமும் கொண்ட அருள் நெஞ்சினர் வாழ்வதால்தான் இந்த உலகம் நின்று நிலைபெற்று இயங்குகின்றது என்பர். 'யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்' என்னும் பெருமனங் கொண்ட அருளாளர்கள் தாம் கற்றுணர்ந்து அதன்மூலம் கண்டுணர்ந்த சாத்திர சாரங்களைப் பிறருக்கும் உணர்த்த முற்பட்டனர். அப்படி உணர்த்தப்பட்ட ஆத்மஞான சாத்திரங்களின் தொகுப்பே இந்த **வாசு தேவ மனனம் என்று வழங்கும் விவேகசாரம்** என்னும் நூல். இதனை வடமொழியில் ஸ்ரீவாசுதேவ யோகீந்திரர் 45 சுலோகங்களால் இயற்றி அருளியுள்ளார்.

ஞானத்தின் பிழிவாக விளங்கும் இந்நூலின் தெளிவைப் பொதுமக்களும் அறிந்து போற்றும் வகையில் தமிழ்மொழியில் 45 பிரகரணமாகத் தொகுத்து

வழங்கப்பட்டுள்ளது. மொழிபெயர்த்தவர் பெயர் அறிந்திலது. எனினும் பிரம்ம சொரூபத்தை உணரும் நிலையில் ஞானத்தின் பெருக்காக விளங்கும் இந்நூல் தமிழ்மொழியில் கிடைத்திருப்பது தமிழ்மக்கள் செய்த தவப்பேறே எனலாம். 1906 இல் வெளிவந்துள்ள இந்நூல் நூற்றாண்டைக் கடந்த நிலையில் மீண்டும் புத்துயிர் பெற்று ஒளியச்சு முறையில் வெளிவந்துள்ளது. இது தமிழ்மக்களுக்கு வாய்த்த பேறு.

தமிழறிஞர்களின் தமிழ்த் தொண்டினை எப்போதும் பாராட்டுவதில் முதன்மையானவர் **மாண்புமிகு மக்களின் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா** அவர்கள் ஆவார். மாண்புமிகு அம்மா அவர்கள் தமிழ் மீதும் தமிழர் மீதும் தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும்வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் **மாண்புமிகு மக்களின் முதல்வர் புரட்சித் தலைவி அம்மா** அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றோம்.

தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் **பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு கே.சி. வீரமணி** அவர்களுக்கு நன்றி.

தமிழ் வளர்ச்சிப் பணிகளில் ஆர்வத்தோடு நாட்டம் செலுத்தித் தமிழ்த் தொண்டாற்றிவரும் **தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம்** இ.ஆ.ப. அவர்களுக்கும் இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் சிறப்பான முறையில் மறு அச்சுப் பெற முனைந்து உழைத்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன அனைத்துப் பணியாளர்களுக்கும் அச்சகத்தார்க்கும் என் நன்றி.

**இயக்குநர்**

சென்னை, திராவிட புத்தக டிபோ பதிப்புகள்.

# வாசுதேவமனனம்

என்று வழங்கும்

# விவேகசாரம்.



இஃது

வசனரூபமாய் சகல வேதாந்த சாஸ்திரார்த்தங்களு மடங்கி
யிருக்கின்றமையால் முமூட்சுகளிற் கற்றவர்களன்றி
மற்றவர்களும் எளிதிலறிந்து மோட்சா
ணந்தத்தைப் பெறச்செய்யும்.



PRINTED AT THE TAYLOR WORKS,
MADRAS

1906.

# அட்டவணை.

பக்கம்.

ஸ்ரீசற்குருவேநம.

# வாசுதேவமனனம்

என்று வழங்குகிற

# விவேகசாரம்.

---

## அவதாரிகை.

ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபமாகிய ஸ்ரீவாசுதேவ யோகீந்திரர் தமது சுவானுபூதிப் பிரத்தியக்ஷத்தை உலகம் எளிதிலடைந்து ஆனந்தாதீத மாகும் பொருட்டுக் காருண்யத்தினாற் கிருபைகூர்ந்து வடமொழியில் நாறபத்தைந்து சுலோகமாய்த் திருவாய்மலர்ந்தருளிய விவேகசார கிரந்தார்த்தத்தைத் தமிழில் மொழிபெயர்த்து நாற்பத்தைந்து பிரகரணமாகத் தொகுத்து, அத்தியாரோப அபவாத யுத்திகளினாலன்றிப் பிரமசொரூபத்தை யறியக் கூடாதென்று சகலவேதாந்த சாஸ்திரங்களுஞ் சொல்லுகின்ற முறைமைப்படி, முந்தி அத்தியாரோப நிரூபகப் பிரகரணத்தைச் சொல்லுகின்றார்.

---

முதலாவது

# அத்தியாரோப நிரூபகம்.

---

சங்கை. சுருதியாதிகளிற் சொல்லுகின்ற அத்தியாரோப யுத்தியாவ தேதென்னில்,

உத்தரம். ஒரு வஸ்துவினிடத்தி லந்நியவஸ்துவாய்த் தோன்றுகிறது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் கிளிஞ்சலினிடத்தில் வெள்ளியும், பழுதையினிடத்திற் பாம்பும், கட்டையினிடத்திற் கள்ளனும், கானலினிடத்திற் றண்ணீரும், ஆகாயத்தினிடத்திற் கறுப்பும் எப்படி யாரோபித்ததோ, அப்படிபோல தாஷ்டாந்தத்திலும் நிஷ்பிரபஞ்ச சொரூபராகிய ஆத்மாவினிடத்தில் பிரபஞ்ச மாரோபித்ததே அத்தியாரோபம்.

ச-கை. அது எதினால் வந்ததென்னில்,

உ-ம். அதிஷ்டானாஞ் ஞானத்தினால் வந்தது. அதன் சொரூபத்தைப் பின்னால் விகசிதமாகச் சொல்லுகிறோம். இப்போது சம்க்ஷேபமாகச் சொல்லுகிறோம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஒரு அஞ்ஞானமே பிரகிருதியென்றும், மாயையென்றும், அவித்தையென்றும், தமசென்றும் அநேக விதமாய்ச் சொல்லப்படும்.

ச-கை. இதுகளிற் பிரகிருதியாவ தேதென்னில்,

உ-ம். குணங்களுடைய சாமானியாவஸ்தைகளுக்குப் பிரகிருதியென்றும், பிரளயாவஸ்தையென்றும், மகாசுழுத்தியவஸ்தையென்றுஞ் சொல்லப்படும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். வெள்ளைநூலும், சிவப்புநூலும், கறுப்புநூலும் ஒன்றாய்முறுக்கினா லெப்படி யிருக்குமோ, அப்படிபோல இந்தப் பிரகிருதியில் அநேககோடி ஜீவராசிகள் தங்களுடைய கர்மமும், வாசனைகளுமாகிய பலத்துடனேகூடிப் பொருந்தி யிருப்பார்கள்.

ச-கை. இதற்குத் திருஷ்டாந்த மெப்படியென்னில்,

உ-ம். மெழுகுண்டையில் நவலோக ரவைகளெப்படி இலீனப்பட்டிருக்குமோ, அப்படிபோலப் பிரகிருதியில், ஜீவர்கள் இலீனமாயிருக்கிறார்கள்.

ச-கை. இது ஏகதேச திருஷ்டாந்தம் ஆயினும் சர்வத்திர பிராணிக ளனுபவம் எப்படியென்னில்,

உ-ம். சுழுத்தியில் ஜீவர்கள் வெகுகாலம் இலீனமாயிருக்கத் தெய்வகதியாய் ஒரு சமயத்தில் அந்தச் சீவர்களுடைய கர்மபலம் பக்குவப்படும். அப்போது திரிகுணாத்மகமான பிரகிருதியாகிற சத்துவகுணம் விச்ரிம்பிக்கும். அங்ஙனம் விச்ரிம்பிக்கிற சத்துவகுணத்தை மாயையென்று சொல்லப்படும். இந்த மாயையிற் பிரதிவிம்பித்த சைதன்யமும், மாயையும், இதற் கதிஷ்டான சைதன்யமும், இம்மூன்றுங்கூடி ஈஸ்வரனென்று சொல்லப்படும். இந்த ஈஸ்வரனுக்கே அந்தரியாமி யென்றும், அவ்வியாகிருதனென்றும் இரண்டுபெயர். இவரே ஜெகசிருஷ்டிகர். இந்த சிருஷ்டிக்கிரமத்தில் உபாதானகாரணம், நிமித்தகாரணமென்கிற இரண்டு காரணமும் வேண்டுமென்று உலோகத்திற் கண்டிருக்கிறோம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். கடமுதலிய பாண்டங்களுற்பவிக்கிறதற்கு மண் உபாதானமும், குயவனும் அவனாயுதங்களும் நிமித்தமாகவும், புடவையுண்டாக்குகிறதற்கு நூல் உபாதானமும், நெய்யக்காரனும் நாடாமுதலிய வவனாயுதங்களு நிமித்தமாகவும் எப்படி லோகத்தில் இரண்டு காரணத்தினாலும் கடபடாதிகள் உற்பத்தியாகின்றனவோ, அப்படியே, இரண்டு காரணத்தினாலும் சகத்துற்பத்தியென்று தோற்றுகின்றது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். மாயை உபாதானமும், ஈஸ்வரன் நிமித்தமுமென்று சொல்லுவோமாகில், சுருதிகளுக்கு விரோதம்

வரும். இதுமாத்திரமல்ல; உபாதானகாரணம் சத்பதார்த்தமா யிருக்கவேண்டும். அப்படி யிருக்குமானல், மாயையும் ஆத்மாவு மிரண்டு பதார்த்தமாகிறபடியால் அத்வைதத்திற்கு ஆனிவரும். ஆதலாலிப்போது சொன்ன பட்சங் கூடாது. பட்சாந்தரமாய்ச் சொலலவேண்டும். மாயை நிமித்தமென்றும், ஈஸ்வர னுபாதானமென்றுஞ் சொல்லுவோமாகில், முன்போல அத்வைத விரோதம் வரும். உலகத்திலும் சேதனனையே நிமித்தகாரணமாகக் கண்டோம். அசேதனமான மாயை நிமித்தகாரணமாக மாட்டாது. ஆனல் அத்வைதஹானி வரும். இந்தத் தோஷங்களிருக்கிறபடியினல் கேவலமான மாயை உபாதானமு மாகாது. நிமித்தமுமாகாது. ஆதலால் உபாதானமும், நிமித்தமும் ஈஸ்வரனென்றே சொல்லவேண்டும்.

ச-கை. உலகத்தி லிரண்டுகாரண மொன்றினிடத்திற் காணேமே, அஃதெப்படி சொல்லுகிறதென்னில்,

உ-ம். சொல்லலாம்; உலகத்தில் நூலையுண்டாக்குகிற சிலந்திப்பூச்சியினிடத்தி லிரண்டுகாரணமு மிருக்கின்றது. அந்தப் பூச்சியே சரீரப் பிரதானத்தில் உபாதானமும், புத்திப் பிரதானத்தினல் நிமித்தமுமாயிருக்கக் கண்டோம. அப்படிபோல ஈஸ்வரனும் சத்துவகுணப் பிரதானமான மாயையுடனே கூடி நிமித்தகாரணமானர்; தமோகுணப் பிரதானமான மாயையுடனே கூடி உபாதானகாரணமானர். இந்த உபயகாரணமான ஈஸ்வரனல் ஜெகத்துண்டாயிற்று.

ச கை. எப்படியென்னில்,

உ-ம். ஈஸ்வரன் சத்துவகுணப் பிரதானமான மாயையுடனே கூடிக்கொண்டு தமோகுணப்பிரதாமான மாயையை வீக்ஷித்தபோது, அந்தத் தமோகுணப்பிர-தானமான யாயையோடுகூடின சைதன்யத்தினல் திரிகுணத்மகமான ஆகாச

மும், அந்த ஆகாசவிசிஷ்ட சைதன்யத்தினால் திரிகுணாத்மக மான வாயுவும், அந்த வாயுவின் விசிஷ்டசைதன்யத்தினால் திரிகுணாத்மகமான தேயுவும், அந்தத் தேஜோவிசிஷ்ட சைதன்யத்தினால் திரிகுணாத்மகமான ஜலமும், அந்த ஜலவிசிஷ்டசைதன்யத்தினால் திரிகுணாத்மகமான பிருதிவியு முண்டாயிற்று. இது அபஞ்சீகிருத பூதங்களென்றும், சூக்ஷ்மபூதங்களென்றும், தன்மாத்திரைகளென்றுஞ் சொல்லப்படும். இந்தப் பூதங்களினால் சமஷ்டி வியஷ்டி யாத்மகமாகிற இலிங்க சரீரமுண்டாயிற்று. இந்தச் சமஷ்டி வியஷ்டி சொரூபத்தை முன்னே நிரூபிக்கிறோம். இந்த இலிங்கசரீரமும் பதினேழு தத்துவங்களுடனே கூடியிருக்கும்.

ச-கை. அந்தப் பதினேழுதத்துவங்களாவ தேதென்னில்,

உ-ம். ஞானேந்திரியம்-5, கன்மேந்திரியம்-5, வாயுக்கள்-5, மனம் புத்தி-2, ஆ-17.

ச-கை. இதுகளினுற்பத்தி யெப்படியென்னில்,

உ-ம். ஆகாசத்தினுடைய சாத்வீகாம்சத்தில் சுரோத்திரேந்திரியமும், வாயுவின் சாத்வீகாம்சத்தில் தொக்கிந்திரியமும், தேயுவின் சாத்வீகாம்சத்தில் சட்சு இந்திரியமும், அப்புவின சாத்வீகாம்சத்தில் சிங்குவை யிந்திரியமும், பிருதிவியின் சாத்வீகாம்சத்தில் கிராணேந்திரியமுமாக இந்தப்படி சாத்வீகாம்சத்தில் வியஷ்டியான ஞானேந்திரியங்கள் பிறந்தன. இந்தச் சாத்வீக சமஷ்டியினால் அந்தக்கரணங்கள் பிறந்தன. அது விருத்திபேதத்தினால் மனம் புத்தி சித்தம் ஆங்காரமென்று நான்குவிதமாயிற்று. அந்தப் பதினேழு கணக்குக்கு மனமுஞ் சித்தமுமொன்றாயிற்று. புத்தியு மாங்காரமு மொன்றாயிற்று. ஆகாசத்தினுடைய ரஜோம்சத்தில் வாக்கும், வாயுவின் ரஜோம்சத்திற் பாணியும், தேயுவின் ரஜோம்சத்திற் பாதமும், அப்புவின்

ரஜோம்சத்திற் குய்யமும், பிருதிவியின் ரஜோம்சத்திற் குதமும், இந்தப்படி ரஜோம்சத்தில் வியஷ்டியான கன்மேந்திரியங்கள் பிறந்தன. இந்த ராசத சமஷ்டியினால் பிராண வாய்வு பிறந்தது. அது விருத்திபேதத்தினால் பிராண, அபான உதான வியான சமான னென்கிற பஞ்சவாய்வுக்களாயிற்று. உபவாய்வுக்களும் இதுகளுக்குள்ளே அந்தர்ப்பூதமாகும். இந்தப் பதினேழுங்கூடி, சமஷ்டி வியஷ்டியாகிற இலிங்க சரீரமென்று சொல்லப்படும். அந்த ஈஸ்வரனே இந்த இலிங்கசரீரத்தி லபிமானித்து இரணியகர்ப்பரானார். அவருக்கே சூத்திராத்மாவென்றும் பிராணனென்று மிரண்டு பெயர். இதுவே சூக்ஷ்மசரீரசிருஷ்டி.

ச-கை. இனி ஸ்தூலசரீர சிருஷ்டியாவ தேதென்னில்,

உ-ம். அந்த மாயாசகித ஈஸ்வர வீக்ஷண்யத்தினால் தமோம்சப் பிரதானமான அபஞ்சீகிருத பஞ்சபூதங்களிலாகாயமுதலிய ஸ்தூலபூதங்களு முண்டாயிற்று. அவை ஒவ்வொன்றும் இரண்டு பாகமாயிற்று. அதில் ஒருபாகம் நிற்க மற்றை ஒருபாகம் ஒவ்வொன்றும் நன்னான்காகி, அந்தந்தப் பாகங்களின் நிஜாம்சத்தை விட்டு இதர பூதங்களுடனே கூடுகிறது பஞ்சீகிருத ஸ்தூலபூதங்களென்று சொல்லப்படும். இந்த ஸ்தூலபூதங்களினிடத்தில் ஈஸ்வர வீக்ஷண்யத்தில் ஸ்தூலப் பிரபஞ்ச முண்டாயிற்று.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். பஞ்சீகிருத பஞ்சமகாஸ்தூல பூதங்களினால் அண்டமும், அந்த அண்டத்தில் கீழேழுலகமும், மேலேழுலகமும், அந்தந்த லோகங்களுக் குசிதமான நால்வகை யோனிக்களும் பிறந்தன. இத்தனையுங்கூடி ஸ்தூலப்பிரபஞ்சமென்னப்படும். இதனிடத் தபிமானித்த ஈஸ்வரனுக்கு

விராட்டென்று பெயர். அவருக்கே வைஸ்வாநரன், வைராஜசனென் றிரண்டுபெயர். இதுவே சமஷ்டி.

ச-கை. இனி வியஷ்டிசொரூபமாவ தெப்படியென்னில்,

உ-ம். வியஷ்டியானது சமஷ்டியி லந்தர்ப்பூத மானுலும் அதையுஞ் சொல்லவேண்டும்; எப்படியென்றுல் சாக்கிராவஸ்தையில் தூலசரீரத்தி லபிமானியாயிருக்கிற சீவனுக்கு விசுவனென்ற பெயர். அவனுக்கே வியவகாரிகன், சிதபாசனென் றிரண்டு பெயர் சொப்பனவஸ்தையில் சூக்ஷ்மசரீரத்தி லபிமானியாயிருக்கிற சீவனுக்குத் தைசதனென்று பெயர். அவனுக்கே பிராதிபாதிகன், சொப்பன கற்பிதனென் றிரண்டுபெயர். சுழுத்தியவஸ்தையில் காரணசரீரத்தி லபிமானியாயிருக்கிற சீவனுக்குப் பிராக்ஞனென்று பெயர். அவனுக்கே பாரமார்த்திகன், அவிச்சின்னனென் றிரண்டுபெயர். இதுவே வியஷ்டி. இந்தப் பிரபஞ்சத்தின் அவாந்திர சிருஷ்டி ஸ்திதி லயங்களுக்காகவே அவ்வீசுரன் திரிமூர்த்திசொரூபமாகினுர்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சத்துவகுணத்துடன்கூடி ரட்சிக்கிறதற்கு விஷ்ணுவாகவும், ராசதகுணத்துடன்கூடி சிருஷ்டிக்கிறதற்குப் பிரம்மாவாகவும், தமோகுணத்துடன்கூடி சங்கரிக்கிறதற்கு ருத்திரனுகவு மிருக்கிறுர். இவர்களில் பிரம்மா விராட்டி லந்தர்ப்பூதன்; விஷ்ணு இரண்ணியகர்ப்பத்தி லந்தர்ப்பூதன்; உருத்திரன் பிரபஞ்ச காரணமான அவ்வியாகிருதத்தி லந்தர்ப்பூதன்; இதுவே யத்தியாரோபயுக்தி என்று சொல்லப்படும். இந்த அத்தியாரோபத்திற்கு மூலமான அஞ்ஞானத்தை ஸ்ரீசற்குருகடாட்சத்திறுல் சங்கையற

ஏவனறிகிறானோ, அவனே ஜீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல்லுகின்றது. இதிற் சமசயமில்லை, சித்தம்.

அத்தியாரோப நிரூபகம் முற்றிற்று.

---

இரண்டாவது

# அபவாத நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளிற் சொல்லுகிற அபவாதயுத்தி யாவதேதென்னில்,

உத்தரம். காரணத்துக் கந்நியமாய்க் காரியமில்லை யென்றறிவது.

ச-ங்கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். மண்ணினா லுண்டாக்கப்பட்ட கடமுதலிய பாண்டங்கள் மண்ணுக் கந்நியமா யெப்படிக் காணப்படவில்லையோ, நூலினாலுண்டாக்கப்பட்ட புடவைகள் நூலுக் கந்நியமா யெப்படிக் காணப்படவில்லையோ, சொர்ணத்தா லுண்டாக்கப்பட்ட ஆபரணங்கள் சொர்ணத்திற் கந்நியமா யெப்படிக் காணப்படவில்லையோ, இரும்பினா லுண்டாக்கப்பட்ட ஆயுதங்க ளிரும்புக்கந்நியமா யெப்படிக் காணப்படவில்லையோ அப்படிபோல, ஆத்மாவினாலுண்டாக்கப்பட்ட பிரபஞ்சங்கள் ஆத்மாவையன்றி வேறில்லையென்றறியவேண்டியது.

ச-ங்கை. அஃதறிகிறவித மெப்படியென்னில்,

உ-ம். பஞ்சீகிருத பஞ்சமகா ஸ்தூலபூதங்களினாற் பிறக்கப்பட்ட அண்டமும், அவ்வண்டத்தினுளுண்டான பதினாலு லோகமும், அந்தந்த லோகங்களுக் குசிதமான

நால்வகை யோனிகளும், அவைகட்குக் காரணமாகிய பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களன்றி வேறில்லை யென்றும், அந்தப் பூதங்களும், சமஷ்டி வியஷ்டி யாத்மகமான இலிங்க சரீரமும், அவைகட்குக் காரணமாகிய அபஞ்சீகிருத பஞ்ச மகாபூதங்களன்றி வேறில்லை யென்றும், அந்தப்பூதங்களும் அதன் காரணத்தையன்றி வேறில்லையென்றும் அறியவேண்டியது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். அப்புவினுலுண்டாக்கப்பட்ட பிருதிவி அப்புவன்றி யெப்படி வேறில்லையோ, அக்கினியினு லுண்டாக்கப்பட்ட ஜலம் அக்கினியன்றி யெப்படி வேறில்லையோ, வாயுவினு லுண்டாக்கப்பட்ட அக்கினி வாயுவையன்றி யெப்படி வேறில்லையோ, ஆகாசத்தினு லுண்டாக்கப்பட்ட வாயு ஆகாசமின்றி யெப்படி வேறில்லையோ, மாயையினு லுண்டாக்கப்பட்ட ஆகாசம் மாயையன்றி எப்படி வேறில்லையோ அப்படியே யாம்.

ச-கை. அந்த மாயாசொரூப மெப்படியென்னில்,

உ-ம். அது திரிகாலத்திலு மில்லாதபடியினுல் சத்தென்றுஞ் சொல்லப்படாது; அகம் அஞ்ஞானியென் றனுபவமிருக்கிறபடியினுல் அசத்தென்றுஞ் சொல்லப்படாது; விருத்தமான படியினுல் சதசத்தென்றுஞ் சொல்லப்படாது.

ச-கை. மற்றென்ன வென்னில்,

உ-ம். அனிர்வசனீயமென்று சொல்லப்படும்.

ச-கை. அனிர்வசனீயமாவ தேதென்னில்,

உ-ம். மித்தையா சொரூபம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சசவிஷாண வந்தியாபுத்ர ககனாரவிந்த சுத்தி காரசிதம்போலிருக்கிறபடியால் சின்மாத்திரத்துக் கந்நியமா யொருவஸ்துவு மில்லையென் றறியவேண்டும். இவ்வகைப்பட்ட சின்மாத்திர சொரூபமே தானென்றுகொண்டு ஸ்ரீசற்குருவினால் பிரதானாதி தோற்றமும், அஞ்ஞானமும் சங்கையறக் கேட்டு, அத்தியாரோபநீங்கி அந்நிய பதார்த்த மில்லாமலபவாதமாய்த்தான் பாவுமென்று சாட்சாத்கரித்து எவனறிகிறானோ, அவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல்லுகின்றது. இதிற் சம்சயமில்லை, சித்தம்.

அபவாத நிரூபகம்
முற்றிற்று.

---

மூன்றவது

# சாதனசதுஷ்டய நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளிற் சாதன சதுஷ்டயங்களை விசாரித்தறிய வேண்டுமென்பதனால் இந்த வேதாந்த விசாரத்திற் கதிகாரி யாரெனில்,

உத்தரம். சாதனசதுஷ்டய முள்ளவனே யதிகாரி.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். பிரகஸ்பதி சவனமென்கிற யாகத்தில் பிராமணனெப்படி யதிகாரியோ, க்ஷத்திரியா, வைசியர் எப்படி யதிகாரிக ளல்லவோ, ராஜசூய யாகத்தில் க்ஷத்திரிய னெப்படி யதிகாரியோ, பிராமணர் வைசிய ரெப்படி யதிகாரிக ளல்லவோ, ஸ்தோம மென்கிற யாகத்தில் வைசியரெப்படி யதிகாரிகளோ, பிரம்ம க்ஷத்திரிய ரெப்படி. யதிகாரிக ளல்ல

வோ, அப்படிபோல வேதாந்த விசாரத்திற்குச் சாதன சதுஷ்ட சம்பன்னத்துவ முண்டானவனே யதிகாரியாம்.

ச-கை. சாதனசதுஷ்டயமாவ தேதென்னில்,

உ-ம். நித்தியாநித்தியவஸ்து விவேகம், இகவுத்திரார்த்த பலபோக விராகம், சமாதிஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்துவம்.

ச-கை. இதில் நித்தியாநித்தியவஸ்து விவேகமாவ தேதென்னில்,

உ-ம். பிரமமே நித்தியமென்றும், பஞ்சபூத பௌதிகமுதலிய ஜகத்தெல்லாம் அநித்தியமென்றும் சுருதி ஸ்மிருதிகளால் குருமுகமாய் விசாரித்தறிகின்றது.

ச-கை. இகவுத்திரார்த்த பலபோக விராகமாவ தேதென்னில்,

உ-ம். இந்தலோகத்திற் கன்மத்தினுற் ஜனித்துவரப்பட்ட அநித்தியமான சற்சந்தன வனிதாதி விஷயபோகத்தினிடத்திலும், பரலோகத்திற் கன்மஜன்னியத்தினுல் வரப்பட்ட அநித்தியமான ரம்பா சம்போக அமிர்தாதிகளிடத்திலும் வாந்தி செய்த அசன மலமூத்திராதிகள்போல ஆசையில்லாமல் இந்த ஜகத்திற்குக் காரணகர்த்தாவாகிய சுவாமியினிடத்திற் பிரீதியாயிருப்பது.

ச-கை. சமாதி ஷட்க சம்பத்தியாவ தேதென்னில்,

உ-ம். சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சமாதி, சிரத்தை என்றுறுவகை.

ச-கை. இதிற் சமமாவ தேதென்னில்,

உ-ம். பாகியவிஷயத்திற் செல்லவொட்டாமல் மனதைத் திருப்பிச் சிரவணத்தில் வைப்பது.

ச-கை. தமமாவ தேதென்னில்,

உ-ம். ஞானேந்திரிய கன்மேந்திரியங்களை விஷயத்திற் செல்லவொட்டாமற் றிருப்பிச் சிரவணத்தில் நிறுத்துவது.

ச-கை. உபரதியாவ தேதென்னில்,

உ-ம். விகிதமான கன்மங்களைப் புத்திபூர்வகமாய் விடுகிற தென்றும், அதைச் சன்னியாசமென்றுஞ் சொல்லுவார்கள். அப்படியல்ல. விகிதமான கன்மங்களில் கர்த்தத்துவாபிமான பலாபேக்ஷையின்றிச் சகல பாவ கன்மங்களையும்விட்டு, சகல புண்ணியனமங்களைச்செய்து பகவத்பிரீதியாக்குகிறது.

ச-கை. திதீக்ஷையாவ தேதென்னில்,

உ-ம். சீதோஷ்ணங்களைப பொறுப்பது. அப்படியாகில் பனியிலிருந்து குளிரையும், வெய்யிலிலிருந்து சுடுகையையும், பொறுக்கிறதல்ல. பிராரத்த வசத்தினலெந்தவேளைக்கு எது வருமோ, அதை யனுபவித்துத் தீரவேண்டுமென்று கருதி, சகலமும் போகிறதைப்பற்றி வாட்டமும், சகலமும் வருகிறதைப்பற்றி மகிழ்ச்சியு மில்லாமல் சமபுத்தியுடனே யிருப்பது.

ச-கை. சமாதியாவ தேதென்னில்,

உ-ம். திருப்பினமனமு மிந்திரியங்களும் வாசனை வசத்தாய் வரப்பட்ட விஷயத்தினிடத்திற் போம். அதுகளைச் சிரவணத்திற்கு வெதிரித்தமான விஷயங்களிற் செல்லவொட்டாமற் றிருப்பிச் சிரவணத்தில் வைப்பது.

ச-கை. சிரத்தையாவ தேதென்னில்,

உ-ம். பூர்வம் யாதொன்றினிடத்திலிருந்த விசுவாசமெல்லாம், குருவேதாந்த வாக்கியத்தினிடத்தில் வைப்பது.

ச-கை. இனி முமுக்ஷுத்துவமாவ தேதென்னில்,

உ-ம். மோக்ஷத்தை யறிந்து அடையவேண்டுமென்கிற அதிதீவிரமாகிய மனதுடனே கூடியிருக்கிறது. அதற்கே மோக்ஷவிச்சை யென்று பெயர்.

ச-கை. சகல பிராணிகளும் மோக்ஷம்வேண்டுமென்று சொல்லுகிறார்களே; அது மோக்ஷவிச்சை யல்லவாவென்னில்,

உ-ம். அல்ல.

ச-கை. மற்றெப்படி யென்னில்,

உ-ம். கிரகம் பற்றிக்கொண் டெரிகிறபோது அவ்வீட்டுக்கு ளகப்பட்ட புருஷன், தனது புத்திர மித்திர களத்திராதிக ளென்னமாய்ப் போனார்களோவென்ற விசாரத்துடன்கூடி, அக்கினியில் தபிக்கப்பட்டவனாய், அந்தப் புத்திர மித்திர களத்திராதிகளை விட்டுவிட்டு குளிர்ந்தஜலத்திற் பிர்வேசிப்பதுபோல, சம்சார தாபத்திரியமென்கிற அக்கினியில் தபிக்கப்பட்ட புருஷன் இந்தச் சம்சாரதாபத்தைப் போக்குகின்ற குருநாதன் எங்கே யிருக்கிறாரோ, இதற்கு என்ன சாதனம் வேண்டுமோ வென்று தாபங்கொண்டு தேடுகின்ற தேட்டரவாகிய சித்த விருத்திக்கே, மோக்ஷவிச்சையென்று பெயர். இந்நான்கு சாதனமும் யாரிடத்திலுண்டோ, அவர்களே யதிகாரிகள். சிரவணத்திற்கு முன்பே சாதனசதுஷ்யஞ் சம்பாதித்துக்கொண்டு சிரவணத்திற்கு ஆரம்பிக்கவேண்டும். அப்படியன்றி ஞானங் கிடையாது. சற்குருவும் அனதிகாரிகளுக்கு உபதேசிக்க மாட்டார்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சூத்திரனுக்கு யாகம்பண்ணிவைத்தால் சொர்க்காதிபோகங்கள் அவனுக்கெப்படிச் சித்தியாதோ, சூத்திரனுக்கு உபநயனம் பண்ணிவைத்தால் அவனுக்குப் பிராமணத்துவ மெப்படி சித்தியாதோ, அப்படிபோல சாதனசதுஷ்டய மில்லாதவனுக்குச் சிரவணம்பண்ணிவைத்தாலவனுக்கு ஞானபலஞ் சித்தியாது.

ச-கை. ஆனாலிந்தச் சிரவணம் வீணாய்ப்போமோ வென்னில்,

உ-ம். போகாது; அதினாலொரு அதிர்ஷ்டமுண்டாம். இந்தச் சாதனசதுஷ்டயஞ் சிரவணத்திற்கு முன்னில்லாதிருந்தாலும், சிரவணகாலத்தினாலுங் குருமுகமாய் அதை விசாரித் தறியவேண்டியது சித்தம்.

ச-கை. அதிகாரிகளுக்கு இந்நான்கு சாதனமும் வேண்டுமோ? ஒரு நித்தியாநித்தியவஸ்து விவேகமாத்திரம் போதாதோ வென்னில்,

உ-ம். போதாது; உலகத்தில் சாஸ்திரிகளுக்கு நித்தியாநித்திய வஸ்து விவேகமுண்டாயிருந்தும் அவர்கள் விஷயத்தினிடத்தில் ஆசத்தியுண்டாய், காமியகன்மங்களைச் செய்கின்றபடியினா லதிகாரிகளல்ல; ஆகையா லிரண்டாஞ் சாதனமும் வேண்டும்.

ச-கை. இந்த விரண்டு சாதனந்தான் போதாதோ வென்னில்,

உ-ம். போதாது; சிலர் நித்தியாநித்திய வஸ்துவிவேகமும், இகவுத்திரார்த்த பலபோக விராகமு முண்டாயிருந்தும் சமாதிஷட்க சம்பத்தியில்லாமையினால் கோபாதிகளில் தபிக்கப்படுகிற படியினால் அதிகாரிகளல்ல. ஆகையால் மூன்றுஞ்சாதனமும் வேண்டும்.

ச-கை. இந்த மூன்றுசாதனந்தான் போதாதோ வென்னில்,

உ-ம். போதாது; சிலர் இம்மூன்றுசாதனங்க ளுண்டாயிருந்தும் கிருஷ்ணாசலத்தைக் கக்கத்தி லிடுக்கிக்கொண்டு சடைமுடி யுடையவர்களாய் யோகீஸ்வரரென்னும் பெயர் தரித்து, சம்சாரபந்தங்களைத்துறந்து விரக்தராய் உபசாந்தியுடையவர்களாய் ஒருவர்கையில் ஒருவஸ்துவும் வாங்காத

வர்களா யிருக்கிறார்கள். அவர்களும் சிரவணத்தினிடத்திற் சேராதபடியினா லதிகாரிகளல்ல. ஆகையால் நான்காஞ்சாதனமும் வேண்டும். இந்நான்குசாதனமு முடையவர்களே வேதாந்த சிரவணத்திற்கதிகாரிகள். இந்தச் சாதனசதுஷ்டய சம்பத்துக்குக் காயக வாசக இந்திரியவியாபாரமின்றி மனோவியாபார ரூபமாத்திரமானபடியினால் விஷயத்தினிடத்தில் தோஷதிருஷ்டி யுடையவர்கள் சுவயத்திற் சம்பாதித்துக்கொள்ளலாமென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல்லுகின்றது. இதிற் சம்சயமில்லை, சித்தம்.

சாதனசதுஷ்டய நிரூபகம்
முற்றிற்று.

---

நான்காவது

# உபயபதார்த்த நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளிற் பிரபஞ்ச மெத்தனை பதார்த்தமா யிருக்கிறதென்று விசாரிக்கவேண்டுமென்பதால், இந்தப் பிரபஞ்ச மெத்தனைபதார்த்தமா யிருக்கிறதென்னில்,

உத்தரம். இரண்டுபதார்த்தமா யிருக்கின்றது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம் ஆத்மாவென்றும், அனாத்மாவென்றுமாம்.

ச-கை. பிரபஞ்சத்திற் கதீதராயிருக்கப்பட்ட ஆத்மாவைப் பிரபஞ்சத்திற்குள்ளாய்ச் சொல்லலாமோவென்னில்.

உ-ம். சொல்லலாம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். பிரபஞ்சஞ் சேதனுசேதனமாய்த் தோன்றுகை யினுல் பிரபஞ்சாதீதராகிய வாத்மாவைப் பிரபஞ்சத்திற் குள்ளாப்ச் சொல்லாம்.

ச-கை. பிரபஞ்சஞ் சேதனுசேதனமாய்த் தோற்றப் பட்டாலும் பிரபஞ்சாதீதராகிய வாத்மாவைப் பிரபஞ்சத் திற்குள்ளாய்ச் சொல்லவேண்டுமோ வென்னில்,

உ-ம். சொல்லவேண்டும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம் ஆத்மாவென்றுற் சேதனனுச்சுதே. அந்தச் சேத னுகிய வாத்மா பிரபஞ்சத்துடன் கூடாவிட்டால், பிர பஞ்சம் சேதனமென்றும் அசேதனமென்றும் தோற்றுது; தோற்றுகிறபடியினுல் பிரபஞ்சாதீதராகிய ஆத்மாவைப் பிரபஞ்சந் தற்பாதியாய்ச் சொல்லலாம்.

ச-கை. அப்படியானுல் பிரபஞ்சத்திற் சேதனமேது? அசேதன மேதென்னில்,

உ-ம் நடக்கிறது, ஓடுகிறது, பறக்கிறது, குதிக்கிறது, ஊருகிறது இது முதலானதுகள் சேதனம்; பிருதிவி, அப்பு, பர்வதம், விருக்ஷங்க ளிதுமுதலானதுகள் அசேதனம்.

ச-கை பிரபஞ்சம் இப்படி யநேக பதார்த்தமாய்த் தோற்றிக்கொண்டிருக்க இரண்டு பதார்த்தமென்கிற தெப் படி யென்னில்,

உ-ம் பிரபஞ்சத்தி லாத்மாவென்று மனுத்மா வென்று மிரண்டு பதார்த்தம். இவற்றில் ஒரு அனுத்மாவே காரியரூ பமாய்ப் பரிணமித்து அநேக பதார்த்தங்களாச்சுது. இது களோடுங்கூடி யாத்மாவும் அநேகமாகவே தோற்றப்படு கின்றது.

ச-கை. அனுத்மாக்களோடே கூடி தோற்றப்படுகிற ஆத்மா எத்தனே விதமாய்த் தோற்றப்படுகிறதென்னில்,

உ-ம். சீவனென்றும், ஈஸ்வரனென்றும் இரண்டுவித மாய்த் தோற்றப்படுகின்றது.

ச-கை. இந்தச்சீவேஸ்வரர்ளெத்தனைவிதமாய்த்தோ ற்றப்படுகிறார்களென்னில்,

உ-ம். சீவனு மநேகவிதமாய்த் தோற்றப்படுகின்றது; ஈஸ்வரனும் அநேகவிதமாய்த் தோற்றப்படுகிறார்.

ச-கை. சீவர்க ளநேகவிதமாய்த் தோற்றட்டும்; ஒருவராயிருக்கிற ஈஸ்வர னெப்படி யநேகவிதமாய்த் தோற்றுகிறா ரென்னில்,

உ-ம். புண்ணிய க்ஷேத்திரங்களிலும், பட்டணங்களிலும், கிராமங்களிலும், வீட்டுவீட்டுக்கும் ஈஸ்வர னநேகவிதமாய்த் தோற்றப்படுகிறார்.

ச-கை. அங்கங்கே தோற்றப்படுகிறதெல்லாம் மண் சிலை தாறு தாம்பிராதி பிரதமைகளல்லவோ? அதுகளை ஈஸ்வரனென் றெப்படி சொல்லுகிறதென்னில்,

உ-ம். அந்த மண் சிலை தாறு தாம்பிராதிப் பிரதமைகளிடத்தில் எல்லாருக்கும் ஈஸ்வரபுத்தியேயன்றி, பிரதமைபுத்தி சர்வாத்மனாயில்லை. அல்லாமலும் அதுகளில் பிரதமைபுத்தி தோற்றி யீஸ்வரபுத்தி யில்லாவிட்டால் பூஜை அபிஷேக நைவேத்திய நிமித்தம் லட்சம் லட்சமாய்ச் செலவு செய்யார்கள். இப்படிச் செலவு செய்கிறபடியினால் பிரதமைகளிடத்திலு மீஸ்வரபுத்தி வரலாம்.

ச-கை. அனாத்மகசொரூபமான பிரதமைகளிடத்தி லீஸ்வரபுத்தி வரலாமோ வென்னில்,

உ-ம். வரலாம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். மிருதியு நிஷேதமான தேகேந்திரியாதி சங்காதமே நானென்று தேகேந்திரிய சங்கத்தில் ஆத்மபுத்திவந்

தவனுக்கு அந்தப் பிரதமைகளிடத்திலு மீஸ்வரபுத்தி வரலாம்.

ச-கை. இந்தத் தேகேந்திரியம் நிஷேதபதார்த்தமோ வென்னில்,

உ-ம். ஆம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சுக்கில சுரோணிதத்தினு லுண்டானபடியினுலும், மாமிச மலமூத்திரங்களினுல் நிருமிக்கப்பட் டிருக்கிறபடியினுலும், சற் சந்தனங்களினுல் அந்தச் சரீரத்தைச் சுகந்தப்படுத்துவோமாகில் அந்தச் சரீரபரிசத்தினு லந்தச் சற்சந்தனமும் துர்க்கந்தமாய் நிஷேதமாய்ப் போகிறபடியினுலும், சரீர நஷ்டமாய்ப் போகிறபோது அழுகி நாறிக் கறைந்துபோகையினுலும், இருக்கிறபேர்களுக்குத் திரவிய விரயமும், துக்கக் கிலேசமுங் கொடுக்கிறபடியினுலும், இந்தச் சரீரம் நிஷேதபதார்த்த மென்பதற்குச் சந்தேகமில்லை. இவ்வகைப்பட்ட தோஷங்கள் அந்தப் பிரதமைகளிடத்தி லில்லை. அதுகளிடத்திற் சமர்ப்பித்த சற்சந்தனுதிகள் யாருக்கு முபயோகமாகிறபடியினுலும், அதுகளுக்கு ஒருஹானி வந்தபோதும் மற்றென்றுக் குபயோகமாகிறபடியினுலும் அந்தப் பிரதமைகளிடத்தி லீஸ்வரபுத்தி வருகிறது உசிதமேயாம்.

ச-கை. ஆனு லொரு அனுத்ம பதார்த்தமே காரியரூபமாய்ப் பரிணமித்து அநேக பதார்த்தமாய்த் தோற்றப்படும். ஆத்மாவு மற்றொரு பதார்த்தத்தோடு கூடி யநேகமாய்த் தோற்றப்படுமென்பதற்குத் திருஷ்டாந்த முண்டோவெனில்,

உ-ம. உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். பிருதிவி யொன்றே காரியரூபமாய்ப் பரிணமித்துப் பர்வதங்கள், விருக்ஷங்கள், வனங்கள், கோபுரங்கள், பிரகாரங்கள், மண்டபங்கள், சுவர்கள் முதலான கடசாரரூபமாய்த் தோற்றப்படுகின்றது. ஆகாசமும் அதுகளிற் கூடி கடாகாசமென்றும், மடாகாசமென்றும், பர்வதாகாசமென்றும், விருக்ஷாகாசமென்றும், வனாகாசமென்றும், கோபுராகாசமென்றும், பிரகாராகாசமென்றும், சுவராகாசமென்றும் இப்படி நானாவிதாகாசங்களா யெப்படி தோற்றப்படுகின்றதோ, அப்படிபோல ஆத்மாவும் காரியரூபமாய்ப்பரிணமிக்கப்பட்ட அனாத்ம பதார்த்தத்துடன்கூடித் தேவ தத்தனென்றும், யெக்கிய தத்தனென்றும், ராமனென்றும், கிருஷ்ணனென்றும், கோபாலனென்றும், கோவிந்தனென்றும் அநேகவிதமாய்த் தோற்றப்படுகிறார். இந்தப் பிருதிவி ஆகாச திருஷ்டாந்தம் அவிச்சின்ன பக்ஷத்திற்குத் திருஷ்டாந்தமென்று சொல்லப்படும். இனிப் பிரதி பிம்ப பக்ஷ திருஷ்டாந்தமுஞ் சொல்லுகின்றோம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஒருஜலமே உபாதிவசத்தினால் சமுத்திரமென்றும், நதியென்றும், ஏரியென்றும், தடாகமென்றும், கால்வாயென்றும், நடவாவியென்றும், பாண்டஜலமென்றுஞ் சொல்லப்படும். அந்தச் சலத்தி லொருசூரியனே பிரதிபிம்பித்து அநேக விதமா யெப்படி தோற்றப்படுகிறாரோ, அப்படிபோல ஆத்மாவும் அனாத்மகாரியமாயிருக்கப்பட்ட அந்தக்கரணங்களிற் பிரதிபிம்பித்து அநேக ரூபமாய்த் தோற்றுகிறார். அப்படி தோற்றப்பட்டாலும் அனாத்மகாரியமான வந்தக்கரண தர்மங்கள் ஆத்மாவைக் காலத்திரயத்திலும் ஸ்பரிசிக்கவில்லை.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஜலத்துக் கதீதசீதளமும் ஜலவிகாரவலைவும், அந்தச் சலத்தில் பிரதிபிம்பித்த சூரியனை யெப்படி ஸ்பரிசிக்கவில்லையோ, அப்படிபோல அந்தக்கரண விகாரங்களும் அந்தக்கரணத்திற் பிரதிபிம்பித்த சிதாபாசனையே ஸ்பரிசிக்கவில்லை, அவ்வந்தக்கரணத்திற் கதிஷ்டானமான பிரத்தியேகாத்மாவை ஸ்பரிசிக்காதென்பதற்குச் சந்தேகமேயில்லை. இதுமாத்திரமல்ல; பிருதிவி விகாரங்களும் பிருதிவியின் காரிய விகாரங்களும் பிருதிவிக் காதார பூதமான ஆகாசத்தை எப்படி ஸ்பரிசிக்கவில்லையோ, அப்படிபோல அனாத்மாவான அஞ்ஞானமும் அஞ்ஞான காரியமான தேகேந்திரியாதிப் பிரபஞ்ச தர்மமும் அஞ்ஞானத்திற்கும் அஞ்ஞானகாரியத்திற்கு மாதாரபூதமான பிரத்தியேகாத்மாவை ஸ்பரிசிக்கவில்லை. இப்படி ஆத்மானாத்ம விவேகம் பண்ணி ஆத்ம சொரூபமே நானென்று ஸ்ரீசற்குரு கடாட்சத்தினால் அனாத்ம வஞ்ஞான வகங்காரத்தை வேறுபடுத்தி, வேறுபடுத்தின வனாத்ம வஞ்ஞான வகங்காரமும் காரணமன்றி காரிய மில்லாததுபோலச் சச்சிதானந்தமன்றி வேறில்லையென்று அநுபவரூபமாய்ச் சங்கையற வெவனறிகிறானோ, அவனே சீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதியாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சயமில்லை, சித்தம்.

உபயபதார்த்த நிரூபகம்
முற்றிற்று.

---

ஐந்தாவது

# துக்காரோப நிரூபகம்.

சங்கை. சுருதிபாதிகளில் துக்கசொரூபத்தை விசாரித்தறியவேண்டு மென்பதனால் பிராணிகளுக்குத் துக்கம் ஆகுந்துகமோ சுபாவிகமோ வென்னில்,

உத்தரம். ஆகுந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. சுபாவீகமென்று சொல்லக்கூடாதோ வென்னில்,

உ-ம். சொல்லக்கூடாது.

ச-கை. ஏன் சொல்லக்கூடாதென்னில்,

உ-ம். சுபாவீகமாகில் துக்கநிவிர்த்திக்கெவர்களு மெத்தனம்பண்ணும லிருக்கவேண்டும். எத்தனம் பண்ணுகிறபடியினால் சுபாவீகமென்பது கூடாது.

ச-கை. சுபாவீகமே யாகட்டும்; துக்கநிவிர்த்திக் கெத்தனமும் பண்ணட்டுமே யென்னில்,

உ-ம். சுபாவீகமென்றால் சொரூபமாகையினால் சொரூபத்துக் கானி வரும்.

ச-கை. வந்தால் வரட்டுமேயென்னில்,

உ-ம். துக்கநிவிர்த்தியானவர்க ளொருவரு மில்லாமற் போகவேண்டும். இருக்கிறபடியால் துக்கஞ் சுபாவீக மென்பது கூடாது.

ச-கை. துக்கம் சுபாவீகமானுற் போகாதோவென்னில்,

உ-ம். போகாது. திருஷ்டாந்தத்தில் வேப்பிலைக்குக் கசப்பு சுபாவம். கசப்புபோய் வேப்பிலை யுண்டென்பது கூடாது. ஏனெனில் கசப்பே வடிவமா யிருக்கையினால் கூடாது. அதுபோல ஆத்மாவினிடத்திலுந் துக்கஞ் சுபாவீகமானுற் போகாது. ஆதலால் ஆத்மாவுக்குத் துக்கம் சுபாவீகமென்பது கூடாது. ஆகுந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. சுபாவீகமேயாகட்டுந் துக்கநிவிர்த்தியும் வரட்டுமே எனில்,

உ-ம். அப்படிகூடாது.

ச-கை. அக்கினிக்கு உஷ்ணம் சுபாவம். சுபாவமான உஷ்ணத்திற்கு மணிமந்திரங்களால் நிவிர்த்தியும், சயித்தியத்துக் கபிவிர்த்தியுங் கண்டோம்; பின்னும் ஜலத்திற்கு சயித்தியம் சுபாவம். சுபாவமான சயித்தியத்திற்கு அக்கினி கூட்டரவினுல் நிவிர்த்தியும், உஷ்ணத்திற்கு அபிவிர்த்தியுங் கண்டோம். அதுபோல ஆத்மாவுக்குத் துக்கஞ் சுபாவமானுலும் உத்கிருஷ்ட கர்மவுபாசனைகளால் துக்க நிவிர்த்தியும், சுகத்திற் கபிவிர்த்தியும் வருமென்று சொல்லப்படாதோ வென்னில்,

உ-ம். துக்கத்திற்குத் தற்காலம் உபசமனமேயல்லாமல் அத்தியந்த நிவிர்த்திகூடாது. அக்கினியாதிகளுக்கு மணிமந்திரங்களினுல் தற்காலம் உபசமனமாயிருந்து காலந்தரத்தில் உஷ்ணுதிகளுக் கெப்படி யபிவிர்த்தியுண்டாகின்றதோ, அப்படிபோல ஆத்மாவுக்கு உத்கிருஷ்ட கர்மவுபாசனைகளினுல் பலரூபமான சுகத்திற்கு நாசம்வரும்போது திரும்பவும் துக்கத்துக் கபிவிர்த்தி யுண்டாம். அத்தியந்த நிவிர்த்தியேயில்லை. இது மாத்திரமல்ல; மோக்ஷத்திற்கு உற்பத்தியும், அனித்தியத்துவமும் வரும்.

ச-கை. வந்தால் வரட்டுமேயெனில்,

உ-ம். அந்த அர்த்த மெவர்களுக்குஞ் சம்மதமாகாது. ஆத்மா வானந்த சொரூபனென்று சொல்லப்பட்ட சுருதி ஸ்மிருதி இதிகாச புராண ஆகமாதிகளுக்கும் விருத்தம் வரும். இது மாத்திரமல்ல; சுழுத்தி யவஸ்தையிலும் சகல பிராணிகளுக்கும் நான் துக்கத்தை யடைந்திருந்தேனென் றனுபவமில்லாமையினுலும், சுகமாயிருந்தேனென் றனுபவமிருக்கிறபடியினுலும் ஆத்மாவுக்குத் துக்கஞ் சுபாவீகமென் றங்கீகரிக்கக்கூடாது. அப்படி யங்கீகரிப்போமாகில் இந்த சுவானுபவத்திற்கு விருத்தம் வரும். ஆதலால் ஆத்மாவுக்குத் துக்கஞ் சுபாவீகமென்பது கூடாது.

ச-கை. பின்னை யென்னவென்னில்,

உ-ம். துக்கம் ஆருந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. துக்கமெதினால் வந்ததென்னில்,

உ-ம். சரீர முண்டானபடியினால் வந்தது. ஆகையா லெங்கேயெங்கே சரீரமுண்டோ, அங்கேயங்கே துக்க வியாப்தி யுண்டு

ச-கை. இப்படிச் சொல்லலாமா? ராஜப்பிரபுக்கள் சுகமே யனுபவித்துக்கொண்டிருக்கச் சரீரமுண்டான விட ங்கடோறுந் துக்கமுண்டென் றெப்படி சொல்லுகிறதென் னில்,

உ-ம். சொல்லலாம். ராஜப்பிரபுக்களிடத்திலுந் துக் கமே யனுபவமாகக் காணப்படுகிறது.

ச-கை. அந்தத் துக்கமே தென்னில்,

உ-ம். ராஜப்பிரபுக்களுக்குத் தேகத்தினிடத்தில் ரோக த்தினாலும், சத்துருபலத்தினாலும், பிள்ளையில்லாமையினா லும், பிள்ளையுண்டாயிருந்தும் வித்தை புத்தி வரவில்லை யென்பதினாலும், சொன்னசொற் கேளாமையினாலும், பிரி யமானபிள்ளை இறந்து போவதினாலும், ராஜ்யத்தில் மழை யில்லாமையினாலும், அதிக மழையினாலும், ஸ்திரிகளொரு த்தருக்கொருத்தர் செய்கிற விருத்தத்தினாலும், முதுமை யினாலும், நாம் நசித்துப்போவோமென்கிறதினாலும், இது முதலிய வநேகதுக்கங்க ளிருக்கிறபடியினால் அவர்களைச் சுகசொரூபரென்பது மோகத்தினாலன்றி வேறல்ல.

ச-கை. மோகத்தினால் துக்கம் சுகமாய்த் தோற்றுமோ வென்னில்,

உ-ம். தோற்றும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். மூட்டை யெடுக்கிறவனுக்குக் கூலிகிடைத்தால் மூட்டை சுமக்கிற துக்க மவனுக்கில்லை. போயிகள் தங்கள் துரைக்குப் பிரயாணமுண்டானால் சந்தோஷிக்கிறார்கள். இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள். வேலை செய்கிறவர்களுக்கு வேலையகப்பட்டால் சந்தோஷிக்கிறார்கள். இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள். வழிப்பிரயாணக்காரருக்குப் பிரயாணமுண்டானால் சந்தோஷப்படுகிறார்கள். இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள். மாவுத்தர்களுக்குப் புதிதாய் யானையகப்பட்டால் சந்தோஷிக்கிறார்கள். இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள். இது முதலான துக்கம் இவர்களுக்கெப்படி சுகமாய்த் தோற்றுகின்றதோ, அப்படிபோல ராஜப்பிரபுக்களுக்குந் துக்கமே சுகமாய்த் தோற்றுகின்றது. மோகத்தினா லுண்டாகப்பட்ட துக்கமே சுகமாய்த் தோற்றப்பட்ட ராஜப்பிரபுக்களிடத்திற் சேர்ந்தபேருக்குந் துக்கவியாப்தியைக் குறித்துக் கேட்கவே வேண்டியதில்லை.

ச-கை. ஆனால் விவேகிகளுக்குத் துக்கமுண்டோ வென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை விவேகியென்றால் சரீரமுண்டானவனோ இல்லாதவனோ வென்னில்,

உ-ம். சரீரமில்லாதவனுக்கு விவேகியென்ற விவகாரங் கூடாது. சரீரமுள்ளவனே விவேகியென்று சொல்ல வேண்டும். ஆதலால் விவேகிக்குந் துக்கமுண்டு.

ச-கை. எப்படி யென்னில்,

உ-ம். பசியும் தாகமும் சீதோஷ்ணமுதலிய தொந்த துக்கங்களும், வயிற்றுநோய், தலைநோய், புலி பாம்பாதிகளினால் வரப்பட்ட பயம் கிலேசம் நடுக்கமுதலானது உண்டாயிருக்கையினால் விவேகிக்குந் துக்கமுண்டு.

ச-கை. விவேகிக்கும், அவிவேகிக்கும் பேதமேதென்னில்,

உ-ம். பேதமுண்டு. விவேகியானவன் சர்வதுக்கங்களும் அந்தக்கரண சுபாவமென்றும், சாக்ஷியான தனக்கில்லையென்றும் விவகரிப்பன். அவிவேகியானவன் சர்வதுக்கங்களையுந் தன்னிடத்திற் சுமத்திக்கொண்டு, புத்திரன் சுகமாயிருந்தால் தான் சுகமாகவும், புத்திரனிறந்தால் தானிறந்துபோகிறதாகவும் நினைத்து தாபாக்கினியினால் தபிக்கப்படுவன். இந்தவகையினால் விவேகிக்கும் அவிவேகிக்கும் பேதமில்லையென்பது கூடாது.

ச-கை. ஆனால் தேவர்களுக்குந் துக்கமுண்டோ இல்லையோவெனில்,

உ-ம. உண்டு.

ச-கை தேவர்களுக்குஞ் சரீரமுண்டோ? இல்லையோ? சரீரமுண்டென்று எதினா லறியப்படுகிறதென்னில்,

உ-ம் சாஸ்திரங்களா லறியப்படுகின்றது.

ச-கை. ஆனால் அவர்களுக்குந் துக்கமுண்டானதெப்படியென்னில்,

உ-ம். அந்நியோந்நிய வுயித்தியத்தினாலும், குரூரமான அந்நியோந்நிய சாபங்களினாலும், பலாபலத்தினால் ஒருவர் ஐசுவரிய மொருவ ரபகரிக்கிறபடியினாலும், ஒருவர் பெண்சாதியை யொருவ ரபகரிக்கிறபடியினாலும், ராக்ஷதர் பட்டணத்தைப் பிடித்துக்கொண்டு துரத்துகிறபடியினாலும், ராக்ஷதர் பிடித்து விலங்குபூட்டி அடிமைத்தனஞ் செய்விக்கிறபடியினாலும், புண்ணியகர்ம க்ஷயத்தினால் நாசம் வருமென்கிற கிலேசத்தினாலும், இதுமுதலிய துக்கங்கள் தேவர்களுக்குமுண்டென்று சுருதி ஸ்மிருதி இதிகாச புராணாகமங்கள் சொல்லுகின்றன. இதிற் சம்சயமில்லை.

ச-கை. தேவர்களுக்குந் துக்க முண்டாமேயானால் அவர்கள் நமக்கெப்படி யுபாசகராவார்கள்? நமக்கிஷ்ட சித்திகளை யெப்படி கொடுப்பார்களென்னில்,

உ-ம். கொடுப்பார்கள். ராஜப்பிரபுக்கள் தாங்கள் துக்கமுண்டானவர்களானாலும் ஐசுவரிய சம்பத்தினால் நமக்கு உபாசகராயிருந்து இஷ்டபலன்களை யெப்படி கொடுக்கிறார்களோ, அப்படிபோலத் தேவர்களுந் தாங்கள் துக்கிகளானாலும் யோகாயிசுவரியாதி சம்பத்தினால் நமக்கு உபாசகரும் இஷ்டசித்திகளைக் கொடுக்கின்றவருமாவார்கள்.

ச-கை. தேவர்க ளானந்தசொரூபரென்று சாஸ்திரங்களிற் சொல்லப்படுகின்றனவே; அதற்குத் தாற்பரிய மேதென்னில்,

உ-ம். விவேகியானவன் சரீரத்தில் கூடியிருக்கிறபடியினால் துக்க முண்டாயிருந்தாலும் துக்கம் அந்தக்கரண சுபாவமென் றெப்படி காண்கிறானோ, அப்படிபோல் உத்கிருஷ்டமான தேவர்களும் துக்கத்தை அந்தக்கரண சுபாவமாய்க் காண்கிறார்கள். ஆதலா லவர்களை யானந்தசொரூபரென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன.

ச-கை. தேவர்களுக்குந் துக்கமுண்டென்கிற சாஸ்திரங்களுக்குத் தாற்பரிய மேதெனில்,

உ-ம். எங்கேயெங்கே சரீரமுண்டோ அங்கேயங்கே துக்கமுண்டு. ஆதலா லிரணியகர்ப்ப சரீரமட்டுந் துக்கமுண்டு. ஆனபடியினால் சரீரமுத்தியர்த்தமா யெத்தனஞ் செய்யக்கூடாது; அசரீர முத்திக்கே எத்தனஞ் செய்ய வேண்டுமென் றந்தச் சாஸ்திரங்களுக்குத் தாற்பரியம்.

ச-கை சரீரமுத்திபோல அசரீரமுத்தியென்றொன் றுண்டானாலல்லவோ அசரீரமுத்தி நிமித்த மெத்தனம்

பண்ணவேண்டும். அசரீரமுத்தியென் றொன் றுண்டோ வென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. சரீரமுத்தியுண்டென்றும், அசரீரமுத்தி யில்லையென்றும் பிரமாணமுண்டோ வென்னில்,

உ-ம். உண்டு. சரீரமுத்தியுடையபேர் நக்ஷத்திரரூபமாய்ப் பிரத்தியக்ஷமாய் தெரிகிறாப்போல் அசரீரமுத்தியுடையபேர் தெரியவில்லை. அன்றியும் யோகீஸ்வராள் யோகமகிமையினால் உலகாந்தரங்களுக்குப்போய் சரீரமுத்தியுடையவர்களைக் கண்டுவந்தார்களென்று சாஸ்திரங்களிற் சொல்லுகின்றபடி, அசரீரமுத்தியுடையவர்களைக் கண்டுவந்தோமென்று சொல்லாதபடியினாலும், சரீரமுத்தியுள்ளவர்கள் நான் அநேக காலமிருந்து வந்தேனென்று சாஸ்திரங்களிற் சொன்னதுபோல, அசரீரமுத்தி யுள்ளவர்கள் நான் அநேககாலம் அசரீரமுத்தியாயிருந்து வந்தேனென்று சாஸ்திரங்களிற் சொல்லாமையினாலும் சரீரமுத்தியுண்டு; அசரீரமுத்தி யில்லையென்று சொல்லலாம். ஆனாலு மப்படி சொல்லக்கூடாது.

ச-கை. அதெப்படி யென்னில்,

உ-ம். சுழுத்திசுகம் சமஸ்தபிராணிகளுக்கு மெப்படி பிரத்தியக்ஷமோ, அதுபோல சரீரமுத்தியும் பிரத்தியக்ஷம்.

ச-கை. சுழுத்தி சுகந்தான் பிரத்தியக்ஷம்; முத்திசுகமும் பிரத்தியக்ஷமாகுமோ வென்னில்,

உ-ம். அத்துவித சுகசொரூபமா யிருக்கப்பட்டது சர்வசுழுத்தியிலும் சமனாயிருக்கிறபடியினால், உனக்குச் சுழுத்திசுகம் பிரத்தியக்ஷமாகும்போது முத்திசுகமும் பிரத்தியக்ஷமாகும்.

ச-கை. சுகப்பிரத்தியக்ஷம் சுழுத்தியிற் சமனு யிருக்கிறபடியினல், சுழுத்தியே முத்தியென்று சொல்லாமோ வென்னில்,

உ-ம். சுழுத்தியினிடத்தி லஞ்ஞானமும், உற்பத்திக்கு ஸ்தானமுமாயிருக்கிறபடியினுலும், முத்தியி லஞ்ஞானமும் உற்பத்திக்குக் காரணபீசமு மில்லாதபடியினுலும் சுழுத்தியே முத்தியென்பது கூடாது. ஆகையால் சுழுத்தி சுகத்தைப்போல முத்திசுகமும் பிரத்தியக்ஷமானபடியினல் சரீரமுத்தியைப் பார்க்கிலும் அசரீரமுத்தியே பிரத்தியக்ஷம். யோகியானவன் அசரீரமுத்தனைக் கண்டு வந்து சொல்லாதபடியினுலும், அசரீரமுத்தியானவன் நான் அசரீர முத்தியாயிருந்து வந்தேனென்று சொல்லாதபடியினுலும், அசரீரமுத்தி யுண்டென்று சொல்லப்பட்டது. சரீரமுத்தி யுண்டென்றதில் எந்த நக்ஷத்திராதிகள் பிரமாணமாய்ச் சொல்லப்படுகின்றதோ, அதுகளெல்லாஞ் சொர்க்கலோக விஷயமாய் அநித்தியமாய் பிரத்தியக்ஷமாய்க் கண்டபடியினுலும், இதுபோல பிர்ம்மலோகாதிகள் விஷயமாகாதபடியினுலும் இந்த நக்ஷத்திரங்கள் சரீரமுத்தி யுண்டென்றதில் பிரம்மாணமாகாது; சாஸ்திரமாத்திரமே பிரமாணம். சாஸ்திரமன்றிப் பிரமாணுந்தர மில்லாமையினுலும், அசரீரமுத்தி யுண்டென்றதில் சாஸ்திர யுத்தி யனுபவ மொத்திருக்கிறபடியினுலும் அசரீரமுத்தி நிமித்தமே யெத்தனம் பண்ணவேண்டும். சரீரமுத்தி நிமித்த மெத்தனம் பண்ணவேண்டியதில்லை. அப்படி எத்தனித்தாலும் துக்கம் போகாதென்று சாஸ்திரங்களாலும் யுத்தியினுலுந் தெரிகின்றது.

ச-கை. அதற்கு அனுபவ மேதென்னில்,

உ-ம். சுழுத்தியிற் சரீரமில்லாதபடியால் துக்கமில்லை; சாக்கிர சொப்பனத்தில் சரீரமிருக்கிறபடியால் துக்க மனு

பவிக்கப் படுகின்றது. ஆதலால் சரீர மெங்கேயுண்டோ, அங்கே யெல்லாந் துக்கமுண்டு; சரீரமெங்கே யில்லையோ, அங்கேதுக்கமில்லையென்று அன்வய வெதிரேக வியாபகத்தினால் சித்தம். இப்படியே ஆத்மாவுக்கு துக்கம் சரீரத்தினாலேயே வருகின்றபடியால், துக்கம் சுபாவீகமென்பது கூடாது. ஆகுந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. ஆனால் இந்தச்சரீரம் எதினால்வருகிறதென்னில்,

உ-ம். கர்மத்தோடுங்கூடிய பஞ்சீகிருத பஞ்ச மகா பூதங்களினால் வருவதாய்த் தோற்றுகின்றது.

ச-கை. அப்படியேன் சொல்லவேண்டும்? கேவலம் பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களினாலேயே சரீரம் வருகிறதென்று சொல்லக்கூடாதோ வென்னில்,

உ-ம். சொல்லக்கூடாது. எங்கும் பஞ்சீகிருத பஞ்ச மகாபூதங்களிருக்கிறபடியினால் அங்கங்கே சரீரம் பிறக்கவேண்டும். அப்படி யில்லாதபடியினால், கேவலம் பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களினால் சரீரம் வருமென்பது கூடாது.

ச-கை. அப்படிச் சொல்லவில்லை, பஞ்சமகாபூதங்கள் சுக்கில சுரோணிதாகாரமாய் எங்கே பரிணமிக்கின்றதோ, அங்கே சரீரம் பிறக்குமென்று சொல்லுவோமேயென்னில்,

உ-ம். சொல்லக்கூடாது. நித்தியமும் ஸ்திரீ புருஷாளுக்குச் சையோகத்தினால் சுக்கில சுரோணிதம் பிறக்கின்றது. அங்கே சரீரமுண்டாகவில்லை. ஆகையாலப்படியுஞ் சொல்லக்கூடாது.

ச-கை. அங்கே சுக்கிலசுரோணித மில்லையென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். அப்படியானல் ஸ்திரீ புருஷாளுக்கு ரதியில்லாமற் போகவேண்டும். ஆகையால் சையோகமில்லையென்பது கூடாது.

ச-கை. ஆனல் சுக்கில சுரோணிதமே தேசகாலங்களையபேக்ஷித்து சரீராகாரமாகிறதென்று சொல்லுவோமேயென்னில்,

உ-ம். அப்படியுஞ் சொல்லக்கூடாது. சொன்னல் பிராணிகளுக்கு வைசித்திரியமில்லாமற் போகவேண்டும்.

ச-கை. ஆனல் பிராணிகளுக்கு வைசித்திரியமுண்டோவென்னில்,

உ-ம். ஒரு சரீரத்தைப்போலொருசரீர மில்லாதபடியினு லுண்டு.

ச-கை. ஆனல், வைசித்திரியம் தேசகாலங்களினல் வருகிறதென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். தேசகாலங்கள் சர்வப்பிராணிகளுக்குஞ் சாதாரண காரணமாயிருக்கிறபடியினல், தேச காலங்களினல் ஜகத்து வைசித்திரியம் வருகிறதென்பது கூடாது.

ச-கை. தேச காலங்களுஞ் சாதாரண காரணமாகட்டும்; அது தன்னினல் ஜகத்து வைசித்திரியமும் வரட்டுமேயென்னில்,

உ-ம். சாதாரண காரணமான தேச காலங்களால் கடாதி வைசித்திரிய மில்லாத படியினல் தேச காலங்களால் வரு மென்பது கூடாது.

ச-கை. எதை யபேக்ஷித்துக் கடாதி வைசித்திரியம் வருகிறதெனில்,

உ-ம். சாதாரண காரணமான குலாலாதி வியாபார வைசித்திரியத்தினல் வந்ததென்றே தோற்றுகின்றது. அது

போலப் பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களும் சுக்கில சுரோ ணிதாகாரமாகப் பரிணமித்துச் சாதாரண காரணமான தேச காலங்களை யபேக்ஷித்திருந்தபோதும் அசாதாரண காரணமான காரணாந்தரத்தை யபேக்ஷித்து விசித்திர சரீ ராதியாகாரமாகப் பரிணமிக்கப் படுகின்றதென்றே சொல் லவேண்டும்.

ச-கை. அந்தக் காரணாந்தர மாவதே தென்னில்,

உ-ம். கர்மமே யாகவேண்டும்.

ச-கை. கர்மத்துக் கிவ்வகைப்பட்ட சாமர்த்தியமிருக் கிறபடியினால், கேவலம் கர்மத்தினாலேயே சரீரம்வந்த தென்று சொல்லுவோமேயென்னில்,

உ-ம். கர்மம் நிராதாரமாய் ரூபமில்லாமையினாலும், அசைவுமாத்திர மாகையினாலும், திருஷ்ணாவஸ்தையா யிருக்கிறபடியினாலும் அதனால் சரீரம் வந்ததென்பது கூடாது.

ச-கை. மற்றெப்படி யென்னில்,

உ-ம். கர்மத்துடன்கூடிய பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களினாலேயே சரீரம் வந்ததென்று சொல்லவேண்டும். ஆகையினால் இரண்டு காரணத்தினால் சரீரம் வந்ததென்றே சொல்லப்படும்.

ச-கை. இரண்டுகாரணமாவ தேதென்னில்,

உ-ம். கர்மமும் பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களுமாம். இவற்றில் நிமித்தகாரணமான கர்ம வைசித்திரியத்தினா லேயே சரீர வைசித்திரியமும் வருகின்றது.

ச-கை. இதற்குத் திருஷ்டாந்தமுண்டோ வென்னில்,

உ-ம். உண்டு. கடமுண்டாக்குமிடத்தில் கேவல முபா தானகாரணமான மண்ணினால் காரிய மெப்படி பிறக்கவி ல்லையோ, கேவல நிமித்தகாரணமான குலால வியாபாரித்தி

னுல் காரியமெப்படி பிறக்கவில்லையோ, குலால வியாபார மானது மண்ணை யாசரித்தபடியினுல் காரியமெப்படி பிறக்கின்றதோ, மண் ஏகரூபமாயிருந்தாலும் குலால வியாபாரத்தினுல் காரியத்தில் எப்படி வைசித்திரியம் பிறக்கின்றதோ, அப்படிபோல கேவலம் பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களினுற் சரீரமுண்டாகவில்லை; கேவலம் கர்மத்தினுலுஞ் சரீரமுண்டாகவில்லை. கர்மத்துடன் கூடிய பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களினுலேயே சரீரமுண்டாகிறபடியால், கர்ம வைசித்திரியத்தினுலேயே சரீரவைசித்திரியம் வருமென்றறிவது சித்தம். உபாதான காரணமான மண்ணிருந்தபோதும் நிமித்த காரணமான குலால வியாபாரமில்லாவிட்டால் கடமெப்படி பிறக்கவில்லையோ, அதுபோல, உபாதான காரணமான ஈஸ்வர சிருட்டியான பஞ்ச பூதங்களும் அதின் காரியமான பவுதீகப் பிரபஞ்சமும் எப்படி நிலைபெற்றிருந்தாலும் அத்துவிதமான ஆத்மாவே நானென்கிற ஞானத்தினுல் யாருக்குக் கர்மம் நசிக்கின்றதோ அவர்களுக்குச் சரீரம் வராது. பிரபஞ்சம் காலத்திரயத்திலுமில்லாமலிருந்துந் தோறறுகின்றது. தோற்றினுலுமில்லையென்கிற நிச்சயம் யாருக்கு வருகின்றதோ, அவர்களுக்குச் சரீரம் வராதென்பது அன்வய வெதிரேகத்தினுல் சுதசித்தம்.

ச-கை. அன்வய வெதிரேகமாவ தேதென்னில்,

உ-ம். கர்ம முண்டானுற் சரீர முண்டென்கின்றது அன்வயம்; கர்மமில்லாவிட்டாற் சரீர மில்லையென்கிறது வெதிரேகம்.

ச-கை. அது எங்கே யனுபவிக்கப்படுகின்ற தென்னில்,

உ-ம். சாக்கிர சொப்பனத்தில் ஸ்தூல சூட்சுமபோகப் பிரதானமான கர்மமிருக்கிறபடியினுல் சரீரமிருக்கின்றது.

சுழுத்தியில் ஸ்தூல சூக்ஷுமப் பிரதானமான கர்மமில்லா தபடியினுல் சரீரமு மில்லை. கர்மமுண்டானுல் சரீரமுண்டு; கர்மமில்லாவிட்டாற் சரீரமில்லை யென்பது தெளிந்து ஸ்ரீசற்குருவினுல் சுருதியுத்தி யனுபவமாய்ச் சங்கைக்யில் லாம லெவன் அறிகிருனே அவனே சீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யாதிகளிற் சொல்லுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

துக்காரோப நிருபகம்
முற்றிற்று.

---

ஆறவது.

# கர்மத்திரய நிருபகம்.

சு-கை. சுருதியாதிகளிற் கர்மத்திரயங்களை விசாரித் தறியவேண்டு மென்பதால் கர்ம மெத்தனைவிதமா யிருக்கிற தென்னில்,

உ-ம். புண்ணியமென்றும், பாவமென்றும், மிசிரமென் றும் மூன்றுவிதம். இதில் உத்கிருஷ்ட மத்திம சாமானிய மென ஒவ்வொன்றும் மூன்றுவிதமா யிருக்கின்றது.

சு-கை. புண்ணிய வுத்கிருஷ்டபல மேதென்னில்,

உ-ம். இரணியகர்ப்பாதி சரீரப்பிராப்தி.

சு-கை. புண்ணிய மத்திமபல மேதென்னில்,

உ-ம். தேவேந்திராதி சரீரப்பிராப்தி.

சு-கை. புண்ணிய சாமானியபல மேதென்னில்,

உ-ம். யக்ஷ ராக்ஷச கின்னர கிம்புருஷ பிசாசாதி சரீரப்பிராப்தி.

ச-கை. பாப வுத்கிருஷ்டபல மேதென்னில்,

உ-ம். பிராணிகளுக்குத் துக்கத்தை யுண்டாக்கப்பட்ட தேள், பாம்பு, கொசுகு, மூடு, புலி, கரடி முதலிய சரீரப் பிராப்தி.

ச-கை. பாப மத்திமபல மேதென்னில்,

உ-ம். புளியமரம், மாமரம், பலாமரம், தென்னமரம், எருமை, பருந்து முதலிய சரீரப்பிராப்தி.

ச-கை. பாப சாமானியபல மேதென்னில்,

உ-ம். பசு, யானை, குதிரை, அரசு, துளசி முதலிய சரீரப்பிராப்தி.

ச-கை. மிச்ரவுத்கிருஷ்டபல மேதென்னில்,

உ-ம். நிஷ்காம புண்ணியகர்மபலத்தினால் சித்தசுத்தி வந்து, சித்தசுத்தித் துவாரா சாதன சதுஷ்டய சம்பத்தி வந்து, சாதன சதுஷ்டய சம்பத்தித்துவாரா சற்குருலாப முண்டாகிச் சற்குரு லாபத்துவாரா சிரவணமனன நிதித் தியாசன முண்டாகிச் சிரவணமனன நிதித்தியாசனத்து வாரா அபரோக்ஷஞானம்வந்து, அபரோக்ஷஞானத்துவா ரா சீவன்முத்தி சுகத்தைப் பெறப்பட்ட சரீரப்பிராப்தி.

ச-கை. மிச்ர மத்திமபல மேதென்னில்,

உ-ம். சுய ஆசிரமத்திற்கு உசிதமான காமியகர்மயோக் கியமான சரீரப்பிராப்தி.

ச-கை. மிச்ர சாமானியபல மேதென்னில்,

உ-ம். சண்டாள பாண்டகுஷ்டபெருவியாதி முதலிய சரீரப்பிராப்தி. ஆகையால் விவேகியானவன் கர்மபல தார தன்மியங்களை விசாரித் துணர்ந்து மிச்ரவுத்கிருஷ்ட கர் மத்திற்கே யெத்தனம்பண்ணவேண்டும்.

ச-கை. இந்தப் புண்ணிய பாப மிச்ரமான மூன்று கர்மமூ மெதினாற் செய்யப்படுகின்ற தென்னில்,

உ-ம். திரிவிதகரணங்களாற் செய்யப்படுகின்றது.

ச-கை. சமஸ்தபிராணிகளும் நானிந்தக் கர்மம் பண்ணினேனென்று சொல்லுகிறார்கள். அவர்க ளனுபவத்தினால் ஆத்மசுபாவமாய்க் கர்த்ருத்வந் தோற்றுகிறபடியினால் கர்த்ருத்துவமும் ஆத்மசுபாவமாகச் சொல்லலாமே யென்னில்,

உ-ம். ஆத்மா நிர்விகாரியாகையால் கர்த்ருத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை. ஆனாலிந்தக் கர்த்ருத்வம் ஆத்மாவிடத்திற்றோற்றுகின்றதே; இதற்குக் கதியென்னவென்னில்,

உ-ம். அந்நிய சுபாவமான கர்த்ருத்வம் ஆத்மாவிடத்திற் றோற்றுகிறபடியினால், ஆகுந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. அந்நிய சுபாவமான கர்த்ருத்வந் தோற்றுகிதென்றேன் சொல்லவேண்டும்? ஆத்மாவுக்குச் சுபாவமென்றே சொல்லுவோமென்னில்,

உ-ம். அப்படி சொல்லக்கூடாது. ஏனெனில் கர்த்ருத்வம் போகிறநிமித்தம் எவர்களு மெத்தனஞ்செய்யாமலிருக்கவேண்டும். முமுக்ஷுக்க ளெத்தனஞ்செய்கிறபடியினால் சுபாவமென்பது கூடாது.

ச-கை. கர்த்ருத்வமுஞ் சுபாவமாகட்டும்; போகிற நிமித்தம் எத்தனமும் பண்ணட்டுமேயென்னில்,

உ-ம். சுபாவமென்றால் சொரூபமாகையினால் சொரூப நாசத்திற்கெத்தனம் பண்ணுகிறதாயிருக்கும். சொரூப நாசமாக வெவரு மெத்தனம் பண்ணார்கள். ஆதலால் சுபாவீக கர்த்ருத்வ நிவிர்த்தியத்தமா யெத்தனிக்கிறார்களென்று சொல்லக்கூடாது. சுபாவமான கர்த்ருத்வுத்துக்கு நிவிர்த்தி வருகிறபோது சொரூபமே நாசமாய்ப்போகிறபடி

யினுல் கர்த்ருத்வம் விட்டு அகர்த்தாவானவ னுருமில்லாமற் போகவேண்டும். ஆதலால் கர்த்ருத்வஞ் சுபாவமென்று சொல்லக்கூடாது.

ச-ங்கை: ஆனுல் கர்த்ருத்வமுஞ் சுபாவ மாகட்டும் நிவிர்த்தியும் வரட்டுமேயென்னில்,

உ-ம். அப்படி கூடாது.

ச-கை. அக்கினிக்கு உஷ்ணத்வஞ் சுபாவம்; சுபாவ மான உஷ்ணத்திற்கு மணிமந்திர அவுஷதத்தினு லெப்படி நிவிர்த்தி வருகின்றதோ, அப்படிபோல ஆத்மாவுக்குக் கர்த்ருவஞ் சுபாவமென்றும், அஃது உத்கிருஷ்டமான கர்மோபாசனையினுல்நிவிர்த்தியாமென்றும் சொல்லுவோமேயென்னில்,

உ-ம். ஆனுல் அக்கினிக்கு மணிமந்திராதிகளால் ஸ்தம்பித்த உஷ்ணம் காலாந்தரத்தி லெப்படி யபிவிர்த்தியாகின்றதோ, அதுபோல ஆத்மாவுக்கு நிவிர்த்தியானகர்த்ருத்வமும் உத்கிருஷ்ட கர்மவுபாசனுபலத்துக்கு நாசம்வருகிறபடியினுல், திரும்பவு மபிவிர்த்தியாம். அதனுல் கர்த்ருத்வ நிவிர்த்திரூபமான முத்திக்கு ஜன்னியத்துவமும், அநித்தியத்துவமும் வரும. ஆத்மா அகர்த்தாவென்று சொல்லப்பட்ட சுருதிகளுக்கும் பேதம் வரும். சுழுத்தியிலும் ஆத்மாவிருக்கிறபடியினுல் அவ்விடத்திலுங் கர்த்ருத்வந் தோற்றவேண்டும். தோற்ருமையினுல் சுபாவமென்பது கூடாது.

ச-ங்கை. சுழுத்தியி லாத்மாவுக்குக் கர்த்ருத்வம் ஏன் தோற்றவேண்டும்? வேண்டியதில்லை: ஏனெனில் தச்சர் முதலானவர்களுக்குச் சுய்காரியாதிகளைக்குறித்துக் கர்த்ருத்வமிருந்தாலும் ஸ்நான போஜன சயன விவகார காலங்களில் வாச்சிமுதலிய கரண சையோகமில்லாமையினு லவர்களுக்கெப்படி கர்த்ருத்வந் தோற்றவில்லையோ, வாச்சிமுதலிய

கரண சையோகம் வந்தபோது கர்த்ருத்வமெப்படி தோற்றுகின்றதோ, அதுபோல ஆத்மாவுக்குச் சுழுத்தியில் கர்த்ருத்வ மிருந்தாலும் திரிவிதகரண சையோகமில்லாமையினால் கர்த்ருத்வந் தோற்றவில்லை. சாக்கிரசொப்பனத்திலிருக்கிறபடியினால் கர்த்ருத்வந் தோற்றுகிறதென்று சொல்லுவோமே யெனில்,

உ-ம். ஒன்றுந் தோற்றரவற்ற சுழுத்தியவத்தையிலும் கரண சையோகமிருக்கிறபடியினால் அங்கேயுங் கர்த்ருத்வந் தோற்றவேண்டும். தோற்றாமையினால் சுபாவ மென்பது கூடாது. ஆகுந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. ஆகுந்துகமென்ப தேதென்னில்,

உ-ம். அந்நியசுபாவமான தர்மம் தன் சுபாவமாகத் தோற்றுகிறது ஆகுந்துகமாம்.

ச-கை. அப்படி தோற்றுமாவென்னில்,

உ-ம். தோற்றும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஓடத்திற்போகிற புருஷனுக்கு அஞ்ஞானத்தினால் ஓடத்தின் சஞ்சல சுபாவமாகிற வோட்டம் ஸ்திர சுபாவமாகிற விருக்ஷத்தினிடத்திலும், கரையினுடைய விருக்ஷ சுபாவமான நிலை யோட்த்தினிடத்து மெப்படி தோற்றுகின்றதோ, அப்படிபோல, திரிவிதகரண சுபாவமான கர்த்ருத்வம் அஞ்ஞானத்தினால் ஆத்மசுபாவமாகவும், ஆத்மசுபாவமான அகர்த்ருத்வம் திரிவிதகரண சுபாவமாகவுந் தோற்றுகின்றது. இன்னமும் சந்திரனைப் பார்க்கப்பட்ட புருஷனுக்கு மேகசஞ்சலமான சுபாவம் சந்திர சுபாவமாகவும், சந்திரசுபாவமான நிலை மேகசுபாவமாகவும் எப்படி தோற்றுகின்றதோ, அப்படிபோல திரிவிதகரண சுபாவமான கர்த்ருத்வமும் ஆத்மசுபாவமாய்த் தோற்று

கின்றது. ஆதலால் கர்த்ருத்வம் ஆத்மாவுக்கு ஆகுந்துக மென்றே சொல்லப்படும்.

ச-கை. ஆனுல் திரிவிதகரணங்களுக்குங் கர்த்ருத்வ மிருந்தாலல்லவோ ஆத்மாவினிடத்திற் றேற்றுமென்று சொல்லலாம். அவை அசேதனமான ஜடமாகையினுல் அவைகளுக்குக் கர்த்ருத்வங் கூடாது. உலகத்திற் சேதன மானவர்களுக்கே கரண வபேட்சையாகக் கர்த்ருத்வங் காண்கிறபடியால், அசேதனமான திரிவிதகரணங்களுக்குக் கர்த்ருத்வஞ்சொல்லக்கூடாது. அப்படிச்சொன்னுல் சேதனத்துவமும் கரணுந்தரமுங் கற்பிக்கவேண்டும். அப்படி கூடாமையினுல் திரிவிதகரணங்களுக்குங் கர்த்ருத்வங் கூடாதென்று சொல்லுவோமேயென்னில்,

உ-ம். கூடாது. உலகத்தில் அசேதனத்துக்கே கர்த்ருத்வங் காணுகின்றபடியினுல் திரிவிதகரணங்களுக்குங் கர்த்ருத்வஞ் சொல்லலாம்.

ச-கை. எப்படிச் சொல்லலாமென்னில்,

உ-ம். அசேதனமான வாய்வு கரணமுஞ் சேதனத்துவமும் அபேக்ஷியாமல் விருக்ஷாதிகளை யொடிக்கிற கிரியைகளைக் குறித்தும், அசேதனமான பிரவாக ஜலம் கரணமுஞ் சேதனத்துவமும் அபேக்ஷியாமல் விருக்ஷாதிகளைப் பிடுங்குகிற கிரியைகளைக் குறித்தும் கர்த்ருத்வங் காணுகின்றது. ஆதலா லசேதனமான திரிவிதகரணங்களுக்கும் சேதனத்துவமுங் கரணுந்தரமுங் கற்பியாமல் திரிவிதகர்மத்தைக்குறித்துக் கர்த்ருத்வமுண்டு.

ச-கை. ஆனுல் திரிவிதகரணங்களினுற் செய்கின்ற புண்ணிய பாவமிச்ர கர்மங்களில், மனதினுற் செய்கிற புண்ணிய கர்மமாவதேதெனில்,

உ-ம். சகுணப் பிரயோசனசிந்தை, நிற்குணப்பிர யோசனசிந்தை, பரலோகப் பிரயோசனசிந்தை, பிறருக்கு இதப்பிராப்தியான சிந்தை, பத்திஞான வைராக்கிய சிந்தை இது முதலானதுகளுமாம்.

ச-கை. மனதினாற்செய்கிற பாபகர்மமாவ தேதென்னில்,

உ-ம். சார்வதாவிஷயசிந்தை, பிறருக்கு அகித சிந்தை, வேதசாஸ்திரங்களுக்கு அப்பிரமாணமானசிந்தை, பரலோக அபாவசிந்தை, தர்மஅபாவசிந்தை இது முதலானதுகளுமாம்.

ச-கை. மனதினாற்செய்கிற மிச்ரகர்மமாவ தேதென்னில்,

உ-ம். சகுணநிற்குணப் பிரயோசன தியானகாலங்களிற் செய்கின்ற விஷயாதி சிந்தை முதலியவைகளாம்.

ச-கை. வாக்கினாற்செய்கிற புண்ணியகர்மமாவ தேதென்னில்,

உ-ம். வேதாத்தியயனம், சாஸ்திரபாடம், காயத்திரி, பஞ்சாட்சரமுதலிய ஜெபங்கள், பகவந்நாமகீர்த்தனைகள், பரோபகாரவார்த்தைக ளிதுமுதலியவைகளாம்.

ச-கை. வாக்கினாற்செய்கிற பாபகர்மமாவ தேதென்னில்,

உ-ம். சார்வதா பெரியோர்களைத் தூஷிக்கிறது, பிறரைச்சொல்லாத வார்த்தைசொல்லுகிறது, அசத்தியஞ் சொல்லுகிறது, ஒன்றைச்சாட்டி யொன்றைச்சொல்லுகிறது இதுமுதலியவைகளாம்.

ச-கை. வாக்கினாற்செய்கிற மிச்ரகர்மமாவ தேதென்னில்,

உ-ம். வேதாத்தியயன சாஸ்திரபாட ஜபாதிகாலங்களில் இலௌகீக வார்த்தைபேசுகிறது முதலியவைகளாம்.

ச-கை. காயத்தினாற்செய்கிற புண்ணியகர்மமாவ தேதென்னில்,

உ-ம். புண்ணியதீர்த்தஸ்நானம், குரு தேவதாதரிசனம், அங்கப்பிரதக்ஷணம், பிறரைவருத்தாமை இது முதலியவைகளாம்.

ச-கை. காயத்தினாற்செய்கிற பாபகர்மமாவ தேதென்னில்,

உ-ம். சார்வதா பிறரைவருத்துகிறது, பரஸ்திரீகளைக் கூடுகிறது, பரதிரவியந் திருடுகிறது, துஷ்டசாவகாசமாய்த் திரிகிறது இது முதலானதுகளாம்.

ச-கை. காயத்தினாற்செய்கிற மிச்ரகர்மமாவ தேதென்னில்,

உ-ம். பிராமணபோஜனநிமித்தம் பிராமணரைப்பிடிக்கிறது, பரதிரவியத்தை யபகரித்துத் தண்ணீர்ப்பந்தல் வைக்கிறது, பரதிரவியத்தைக் கிரகித்துக் கோயில் குளம் மட முதலானவைகள் கட்டுகிறது, அமஞ்சியாள்பிடித்துக் குளம்வெட்டுகிறது, பிறருடைய பூமியைக் கிரகித்துக் கோயிலுக்கு மடத்துக்கு விடுகிறது இது முதலானதுகளாம்.

ச-கை. இந்தவிசாரத்திற்குப் பலமெத்தனைவகை யென்னில்,

உ-ம். முக்கியமென்றும், அவாந்தரமென்றும் இரண்டுவகை.

ச-கை. முக்கியபலமாவ தேதென்னில்,

உ-ம். இந்தத் திரிவிதகர்மங்களையுந் திரிவிதகரணங்களே செய்கின்றதென்றும், அகர்த்தாவாகிய ஆத்ம

சொரூபமே யாதொருகிரியையும் செய்யவில்லையென்றுங் கொண்டு, அந்த ஆத்மாவை நானென்றுந் திடநிச்சயம் வருவதே முக்கியம்.

ச-கை. அவாந்திரபலமாவ தேதென்னில்,

உ-ம். அப்படிப்பட்ட நிச்சயம்வந்தும் திரிவிதகரணங்களைப் புண்ணியகர்மத்தில் விடவேண்டுமென்றும், பிரமாதவசத்தினால் புண்ணியகர்மத்தில் விடக்கூடாமற் போனாலும், மிச்ர கர்மத்திலாகிலும் விடவேண்டுமென்றும், சார்வதா பாபகர்மத்தில் விடக்கூடாதென்றும் சிந்திக்கின்றதே அவாந்திரம்.

ச-கை. ஒன்றில்தானே யிரண்டுபல முண்டோவென்னில்,

உ-ம். உண்டு. வாழைவைத்தவன் தனக்கு வேண்டிய மட்டும்வாழைப்பழம் விநியோகமாக்கிக்கொள்ளுகிற தெப்படியோ, அப்படியே முக்கியபலமும்; இலை பூ தண்டு கட்டைகள் கொண்டுவந்து உபயோகமாக்கிக் கொள்ளுகிற தெப்படியோ, அப்படியே அவாந்திரபலமுமாம்.

ச-கை. ஆனால் திரிவிதகரணங்களு மொனறினாற் பிரேரிக்கப்பட்டுத் திரிவிதகர்மங்களைச் செய்கின்றனவோ? தாங்களே செய்கின்றனவோவெனில்,

உ-ம். தாங்களே செய்கின்றனவென்பது கூடாது. பரசுவாதிகளும் ஆயுதகரணங்க ளாகையினால், அதுகளுக்கும் பிரேரகனை யபேட்சியாமல் கர்த்ருத்வம் வரவேண்டும். அப்படி யில்லாமையினால் ஒன்றினால் பிரேரிக்கப்பட்டுச் செய்கின்றனவென்றே சொல்லவேண்டும்.

ச-கை. ஆனால் சேதனனாற் பிரேரிக்கப்பட்டுச் செய்கின்றனவென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். சேதனனான ஆத்மா நிர்விகாரியாகையால் அப்படி சொல்லக்கூடாது. அசேதனனாலேயே பிரேரிக்கப்பட்டுச் செய்கிறதென்று சொல்லவேண்டும்.

ச-கை. அசேதனத்தினாலே பிரேரிக்கப்பட்டதென்று சொல்ல லாமோவென்னில்,

உ-ம். கூடாது. அப்படிசொன்னால் கடமானது கடத்தினாற் பிரேரிக்கப்பட்டுச் சலமெடுக்கவேண்டும். அப்படி காணவில்லையே. நான் கோயில்கட்டுவித்தேன், மடங்கட்டுவித்தேன், சகஸ்ரபோஜனம் பண்ணுவித்தே னென்னுமிடத்திற் கர்த்ருத்வம் ஆத்மசுபாவமாகத் தோற்றுகின்றது. அப்படி சொல்லுவோமென்றாலும் ஆத்மா நிர்விகாரியாகையினால் ஆத்மாவுக்கு கர்த்ருத்வங் கூடாது.

ச-கை. ஆனால் இந்தக்கர்த்ருத்வ வனுபோகத்திற்குக் கதிதானென்ன வெனில்,

உ-ம். அந்நிய சுபாவமான கர்த்ருத்வம் ஆத்மாவினிடத்தில் தோற்றுகின்றபடியினால் ஆகுந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. ஆனால் அப்படியேன் சொல்லவேண்டும்? ஆத்மசுபாவமென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். அப்படி ஆத்மசுபாவமென்று சொன்னால் கர்த்ருத்வம் போகிறநிமித்தம் எவர்களு மெத்தனம்பண்ணாமலிருக்கவேண்டும். முமுக்ஷுக்க ளெத்தனம் பண்ணுகிறபடியினால் அப்படி சொல்லக்கூடாது.

ச-கை. கர்த்ருத்வமும் சுபாவமாகட்டும்; போகுநிமித்தம் எத்தனமும் பண்ணட்டுமே யென்னில்,

உ-ம். சுபாவமென்றால் சொரூபமாகையினால் சொரூபநாசார்த்தமாய் எவர்களு மெத்தனம் பண்ணார்களென்று முன்னமே சொல்லியிருக்கின்றோமே. அதுவுமன்றி ஆத்மா

அகர்த்தா வென்கிற சுருதியாதிகளுக்கும் விருத்தம்வரும். சுழுத்தியிலும் ஆத்மா விருக்கிறபடியினு லவ்விடத்திலுங் கர்த்ருத்வந் தோற்றவேண்டும்.

ச-கை. அப்படி வேண்டியதில்லை. உபாத்தியாயரிடத்திற் கல்வியிருந்தாலும் கற்கப்பட்ட பிள்ளைகளில்லாமையினால் அந்தக்கல்வி பிரகாசிக்காது; பிள்ளைகளிருந்தா லெப்படி பிரகாசிக்குமோ, அப்படிபோலவும், ராஜபிரபுக்களிடத்தில் ஆக்கினை சுபாவமாயிருந்தாலும் மந்திரி பிரதானி முதலான சேனுசமுகங்க ளில்லாமையினால் அந்த ஆக்கினை பிரகாசிக்காது, அவர்களிருந்தா லெப்படி பிரகாசிக்குமோ, அப்படிபோலவும் ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் சுபாவமாயிருந்தாலும் சுழுத்தியவத்தையில் நியமிதமான திரிகரண கூட்டரவில்லாதபடியினால் தோற்றவில்லை. சாக்கிர சொப்பனங்களி லதுகளிருக்கின்றபடியினால் கர்த்ருத்வம் தோற்றுகின்றதென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். அப்படியானால் தோற்றரவற்ற சுழுத்தி யவத்தையிலுங் கரணக்கூட்டர விருக்கிறபடியினால் அங்குங் கர்த்ருத்வந் தோற்றவேண்டும். தோற்றாமையினால் கர்த்ருத்வம் ஆத்மசுபாவமென்பது கூடாது. ஆகுந்துகமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. ஒருவஸ்துவின் சுபாவந் தற்சுபாவமாகத் தோற்றுமாவெனில்,

உ-ம். குசும புஷ்பத்தின் சிவப்புநிறம் படிகத்திற் றோன்றுவது போலவும், அக்கினியின் உஷ்ணமும் பிரகாசமும் இரும்பினிடத்திலும், இரும்பி னளவு நிகளங் கன முதலிய விடத்திலுந் தோன்றுவதுபோலவும், ராகத்துவேஷ சுபாவமான கர்த்ருத்வம் ஆத்மசுபாவமாகவும், ஆத்மசுபாவமான அகர்த்ருத்வம் ராகத்துவேஷ சுபாவமாகவும்

அஞ்ஞானத்தினுல் தோற்றுகின்றது. ஆனுலும் அசேதனங்களுக்குக் கர்த்ருத்வங் கூடுமென்பது கூடாது.

ச-கை. கூடுமென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். அப்படியானுல் கடமுங் கடத்தினுற் பிரேரிக்கப்படுமென்று முன்னமே சொல்லியிருக்கின்ருேமே; அப்படி சொல்வது கூடாது.

ச-கை. அதற்கு உத்தரவுதானேதெனில்,

உ-ம். அங்கே யோக்கிதையில்லாமையினுல் பிரேரகத்வங் கூடாது. எங்கே யோக்கிதையுண்டோ, அங்கே பிரேரகத்வ முண்டென்று தோற்றுகின்றது.

ச-கை. யோக்கிதையான விடத்தில் எங்கே பிரேரகங் காணப்படுகிறதென்னில்,

உ-ம். அக்கினியானது மருந்தோடு கூடினபடியினுல் பீரங்கிகுண்டுகளினுல் சதுரங்கசேனைகளையுஞ் சங்கரிக்கப்பட்டது.

ச-கை. அசேதனமான அக்கினி அசேதனமான மருந்துடன்கூடி அசேதனமான கல்லுகளைக்குறித்துப் பிரேரகத்துவங் காணப்படுகின்றது; அல்லாமலும் பிணமான சரீரத்துக்குக் சுயபந்துக்களாற் செய்யப்பட்ட கிரியைகளைக் குறித்துக் கர்த்ருத்வங் தோற்றுகின்றது. அதுபோல அசேதனமான ராகத் துவேஷாதிகளுக்கும் திரிவிதகரணங்களாற் செய்கின்ற திரிவித கர்மங்களைக் குறித்துக் கர்த்ருத்வஞ் சொல்லவேண்டுமே. அப்படி சொன்னுல் ஆத்மாவுக்குச் சர்வாந்திரியாமித்வஞ் சொல்லப்பட்ட சுருதி ஸ்மிருதியாதிகளுக்குத் தாற்பரிய மேதென்னில்,

உ-ம். ஆத்மா நிர்விகாரியாகையினுல் அஸ்மதாதிகளைப் போலக் கர்த்ருத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை. மற்றெப்படி யென்னில்,

உ-ம். ஆதித்த சந்நிதானத்தில் சமஸ்தபிராணிகளுஞ் சர்வகாரியத்திலு மெப்படி பிரவிர்த்திக்கிறார்களோ, காந்த சந்நிதானத்தி லிரும்புக ளெப்படி சேஷ்டிக்கின்றதோ, அப் படிபோல ஆத்ம சந்நிதானத்திலும் சமஸ்தமான ஜகத்துஞ் சேஷ்டிக்கிற தென்றே சுருதி ஸ்மிருதியாதிகளுடைய தாற் பரியம்.

ச-கை. இப்படிசொன்னால் ஆத்மாவுக்கு நிர்விகாரஞ் சித்தித்ததா வென்னில்,

உ-ம். சித்தித்தது,

ச-கை. எப்படியென்னில்,

உ-ம். ஆதித்த சந்நிதானத்தில் சமஸ்தபிராணிகளும் விவகாரம் பண்ணினபோதும் பிராணிகள் சுபாவமான விவ காராதிகள் ஆதித்தனை எப்படி ஸ்பரிசிக்கவில்லையோ, காந்த சந்நிதானத்திலிரும்புகள் சேஷ்டித்தபோதும் இரும்பின் விகாரங்கள் காந்தத்தை எப்படி ஸ்பரிசிக்கவில்லையோ அப் படிபோல ஆத்மசந்நிதானத்தில் சேஷ்டிக்கப்பட்ட ஜகத் சுபாவமான விகாரங்கள் ஆத்மாவைப் பரிசிக்கமாட்டாது. ஆதலால் நிர்விகாரத்வங் கூடும்.

ச-கை. ஆனாலிந்த விசாரத்திற்குப் பலமேதென்னில்;

உ-ம். தேரோட்டிவைக்குமிடத்திலும், அதற்கதிகாரி களால் செய்யப்பட்டுத் தேரோட்டிவைக்கிறோ மென்கிற வியாபார வபிமானத்தினால் அவர்கட்கு நியமிக்கப்பட்டுச் சொஸ்தனாயிருக்கிற பிரபுவினிடத்தில் நானிரண்டுநாழிகை யில் தேரோட்டிவைத்தேனென் றெப்படி தோற்றுகின்ற தோ அப்படிபோல, ராகத்துவேஷ சுபாவமான கர்த்ருத் வமும் அத்தியாசத்தினால் ஆத்மசுபாவமாய்த் தோற்றுகின் றது. விசாரிக்குமிடத்தில் ஆத்மாவுக்குச் சர்வாத்மனாயில்லை. ஆகையால் நிராகாரமாய் நிர்விகாரனான ஆத்மாவே தானெ

ன்று ஸ்ரீசற்குரு கடாக்ஷத்தினால் தெளிந்து ஆத்ம சந்நிதானத்தில் திரிவிதகரணத்துண்டான கர்த்தவ்வியமும் அதனால் விளைகிற வினையும் முக்கிய பலமும் அவாந்தரபலமும் சுவபக்ஷமாய் சங்கையற வெவனறிகிறானோ அவனே ஜீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருயாதிகளிற் சொல்லுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

கர்மத்திரய நிரூபகம்.

முற்றிற்று.

---

ஏழாவது

# இராகத்துவேஷ நிரூபகம்.

---

சங்கை. திரிவிதகரணங்களும் எந்த ராகத்துவேஷாதிகளால் பிரேரிக்கப்பட்டுத் திரிவித கர்மங்களைச் செய்கின்றது? அதுகளெத்தனைவிதமா யிருக்குமென்னில்,

உத்தரம். இராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், இரீஷை, அசூயை, டம்பம், தர்ப்பம், அகங்காரம், இச்சை, பத்தி, சிரத்தை எனப் பதினாறுவிதமா யிருக்கும்.

ச-கை. அவை யெவ்வாறென்னில்,

உ-ம். ஸ்திரீவிஷயமான சித்தவிருத்திக்கு ராகமென்றும், ஒருவனபகாரம் பண்ணினால் அவ்வபகாரத்திற்குப் பிரதியபகாரம் பண்ணவேண்டுமென்கிற சித்தவிருத்திக்குத் துவேஷமென்றும், கிரகக் கிராமக்ஷேத்திர தனதான்யாதிகள் மேன்மேலுஞ் சம்பாதிக்க வேண்டுமென்று வருகிற சித்தவிருத்திக்குக் காமமென்றும், தான் சம்பாதிக்கின்ற ஒரு வஸ்துவினிடத்தில் எவனொருவன் விக்கினம் பண்ணுகி

ருனே அவன்பேரில் வியாக்கிரமரூபமாய்ச் சீறிவருகிற சித்தவிருத்திக்குக் குரோதமென்றும், அங்ஙனம் பிரயாசையடைந்து சம்பாதித்த பொருள்களை எந்தவிஷயத்திலுஞ் செலவு பண்ணப்படாதென்று வருகிற சித்தவிருத்திக்கு லோபமென்றும், தான் சம்பாதித்த பதார்த்தத்தினிடத்தில் பிரியமோதப் பிரமோதமாய் வருகிற சித்தவிருத்திக்கு மோகமென்றும், ஐசுவரிய கோலாகலத்தினுற் கொர்வித்து கிர்த்தியாகிர்த்தியங்க ளறியாமல் விகற்பித்து வருகிற சித்தவிருத்திக்கு மதமென்றும், ஒருவன் தன்னிலும் அதிக பாக்கியவந்தனுயிருந்தால் அவன் செல்வத்தைப் பார்க்கச் சகிக்காமல் வருகிற சித்தவிருத்திக்கு மாச்சரியமென்றும், பிறருக்குத் துக்கம் வரவேண்டுமென்றும் தனக்கு வரக்கூடாதென்றும் எண்ணுகிற சித்தவிருத்திக்கு இரீஷையென்றும், தனக்குச் சுகம் வந்ததுபோல மற்றொருத்தருக்கு வரக்கூடுமோவென்று விகற்பித்துவருகிற சித்தவிருத்திக்கு அசூயை யென்றும், தான் செய்கிற தான தர்மங்களைப் பலபேரு மறிந்து தன்னைச் சபாஷென்று மெச்சவேண்டுமென்று வருகிற சித்தவிருத்திக்கு டம்பமென்றும், நானே தொட்டவான் மற்றவர்களெல்லாம் எனக்குச் சரியாவார்களாவென் றெண்ணுகிற சித்தவிருத்திக்குத் தர்ப்பமென்றும், ஆ! என்னை யறியாயா! நீயா என்னைத் தெண்டிக்கிறவன்! நான் பிடித்தகாரியத்தை விடுகிறதில்லை யென்று விகற்பித்துவருகிற சித்தவிருத்திக்கு அகங்காரமென்றும், அநிர்வாச்சியமான சவுசாதி கிரியைகளைச் செய்யவெண்டுமென்று வருகிற சித்தவிருத்திக்கு இச்சையென்றும், குருதேவதைகளிடத்தில் வருகிற பிரீதிக்குப் பத்தியென்றும், குரு வேதாந்தவாக்கியாதி கிரியைகளிடத்தில் வருகிற விவகாரத்திற்குச் சிரத்தை யென்றுஞ் சொல்லப்படும்.

ச-கை. இங்ஙனம் விசாரிக்கு முறைமை யேதென்னில்,

உ-ம். இந்த ராகத்துவேஷாதிகள் நிரேதுகமாய் யெத்தன்மபண்ணுமலேவரும். ஆயினும் இராகமுதல்கங்காரமீறுன பதின் மூன்றின் வசத்தனுய் ஒருபுருஷன் திரிவித கரணங்களினுலும் திரிவிதகர்மங்களேச் செய்வானுகில் அவனுக்கு நரகத்திலிருந்து நிவிர்த்தி யெந்தக்காலத்திலு மில்லவேயில்லே. ஆதலால் இராகத்து வேஷாகாரமான சித்தவிருத்திகளேத் திருப்பிச் சர்வப்பிரகாரத்தினுலேயுஞ் சிரத்தாபத்தி ரூபமாகச் செய்வானுகில், அவன் கிரமத்தினுல் சீக்கிரமாகச் சமுசாரபந்தத்திலிருந்து விடுபட்டு முத்தனுவான். ஆகையினுல் சிரத்தாபத்திகளே யவசியஞ் சம்பாதிக்கவேண்டும். இச்சையினுற் செய்யப்பட்ட பசிதாக நிவிர்த்தியும், மலமூத்திர விசர்ச்சனமுஞ் செய்யாமற்போனுல், தற்காலத்திற்கு வாதைவரும்; செய்ததே யுண்டானுல் தற்காலத்திற்கு உபாதி நிவிர்த்தியாம். இதுகளால் சொர்க்கநரகப் பிராப்தியில்லேயென் றறியவேண்டியது.

ச-கை. இப்படி விசாரித்ததற்குப் பலமேதென்னில்,

உ-ம். சுழுத்தி யவஸ்தையிலும், தூஷணீம் பூதாவஸ்தையிலும், சமாதி யவஸ்தையிலும் இராகத்துவேஷாதிகளில்லாதபடியினுல் கர்மமில்லே; சாக்கிர சொப்பனங்களில் அதுக ளுண்டாயிருக்கிறபடியினுல் கர்மமுண்டு. ஆதலால் இராகாதிக ணீங்கின விடத்திற் கர்மமில்லே, அதுகளுண்டானவிடத்திற் கர்மமுண்டென் றன்வயவெதிரேகத்தினுல் லறியவேண்டியது.

ச-கை. இந்த ராகத் துவேஷாதிக ளெதினுல் வருகிறதென்னில்,

உ-ம். அபிமானத்தினுல் வருகின்றது.

ச-கை. சமஸ்தமானபேர்களுக்கும் அபிமான பூர்வக மாகப் பிரவிர்த்தி வருமாவென்னில்,

உ-ம். வரும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஸ்திரீஜனங்களுக்கு நான் ஸ்திரீயென்று எப் போ தபிமானம் வருகின்றதோ, அப்போதே ராகாதி பூர் வகமாய் புருஷனிடத்தில் சிசுருஷைகளிலும், கிரகசவரக்ஷ ணைகளிலும், பாகாதிக்கிரியைகளிலும், தனதான்யாதி யார் ச்சிதங்களிலும் பிரவிர்த்தி காணப்படுகின்றது. அதுபோல புருஷாளுக்கும் நான் புருஷனென்றெப்போ தபிமானம் வந்ததோ, அப்போதே ராகாதிபூர்வகமாய் தாராதி கிரகக் கிருஷியாதிகளிலும், தனதான்யாதி யார்ச்சனைகளிலும் பிரவிர்த்தி காணப்படுகின்றது. அப்படியே சமஸ்த பிராணி களுக்கும் வர்ணாச்சிரம தர்மாபிமானத்தினாலும் சுயவுசித வியாபாரங்களினாலும் ராகாதிகளுண்டாகின்றன. இதுக ளுண்டாகிறதற்கு அபிமானமே காரணம். ஆகை யினால் முமுக்ஷுவானவர்கள் சாதியாசிரம நாமரூபக்கிரி யைகளாகிற விஷயங்கள் தானல்லாதபடியினால் சகல வஸ் துக்களினிடத்திலும் ரூடமான அபிமானத்தை விடவேண் டும். அப்படி விட்டால் துக்கத்தினிடத்திலிருந்து விடு படுவார்களென் றறிகிறதே இந்த விசாரத்திற்குப் பலம். ஆனபடியினால் அபிமானமுண்டானால் ராகாதிகளுண்டு; இல்லாவிட்டால் ராகாதிக ளில்லையென்று சுழுத்தி சமாதி தூஷணீம் பூதாவஸ்தைகளிற் பார்த்துக்கொள்ள வேண் டியது.

ச-கை. ஆனா லபிமான மெதினால்வருகிற தென்னில்,

உ-ம். அவிவேகத்தினால் வருகிறது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சமஸ்தமானபேர்களுக்கும் நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரனென்று பிராமணத்வாதி யபிமானம் அவிவேகமாய் வருகின்றது. இவ்வபிமான மெதைப்பற்றி வருகிறதென்று யாரும் விவேகிக்காதபடியினல், அவ்வபிமானமே மேலீடாய் வருகின்றது.

ச-கை. இதற்கு ஆசிரயமில்லையா வென்னில்,

உ-ம். இல்லை.

ச-கை. சரீரத்தைப்பற்றி வருகிறதென்று சொல்லுவோமேயெனில்,

உ-ம். க்ஷத்திரியருக்குஞ் சரீரஞ் சாதாரணமாயிருக்கிறபடியின லவர்களுக்கும் நான் பிராமணனென்று அபிமானம் வரவேண்டும். அப்படி வராமையினல், பிராமணத்வம் சரீரத்தைப்பற்றி வருகிறதென்று சொல்லப்படாது.

ச-கை. சிகை பூணநூலைப்பற்றி வருகிறதாவென்னில்,

உ-ம். சிகை பூணநூல் குசவனுக்குஞ் சாதாரணமாயிருக்கிறபடியின லவர்களுக்கும் பிராமணத்வம் வரவேண்டும். அங்ஙன மின்மையால் சிகை பூணநூலைப்பற்றி வருகிறதென்று சொல்லப்படாது.

ச-கை. அவயவங்களுக்குப் பிராமணத்வஞ் சொல்லுவோமே யெனில்,

உ-ம். ஒவ்வொரு அவயவங்களுக்கும் பேர் வெவ்வேருயிருக்கிறபடியின லவயவங்களுக்கும் பிராமணத்வமில்லை.

ச-கை. ஆனல் விசிட்டமான மாதா பிதாக்களுக்குப் பிறந்த அவயவங்களுக்குப் பிராமணத்வங் கற்பிக்கலாமே யென்னில்,

உ-ம். விசிட்டமான மாதா பிதாக்களினாற் கழிக்கப் பட்ட கேச நகதந்த மல மூத்திராதிகளுக்கும் பிராமணத்வம் வரவேண்டும். அப்படி வராதபடியினால் ஒன்றுக்கும் பிராமணத்வ மொருவராலுஞ் சொல்லக்கூடாது.

ச-கை. ஆனாலிந்தப் பிராமணத்வத்திற்குக் கதிதானென்னவெனில்,

உ-ம். சோபனமென்று முச்சவமென்றுஞ் சந்தையென்று மநேகவஸ்து சமுகத்திற் கந்தந்தப் பெயரெப்படி வந்ததோ, அதுபோல அசர்வஜன்னியமான தேகேந்திரியாதி சங்கத்திற்குத் தொழில் விவகாரத்தினிடத்தில் ஐதீகமே பிராமணனென்று பெயர். அதுபோல க்ஷத்திரியனென்றும், வைசியனென்றும், சூத்திரனென்றும், ஸ்திரீயென்றும், புருஷனென்றும், தீட்சதனென்றும், சாஸ்திரியென்றும், புராணிகனென்றும், அவதானியென்றும், ஜீயரென்றும், பாகவதனென்றும், தமிழனென்றும், கர்னாடகனென்றும், தத்துவாதியென்றும், மாருவ்ஷ்டகனென்றும், குச்சிலியனென்றும் இதுமுதலான சமஸ்த நாமங்களுந் தேகேந்திரியாதி சங்கவிஷயத்தினாலே ஐதீகமாய் வருகிறபடியினால் பிராமணத்வம் தேகேந்திரியாதி சங்கத்திற்கே யல்லாம லாத்மாவுக்குக் காலத்திரயத்திலு மில்லை. இப்படி பகுத்தறியாமலிருக்கிறதே யவிவேகம். இந்த வவிவேகத்தினா லபிமானம் வருகின்றது.

ச-கை. இப்படி விசாரித்ததற்குப் பலமேதென்னில்,

உ-ம். ஆத்மாவுக்குக் காலத்திரயத்திலும் பிராமணத்வாதிகளில்லை யென்றும் தேகேந்திரியாதிகளுக்கே ஐதீக பிராமணத் வாதிகளென்று மறிவதே பலம்.

ச-கை. இந்த அவிவேக மெதினால் வந்ததென்னில்,

உ-ம். அஞ்ஞானத்தினால் வந்தது.

ச-கை. அஞ்ஞானசொரூப மேதென்னில்,

உ-ம். தன்னைத்தா னறியாமலிருக்கிறதே யஞ்ஞானம்.

ச-கை. தன்னைத்தா னறியார்களென்று சொல்லலா மா வென்னில்,

உ-ம். சொல்லலாம். எப்படியென்றால் நான் பிராம ணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்தி ரன், நான் இந்தக் குலத்திற்பிறந்தவன், நான் இன்ன கோத்திரனென்று இந்தச் சரீரத்தையே யாத்மாவாக வறி கிறார்களல்லாமல் சரீர வந்நியரான ஆத்மாவை யாரு மறி யமாட்டார்கள்.

ச-கை. சாஸ்திரிகள் சரீர வந்நியமான ஆத்மாவுண் டென்று சொல்லியிருக்க, யாருமறியார்களென்றெப்படி சொல்லலாமெனில்,

உ-ம். சொல்லலாம். எப்படியென்றால் கர்த்தா போக் தாவாய், பரிச்சின்னனாய் காலாந்தரத்தினாற் பிறந்திறக்கப் பட்ட ஜீவனை யாத்மாவாக வறிகிறார்களேயல்லாமல், அகர் த்தா, அபோக்தா, அபரிச்சின்னன், அசங்கன், அசம்சாரி, அத்துவித னென்னப்பட்ட வேதாந்த வேத்தியனான பிரத் தியேகாத்மாவை யாரும் அறியார்கள். அதை யறியாம லிருந்ததே யஞ்ஞானம். அவ்வஞ்ஞானத்தினால்தான் அவி வேகம் வருகிறது.

ச-கை. அந்த அஞ்ஞான மெதினால் வருகிறதென் னில்,

உ-ம். அஞ்ஞானம் அநாதியாகையால் ஒன்றினால் வருகிறதென்று சொல்லக்கூடாது.

ச-கை. அதின்சொரூபந்தா னேதென்னில்,

உ-ம். சத்து, அசத்து, சதசத்து, சாவயம், நிரவயம், சாவயநிரவயம், பின்னம், அபின்னம் பின்னாபின்னமென் றென்பது பிரகாரமாயிருக்கும்.

ச-கை. ஆனால் சத்தென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். ஞானத்தினு லழிகிறபடியால் சத்தென்னப் படாது.

ச-கை. ஆனால் அசத்தென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். சசவிஷாணாதிகள்போ லில்லாமற் போகவேண்டும். நானஞ்ஞானியென்னு மனுபவ மிருக்கிறபடியினால் அசத்தென்னக்கூடாது.

ச-கை. சதசத்தென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். ஒருவஸ்துவுக் கிரண்டுபட்சங் கூடாதபடியினால் விருத்தம் வரும். ஆதலாற் சதசத்தென்னப்படாது.

ச-கை. சாவயமென்று சொல்லலாமேயென்னில்,

உ-ம். மூலகாரணமான அத்துவிதவஸ்து இல்லாமற் போகவேண்டும். இருக்கிறபடியினால் சாவயமென்றுஞ் சொல்லப்படாது.

ச-கை. நிரவயமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். ஜகதாகாரமாய்ப் பரிணமிக்காம லிருக்கவேண்டும். பரிணமிக்கிறபடியினால் நிரவயமென்றுஞ் சொல்லப்படாது.

ச-கை. சாவயநிரவயமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். விருத்தமானபடியால் அந்தபட்சமுங்கூடாது.

ச-கை. பின்னமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். அத்துவிதத்திற் கானிவரும்.

ச-கை. வந்தால் வரட்டுமேயென்னில்,

உ-ம். ஆத்மா அத்துவிதனென்று சொல்லப்பட்ட சுருதிகளுக்குப் பேதம்வரும். அதுமாத்திரமல்ல; மாயை

க்கு ஆத்மசத்தையல்லாமல் வெதிருத்தமான சத்து வேறில்லாதபடியினால், ஆத்மாவையன்றி வேறே பின்னமான பதார்த்தமென்று சொல்லக்கூடாது; அன்றியும் ஆத்மசத்தி யில்லாமற் போகவேண்டும்.

ச-கை. போனால் போகட்டுமேயென்னில்,

உ-ம். ஆத்ம சத்தியைப் பிரதிபாதிக்கிற சுருதிகளுக்குப் பேதம்வரும்.

ச-கை. ஆனால் அபின்னமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். மாயைக்குச் சேதனத்துவமுண்டாகி அசேதனத்துவ நீங்கிவிடும். ஆத்மாவுக்குஞ் சேதனுசேதன சொரூபம்வரும். அப்போது மாயையென்று சொல்லாமல் ஆன்மாவென்று சொல்லவேண்டும்.

ச-கை. அப்படி சொல்லுவோமே யென்னில்,

உ-ம். மாயை, பிரகிருதி, பிரதானம், அவித்தை, பிரளயம், தமசு, மகாசுழுத்தி, அஞ்ஞானமென்று ஆத்மப் பிரதிபாதகத்திற் கந்நியமான சத்தத்தினாற் சொல்லுகிறபடியா லாத்மாவென்று சொல்லக்கூடாது.

ச-கை. ஆனால் பின்னுபின்னமென்று சொல்லுவோமேயென்னில்,

உ-ம். அப்படியுஞ் சொல்லப்படாது.

ச-கை. எப்படிதான் சொல்லலாமென்னில்,

உ-ம். அநிர்வசனீயமென்றே சொல்லவேண்டும். அந்த அநிர்வசனீயமான அஞ்ஞானத்தினு லவிவேகமும் அதனு லபிமானமும், அதனால் ராகத்துவேஷாதிகளும், அதனாற் கன்மமும், அதனாற் சரீரமும், அந்தச் சரீராபிமானத்தினால் துக்கமும் வருகின்றது.

ச-கை. அந்தத் துக்கத்திற்கு அத்தியந்தநிவிர்த்தி யெப்போது வருமென்னில்,

உ-ம். சர்வாத்மனுய் சரீரபரிக்கிரக மில்லாமற்போனல் வரும்.

ச-கை. சரீரபரிக்கிரகஞ் சர்வாத்மனு யெப்போது போமென்னில்,

உ-ம். ராகத்துவேஷங்கள் போனுற் போம்.

ச-கை. அவை யெப்போது போமென்னில்,

உ-ம். அபிமானம் போனுற் போம்.

ச-கை. அஃதெப்போது போமென்னில்,

உ-ம். அவிவேகம் போனுற் போம்.

ச-கை. அஃதெப்போது போமென்னில்,

உ-ம். அஞ்ஞானம் போனுற் போம்.

ச-கை. அஃதெப்போது போமென்னில்,

உ-ம் சர்வாத்மனுய் அத்துவிதப் பிரம்மாயிக்கப் பிரத்தியக்ஷஞானம் வந்தாற் போமன்றி, மற்ரெருபாயத்தினுலும் போகாது.

ச-கை. கன்மத்தினு லஞ்ஞானம் போமென்றும் சொல்லலாமே யெனில்,

உ-ம். கன்மத்திற்கு மஞ்ஞானத்திற்கும் விரோதமில்லாதபடியினுற் போகாது. மேலுமேலும் அஞ்ஞானத்தையே விருத்திபண்ணும்.

ச-கை. எப்படி விருத்திபண்ணுமென்னில்,

உ-ம். திருஷ்டாந்தமாகக் கேள்; அமாவாசை யிருளுக்கு விரோதமின்றிய மேகாவர்ணம் அந்தகாரத்தைக் கெடாமல் மேலுமேலும் அபிவிர்த்தி செய்விப்பதுபோல, கன்மமு மஞ்ஞானத்தைக் கெடாமல் மேலுமேலும் அபிவிர்த்தியே

செய்விக்கும்; அதுவுமல்லாமல் அந்தகார விரோதமான சூரியப் பிரகாசத்தினால் அந்தகாரங் கெடுவதுபோல, அஞ்ஞானவிருத்தமான அத்துவிதப் பிரமாயிக்கப் பிரத்தியக்ஷ ஞானப்பிரகாசத்தினால் அஞ்ஞானங் கெடுமென்றிப் பின்னரெதினாலுங் கெடாது.

ச-கை. இந்தப் பிரமாயிக்ய ஞான மெதினால்வருமென்னில்,

உ-ம். ஆத்மானாத்ம விசாரத்தினால் வருமேயன்றி மற்றொன்றினாலும் வாராது.

ச-கை. கன்ம வுபாசனையினாலுங் கிரியாயோகங்களினாலும் வருமென்று சுருதியாதிகள் சொல்லுகின்றனவேயென்னில்,

உ-ம். அந்தக் கருத்து அப்படியல்ல. புருஷதந்திரமான கன்மவுபாசனைகளாலும், ஜப தப தியானங்களாலும், யோகங்களாலும் அந்தக் கரணசுத்தி வருமன்றி, ஞானம் வஸ்து தந்திரமாயிருக்கிறபடியினால் ஞானம் வராது. மானசக் கிரியைகளான வுபாசனைகளாலும், ஒன்றையுநினையாமலிருக்கிறதினாலும், ஏகாக்கிரசித்தம் வருமேயன்றி, அப்பிரமாண ஜன்னியமான ஞானம் வராது. யோகமும் மானசக்கிரியை ரூபமானபடியினால், அணிமாதி யயிஸ்வரியஞ் சம்பாதித்து ஞானபலமாகிய கிருதகிருத்தியங்களுக்கு விக்கினம் பண்ணுவிக்குமேயன்றி ஞான முண்டு பண்ணாது.

ச-கை. ஞானமெதினால்தான் வருமென்னில்,

உ-ம். ஆத்மானாத்ம விசாரத்தினா லாசாரிய ரறிவிக்க வரும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். காயத்திரி சாளக்கிராமம் ரத்தினாதிகளுடைய தத்துவக்கியானம், அது அதுகளுக்குத்தக்க வுசிதமான பரிட்சை நிஷ்கரிஷை யறிந்தவன் சொல்லக்கேட்ட விசாரத்தினா லெப்படி தெரியப்படுகின்றதோ, ஸ்நான சந்தியானுஷ்டான ஜப தப ஹோம பிராணாயாமங்களினா லெப்படி தெரியப்படவில்லையோ, அப்படியே ஆத்மஞானமும் குரு சந்நிதானத்திற் செய்கிற ஆத்மானாத்ம விசாரத்தினாலேயே யுண்டாகுமன்றிக் கன்ம வுபாசனைகளினா லுண்டாகாது. ஆதலால் முமுக்ஷுவானவர்கள் சர்வப் பிரகாரத்தினாலும் அநுபவியான ஞானாசிரியரிடத்திற் பழகிச் சார்வதா ஆத்மானாத்ம விசாரம்பண்ணவேண்டும். அப்படி யில்லாமல் சம்சய விபரீத பாவனைநீங்காத வாசாஞான ஆசிரியரும் தத்துவத்தைப் பிரித்து நிர்க்குணபாவத்தை அறிவிக்கமாட்டாதவரும், நிஷ்களத்திற் செல்லவு மடையவும் வழிகாட்டமாட்டாதவரும், டம்பவேஷ முடையவரும், கொக்கைப் போ லசையாதிருந்து காரியநிமித்தியம் பரிசம்பண்ணுகிறவரும், மந்திர லய அடயோகங்களி லொரு லக்ஷியத்தைச் சொல்லி அதிற் பழகப் பழக அந்தக்கரணவிருத்தி சூனியமும் உபசாந்தமயக்கமு முண்டாவதையே பொருளென்றறிவிக்கப் பட்டவருமாகிய அநாசிரியரை நம்பினால், கழுதை வாலைப்பிடித்துக் காவேரிக்கரை யேறக்கூடாதுபோலவும், செல்லாத காசு நோட்டக்காரருக்குச் செல்லாதுபோலவும், சித்திர சூரியனா லந்தகாரம் போகாதுபோலவும், அநுபவமே திருமேனியாகாத குரு சேவையினா லஞ்ஞானம் போகாது, சம்சயமு நீங்காதென்று சகல வேதாந்தங்களிலுஞ் சொல்லப்படுகின்றது. ஆகையினால் சொப்பிரகாச சொரூபமே திருமேனியாகிய காரணகுருவை நம்பினால் அப்படி நம்பினசிஷனை வீட்சித்து அவனுடைய அஞ்ஞானமும் அதனால் வரும் அவிவேகமும் அதனால் வரும் கன்ம

மும் அதனல் வருஞ் சரீரமும் அதனல் வருந்துக்கமும் அத்தியா சத்தினு லாரோபிதமானதென்று சந்தேக விபரீதமற உள்ளங்கை நெல்லிக்கனிபோ லனுபவமா யெடுத்தறிவிப்பார். அப்படி யறிவித்தவிடத்தில் அவன் சமுசாரத்திலிருந்து விடுபட்டுச் சீக்கிரமாகச் சீவன்முத்தி சுகத்தைப் பெறுவானென்று சகல சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுதிகளிலுஞ் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

## இராகத்துவேஷ நிரூபகம்.

முற்றிற்று.

---

எட்டாவது

# ஆத்மானுத்மவிசார நிரூபகம்.

ச-கை. ஆத்மானுத்ம விசாரம் பண்ணவேண்டுமென்று சுருதியாதிகளிற் சொல்லுகின்றபடியால் ஆத்மாவாவதேதென்னில்,

உ-ம். சரீரத்திரயத்திற்கும் பஞ்சகோசத்திற்கு மந்நியமாய் அவஸ்தாத்திரயத்திற்குச் சாட்சியாயிருக்கிற சச்சிதானந்த சொரூபமே யாத்மாவென்று சொல்லப்படும்.

ச-கை. அனுத்மாவாவதேதென்னில்,

உ-ம். சமஷ்டி வியஷ்டி யாத்மகமாகிய சரீரத்திரயங்களை யனுத்மாவென்று சொல்லப்படும்.

ச-கை. அதற்கு லட்சண மேதென்னில்,

உ-ம். அசத்து, சடம், துக்கமென்று சொல்லப்படும்.

ச-கை. சமஷ்டி வியஷ்டியாவதேதென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் வெகுஜனமென்பது சமஷ்டி; ஒரு புருஷனென்பது வியஷ்டி. தோப்பென்கிறது சமஷ்டி; ஒரு விருக்ஷமென்கிறது வியஷ்டி. கிராமமென்பது சமஷ்டி; ஒரு கிரகமென்பது வியஷ்டி. இப்படியே யநேக பதார்த்தங்கள் கூடினது சமஷ்டி; ஒருபதார்த்தமென்பது வியஷ்டி. அப்படிபோல தாஷ்டாந்தத்திலும் சமஸ்தபிராணிகளுடைய சரீரங்கள் சமஷ்டி; ஒரு பிராணியுடைய சரீரம் வியஷ்டி. அதுகளும் ஸ்தூல சூட்சும காரணமென்று மூன்று விதமாயிருக்கும். அவற்றுள் சகல பிராணிகளுடைய ஸ்தூலசரீரம் சமஷ்டி ஸ்தூலசரீரம்; சகல பிராணிகளுடைய சூட்சுமசரீரம் சமஷ்டி சூட்சுமசரீரம்; சகல பிராணிகளுடைய காரணசரீரம் சமஷ்டி காரணசரீரம். ஒவ்வொரு பிராணிகளுடைய ஸ்தூல சூட்சும காரணசரீரம் வியஷ்டியென்று சொல்லப்படும்.

ச-கை. இப்படி சமஷ்டி வியஷ்டிகளா யேன்சொல்ல வேண்டுமென்னில்,

உ-ம். ஆத்மாவுக்கு ஈஸ்வரத்வமுஞ் சீவத்வமுஞ்சொல்லுகிற நிமித்தியஞ் சொல்லவேண்டும்.

ச-கை. ஈஸ்வரத்வமுஞ் சீவத்வமும் இனிமேலா வரப்போகிற தென்னில்,

உ-ம். ஈஸ்வரத்வமும் சீவத்வமு முபாதியினு லனாதியாய் வந்திருக்கிறது. ஆனபோதிலும் ஈஸ்வரத்வமும் சீவத்வமு முபாதியினால் வந்ததென்று எவருமறியார்கள்.

ச-கை பின்னை எப்படி யறிகிறார்களென்னில்,

உ-ம். ஈஸ்வரத்வமுஞ் சீவத்வமும் நித்யமென்றே யறிகிறார்கள்.

ச-கை. அப்படியறிந்தால் தோஷ மேதென்னில்,

உ-ம். எந்தமட்டும் இப்படி நித்தியமென் றறிகிறார் களோ, அந்தமட்டும் அவர்களுக்குச் சமுசாரத்திலிருந்து நிவிர்த்திவராது. ஆகையினால் சர்வப்பிராணிகளுக்குந் தாயாயிருக்கப்பட்ட சுருதிக ளீஸ்வரத்வமுஞ் சீவத்வமு முபாதியினால் வந்ததென்று சொல்லுகிற நிமித்தியம் சமஷ்டி வியஷ்டிகளாகப் பகுத்துச் சொல்லுகின்றன.

ச-கை. ஆனால் எந்தவுபாதியினா லீஸ்வரத்வமு மெந்தவுபாதியினாற் சீவத்வமும் வருகிறதென்னில்,

உ-ம். சமஷ்டி சரீரவுபாதித்திரயத்தினா லீஸ்வரத்வமும், வியஷ்டி சரீரவுபாதித்திரயத்தினாற் சீவத்வமும் வருகின்றது.

ச-கை. ஈஸ்வரனுக்குச் சமஷ்டி காரணசரீரமாத்திரம் போதாதோ வென்னில்,

உ-ம். போதும்.

ச-கை. சமஷ்டி ஸ்தூல சூட்சும சரீரங்களேன் சொல்லவேண்டுமென்னில்,

உ-ம். உபாசனை நிமித்தியமாய்ச் சொல்லப்படுகிறது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். முக்கிய அதிகாரியானவர்களுக்குச் சமஷ்டி காரண சரீரவுபாசகரான ஆத்மாவையே யுபாசிக்கப்படு மென்று சொல்லப்படும். இவருக்கே ஈஸ்வரனென்றும், அந்தரியாமியென்றும், அவ்வியாகிருதனென்று மூன்று பெயர்.

ச-கை. இவருக்குச் சமஷ்டி காரணசரீரத்தி லபிமானமுண்டோ வில்லையோ வென்னில்,

உ-ம். அபிமான மகங்கார தர்மமானபடியினா லவ்வவஸ்தையி லகங்காரமில்லை. ஆகையா லபிமானமுண் டென்று சொல்லக்கூடாது.

ச-கை. பின்னை எப்படி யென்னில்,

உ-ம். ஆத்மாவுக்குச் சமஷ்டி காரணசரீர விசிட்ட மாத்திரத்துவமே யீஸ்வரத்வமென்று சொல்லவேண்டும். இந்த வீஸ்வரனை யுபாசிக்க வல்லமை யில்லாதவர்களுக்கு அவ் வீஸ்வரனுக் கந்தர்க்கதமான சமஷ்டி சூட்சும சரீர வுபாதிகரே யீஸ்வரனென் றுபாசிக்கும்படி சுருதி சொல்லுகின்றது. அவ்வீஸ்வரனுக் கிரணியகர்ப்ப னென்றுஞ் சூத்திராத்மாவென்றும் பிராணனென்று மூன்றுபெயர்.

ச-கை. இவருக்குச் சூட்சும சரீரத்தி லபிமான முண்டோ வில்லையோ வென்னில்,

உ-ம். அபிமானத்திற் காசிரயமான ஸ்தூலசரீர மில்லாதபடியினால் அபிமானமுண்டென்று சொல்லக்கூடாது.

ச-கை. பின்னை என்ன வென்னில்,

உ-ம். சமஷ்டிசூட்சுமசரீர விசிட்டமாத்திரத்துவமே இரணியகர்ப்பத்துவமென்று சொல்லவேண்டும். இவனை யுபாசிக்க வல்லமை யில்லாதவர்களுக்கு அந்த ஈஸ்வரனுக் கவஸ்தாந் தர்க்கதமான சமஷ்டி ஸ்தூல்சரீர வுபாதிகரே யீஸ்வரனென் றுபாசிக்கும்படி சுருதிசொல்லுகின்றது. அந்த ஈஸ்வரனுக்கு விராட்டென்றும் வைஸ்வானரனென்றும் வைராசசனென்று மூன்றுபெயர்.

ச-கை. இவருக்குச் சமஷ்டி ஸ்தூலசரீரத்தி லபிமானமுண்டோ வில்லையோவென்னில்,

உ-ம். நிர்ணயமான ஒரு சரீரமில்லாதபடியினா லபிமானமுண்டென்று சொல்லப்படாது.

ச-கை. பின்னை யெப்படியென்னில்,

உ-ம். சமஷ்டி ஸ்தூலசரீர விசிட்டமாத்திரத்துவமே யீசுவரத்வமென்று சொல்லப்படும். அந்த அந்தரியாமியே சாத்துவீகாதி குணங்களிற்கூடி, சிருஷ்டி திதிசங்கா

ரகர்த்தாவாய், பிரம்ம விஷ்ணு ருத்திரனென்று பேர்வந்த விடத்திலும் துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலன நிமித்திய மாய் ராமகிருஷ்ணவதாரங்க ளெடுக்குமிடத்திலும் அந்த ஈஸ்வரனுக் கந்தந்தச் சரீரங்களிடத்திற் சிருஷ்டித்துவாரா அபிமானங்களுண்டு.

ச-கை. அவ்வபிமானமு மில்லையென்று சொல்லு வோமே யெனில்,

உ-ம். அப்படியானுற் சிருஷ்டி திதி சங்காரங்கள் நடக்காது. ஆகையால் அபிமானமுண்டென்றே சொல்ல வேண்டும்.

ச-கை. ஆனுற் சீவர்களுக்கு மீஸ்வரனுக்கும் பேத லக்ஷண மேதெனில்,

உ-ம். ஜீவர்களுக்குத் தானென்ற வபிமான வகமுண் டாயிருக்கிறபடியினுலும், சுயசரீரங்களி லபிமான மிருக் கிறபடியினுலும், ஈஸ்வரனுக் கிப்படிப்பட்ட வபிமான மில் லாதபடியினுலும், லோக சம்ரட்சணுர்த்தமாகவே யபிமான மிருக்கிறபடியினுலும், சீவர்களுக்கு மீஸ்வரனுக்கும் பேத லட்சணமுண்டு. இந்த ஈஸ்வரனையே பிரதமாதிகளிடத்தி லுபாசிக்கப்படுமென்று வேதஞ் சொல்லுகின்றது.

ச-கை. அப்படியேன் சொல்லவேண்டு மென்னில்,

உ-ம். விராட்டை யுபாசிக்கப் பக்குவமில்லாதவர்கள் திரிமூர்த்திகளை யுபாசிக்கவேண்டும்; அந்தத் திரிமூர்த்தி களை யுபாசிக்கப் பக்குவமில்லாதவர்கள் ராமகிருஷ்ணுவ தாரங்களை யுபாசிக்கவேண்டுமென்று சுருதியாதிகள் சொல் லுகின்றன. சர்வ ஜனங்களும் எந்தெந்த மூர்த்திகளை யுபாசிக்கின்ருர்களோ, அந்தந்த மூர்த்திவழியாக அந்தரி யாமியான ஈஸ்வரனையே யுபாசிப்பதாகும்.

ச-கை. இந்த மூர்த்திகளை யுபாசிக்கவேண்டுமென்று சொல்லுகிற சுருதிகளுக்குத் தாற்பரிய மேதென்னில்,

உ-ம். துவாராத் துவாரா அந்தரியாமியான சொரூபத்தையே யறியவேண்டுமென்று தாற்பரியம். இப்படியே யாத்மாவுக்குச் சமஷ்டி சரீரத்திரய வுபாதியினு லீஸ்வரத்வமும், வியஷ்டி சரீரத்திரய வுபாதியினுற் சீவத்வமும் வந்தது.

ச-கை. சீவத்வத்துக்குச் சரீரத்திரயம் வேண்டுமோ வென்னில்,

உ-ம். வேண்டும். சீவன் அந்தக்கரண பிரதிவிம்பனுகையினுல் சூட்சுமசரீரம் வேண்டும். ஸ்தூலசரீர மில்லாவிட்டால் கர்த்ருத்வங் கூடாதபடியினுல் ஸ்தூலசரீரம் வேண்டும். காரியமான ஸ்தூல சூட்சுமசரீரங்கள் காரணத்தை விட்டிராதபடியினுல் இவ்விரண்டுக்குங் காரணமான காரண சரீரமும் வேண்டும்.

ச-கை. சீவனுக்குச் சரீரத்திரயத்தி லபிமான முண்டோ வில்லையோ வென்னில்,

உ-ம். அபிமானமில்லாமற் கர்த்ருத்வங் கூடாதபடியினுல் உண்டு.

ச-கை. ஆனுல் இந்தச் சீவனுக் கெத்தனைபே ரென்னில்,

உ-ம். சாக்கிராவஸ்தையில் வியஷ்டி ஸ்தூலசரீரத்தி லபிமான கர்த்தாவான சீவனுக்கு விசுவன், வியவகாரிகன், சிதாபாசனென்று மூன்று பெயர். சொப்பனுவஸ்தையில் வியஷ்டி சூட்சுமசரீரத்தி லபிமான கர்த்தாவான சீவனுக்குத் தைசதன், பிராதிபாதிகன், சொப்பன கற்பிதனென்று மூன்று பெயர். சுழுத்தியவஸ்தையில் வியஷ்டி காரண சரீரத்தி லபிமான கர்த்தாவான சீவனுக்குப் பிராஞ்ஞன், பாரமார்த்திகன், அவிச்சின்னனென்று மூன்று பெயர்.

ச-கை. ஒரு ஆத்மாவுக்கே யீஸ்வரத்வமென்றும், சீவத்வமென்றும் இரண்டுரூபமெப்படி கூடுமென்னில்,

உ-ம். கூடும். திருஷ்டாந்தத்தில் ஒரு தேவதத்தனுக்கே புத்திரனை யபேட்சித்துத் தகப்பனென்றும், பேரனை யபேட்சித்துப் பாட்டனென்றும் பெயர் வந்ததுபோல, ஒரு ஆத்மாவுக்கே வியஷ்டி யுபாதியை யபேட்சித்துச் சீவனென்றுஞ் சமஷ்டி யுபாதியை யபேட்சித்து ஈஸ்வரனென்றுஞ் சொல்லப்படும்.

ச-கை. தகப்பன் பாட்டனென்று சொல்லுகிற தர்மத்தையுடைய தேவதத்தனிடத்திற் கிஞ்சிக்ஞத்வ சர்வக்ஞத்வ வுபாதிகள் காணேம். சீவத்வ வீஸ்வரத்வ தர்மங்களுடன் கூடியிருக்கிற ஆத்மாவினிடத்தில் கிஞ்சிக்ஞத்வ சர்வக்ஞத்வ வுபாதிகள் காணப்படுகிறபடியினல், அந்தத் திருஷ்டாந்த மெப்படி கூடுமென்னில்,

உ-ம். ஒரு ஆத்மாவுக்கே யிரண்டுபாதியினு லீஸ்வரத்வமுஞ் சீவத்வமும் வருமென்பதற்காகத் தேவதத்த திருஷ்டாந்தஞ் சொன்னேம். இனி மகத்வ வுபாதியினுல் ஆத்மாவுக்குச் சர்வக்ஞத்வமும், அணுத்வ வுபாதியினுல் கிஞ்சிக்ஞத்வமும் வரலாமென்பதற்கு வேறொரு திருஷ்டாந்தஞ் சொல்லுகிறேம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். விஸ்தாரமான ஜலத்திற்கு ஏரியென்ற வுபாதியினு லநேக தானிய முதலானதுகளை விளைவிப்பதற்கும், சமஸ்த பிராணிகளுக்கும் ஸ்நானபானதிக் கிரியைகளைச் செய்விப்பதற்குஞ் சாமர்த்தியமுண்டு. அற்பமான ஜலத்திற்குக் கடமென்ற வுபாதியினுல் தாகபாகாதி முதலான கிரியைகளுக்கு மாத்திரம் உபயோகப்படுஞ் சாமர்த்தியமுண்டு. பின்னும் ஒரு அக்கினிக்கே தீவட்டியென்ற வ்பா.

தியினால் தூரமாயிருக்கிற பதார்த்தங்களைத் தெரியச்செய்கிற சாமர்த்தியமும், விளக்கென்ற வுபாதியினால் சமீபத்திலிருக்கிற பதார்த்தங்களைச் தெரியச்செய்கிற சாமர்த்தியமுமுண்டு. அதுகளைப்போல ஒரு ஆத்மாவுக்கே மகத்வமாகிய சமஷ்டி சரீரவுபாதியினால் சர்வக்ஞத்வமும், அணுத்வமாகிய வியஷ்டி சரீர வுபாதியினால் கிஞ்சிக்ஞத்வமும் வரும். அதனால் ஈஸ்வரத்வம் ஜீவத்வமென்று பேதம் வந்தது. பாரமார்த்திகத்தில் ஜீவேஸ்வரானுக்கு அபேதமேயன்றிப் பேதமில்லையென்று சுருதியாதிகளிற் சொல்லுகின்றது.

ச-சை. விருத்ததர்மத்திற் கூடியிருக்கிற ஜீவேஸ்வரானுக் கெப்படி யபேதங் கூடுமென்னில்,

உ-ம். கூடும். பூர்வதிருஷ்டாந்தத்தில் விருத்த தர்மத்துடன் கூடிய ஏரியென்ற வுபாதியோடு சேர்ந்திருக்கிற ஜலத்திற்குங் கடமென்ற வுபாதியோடு சேர்ந்திருக்கிற ஜலத்திற்கும் விருத்தாமிசைகளான ஏரி கடமென்ற வுபாதிகளைவிட்டு, அவிருத்தாமிசைகளான ஜலத்தினால் ஏகத்வஞானம் வருகிறதுபோலும், விருத்ததர்மத்துடன்கூடிய தீவட்டியென்ற வுபாதியோடு சேர்ந்திருக்கிற அக்கினிக்கும், விளக்கென்ற வுபாதியோடு சேர்ந்திருக்கிற அக்கினிக்கும் விருத்தாமிசைகளான பெரியவத்தி சின்னவத்தியென்ற வுபாதிகளைவிட்டு, அவிருத்தாமிசைகளான அக்கினிமாத்திரத்தினால் ஏகத்வஞானம் வருகிறதுபோலும் விருத்ததர்மமான சர்வக்ஞத்வாதிகளுடன் கூடியிருக்கிற ஈஸ்வரனுக்கும் விருத்ததர்மமான கிஞ்சிக்ஞத்வாதிகளுடன் கூடியிருக்கிற ஜீவனுக்கும் விருத்தாமிசைகளான சர்வக்ஞத்வ கிஞ்சிக்ஞத்வ வுபாதிகளைவிட்டு, அவிருத்தாமிசைகளான சைதன்ய மாத்திரத்திற்கு ஏகத்வஞானங் கூடும். இந்த அர்த்தமே சகல சாஸ்திரங்களிலும் ஈயந்தேவ, தத்

தகா என்கிற திருஷ்டாந்த பூர்வகமாய் மகாவாக்கியத்திற்கு ஜகத்திலட்சணை, அஜகத்திலட்சணை, ஜகதஜகத்திலட்சணை களால் சுருதியாதிகளி லர்த்தஞ்சொல்லப்படுகின்றது. ஆதலால் இந்தப்படி சொப்பிரகாசமே திருமேனியான சற்குருவினால் விசாரித்து நானே பிரமமென்றும் நானே யீஸ்வரனென்றும் சம்சயமில்லாமலும் உபாதியான வகம்பாவமில்லாமலும் எவரறிகிறார்களோ வவர்களே சீவன்முத்தரென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

ஆத்மானாத்மவிசார நிரூபகம்,

முற்றிற்று.

---

ஒன்பதாவது

# சரீரத்திரயவிலக்ஷண நிரூபகம்.

சங்கை.. ஆத்மா சரீரத்திரய விலக்ஷணனென்று சுருதிகளிற் சொல்லுகிறபடி, சரீரத்திரய விலக்ஷணனான ஆத்மாவைச் சரீரத்திரயங்களை யறியாமல் அறியப்படாது. ஆகையினால் சரீரத்திரய சொரூப மேதென்னில்,

உத்தரம். ஸ்தூல சூட்சும காரணமென மூன்று சரீரங்களாம்.

ச-கை. இவற்றுள் ஸ்தூலசரீரமாவ தேதென்னில்,

உ-ம். கரசரண வவயவங்களாய் ஸ்தம்பம்போற் றோற்றப்பட்டது.

ச-கை. சூட்சுமசரீரமாவ தேதென்னில்,

உ-ம். பதினேழு அவயவங்களுடன் கூடியிருக்கப்பட்டது.

ச-கை. காரணசரீரமாவதேதென்னில்,

உ-ம். அஞ்ஞானமே காரணசரீரம்.

ச-கை. இதுகளுக்குச் சரீரமென்று பெயரேதினால் வந்ததென்னில்,

உ-ம். சீரணித்துப் போகிறபடியினால் சரீரமென்று பெயர் வந்தது.

ச-கை. சீரணித்துப்போகின்றதா வென்னில்,

உ-ம். போகின்றது. அதை விருத்திபூர்வகமாய்ச் சொல்லவேண்டும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். இந்த ஸ்தூலசரீரம் இளமையினாலும், நோயின்மையினாலும், அன்னஞ் சமமானதினாலும் விருத்தியாகின்றது; அன்னமில்லாமையினாலும், அன்ன மதிகமானதினாலும், வியாதியினாலும், முதுமையினாலும் சீரணமாகின்றது.

ச-கை. சூட்சுமசரீர மெப்படியென்னில்,

உ-ம். ராகத்துவேஷாகாரமாய்ப் பரிணமிக்கிறது விருத்தி; அவற்றின் சங்கோசமே சீரணத்துவம்.

ச-கை. ஆனால் காரணசரீர மெப்படியென்னில்,

உ-ம். அக மமதாதி யானெனதென்கிற வபிமானத்தினாற் பரிணமிக்கிறது விருத்தி; அவற்றின் சங்கோசமே சீரணத்துவம்.

ச-கை. சூட்சுமகாரண சரீரத்திற்கு விருத்தி சீரணத்துவம் எங்கே காணப்படுகிறதென்னில்,

உ-ம். அஞ்ஞானிகளிடத்தில் விருத்தியும், முமூட்சுக்களிடத்திற் சங்கோசமுங் காணப்படுகின்றது. ஆகையினாலிதுகளுக்குஞ் சரீரமென்று பெயர்வந்தது.

ச-கை. தேகமென்று பெயர் ஏன்வந்ததென்னில்,

உ-ம். தகிக்கப்படுகின்றபடியினால் தேகமென்று பெயர் வந்தது.

ச-கை. தகிக்கப்படுகின்றதா வென்னில்,

உ-ம். தகிக்கப்படுகின்றது.

ச-கை. எப்படி யென்னில்,

உ-ம். அக்கினியில் பஸ்மாகாரமாகத் தகிக்கப்படுகின்றது.

ச-கை. இறிது சரீரமல்லவோ தகிக்கப்படுகின்றது. ஆனாலும் சூட்சுமகாரணசரீரங்கள் தகிக்கப்படுகிறதாவென்னில்,

உ-ம். அதுகளுந் தகிக்கப்படுகிறது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சார்வதா தாபத்திரயங்களினால் தகிக்கப்படுகிற சூட்சுமகாரண சரீரம் ஞானாக்கினியினால் தகிக்கப்படுகிறது. ஆகையினா லிம்மூன்று சரீரத்திற்குந் தேகமென்று பெயர் வந்தது.

ச-கை. முன் சரீரத்திற்கு ஸ்தூலசரீரமென்றுபெயர் ஏன்வந்ததெனில்,

உ-ம். மயிர் தோல் நரம்பு தசை எலும்பு கொழுப்பு இந்த ஆறும் ஸ்தம்பம்போற் பிரத்தியக்ஷத்தில் ஸ்தூலமாய்த் தோற்றுகிறபடியினால் ஸ்தூலசரீரமென்று பெயர் வந்தது.

ச-கை. மத்தியசரீரத்திற்குச் சூட்சுமசரீரமென்று பெயர் ஏன் வந்ததென்னில்,

உ-ம். பூர்வசரீரம்போல் ஸ்தூலமாய்த் தோற்றாதபடியினால் சூட்சுமசரீரமென்று பெயர்வந்தது.

ச-கை. இதற்கு இலிங்கசரீரமென்று பெயர் ஏன்வந்ததென்னில்,

உ-ம். ஈனமான சத்தாதிவிஷயங்களை யறியப்பண்ணுகிற படியினாலும், ஆத்மாவை லக்ஷணத்தினா லறியப்பண்ணுகிறபடியினாலும் இலிங்கசரீரமென்று பேர்வந்தது.

ச-கை. பச்சிமசரீரத்திற்குக் காரணசரீரமென்று பெயர் ஏன்வந்ததென்னில்,

உ-ம். இவ்விரண்டு சரீரங்களையும் பிறப்பிக்கிறபடியினா லதற்குக் காரணசரீரமென்று பெயர்வந்தது.

ச-கை. ஸ்தூலசரீரம் பிரத்தியக்ஷமாய்த் தெரிகிறபடியினால் உண்டென்று சொல்லலாம். அதுபோல் சூட்சுமசரீரம் பிரத்தியக்ஷமாய்த் தெரியாதபடியினால் ஸ்தூலத்திற்கந்நியமான சூட்சுமசரீரத்தை எப்படி யுண்டென்று சொல்லுகிறதென்னில்,

உ-ம். பதினேழுவிதமான காரியத்தைக் குறித்துச் சூட்சுமசரீரமு முண்டென்று சொல்லலாம்.

ச-கை. இந்தப் பதினேழுவிதமான காரியங்களும் ஸ்தூலசரீரத்தினாலேயே செய்யப்படுகிறதென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். சுழுத்தி மூர்ச்சை மரணம் வந்தபோது இந்த ஸ்தூலசரீரத்தின்ற் பதினேழுவிதகாரியமும் பண்ணவேண்டும். பண்ணாதபடியினால் ஸ்தூலசரீர காரியமென்று சொல்லக்கூடாது.

ச-கை. மற்றெதினுடைய காரியமென்னில்,

உ-ம். ஸ்தூலத்திற் கந்நியமான சூட்சுமசரீர காரியமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. ஸ்தூலத்தைவிட்டுச் சூட்சுமசரீரஞ் சுதந்தரமா யொருகாரியமுஞ் செய்யாதபடியினால் சூட்சுமசரீர காரியமென் றெப்படி யறிகிறதென்னில்,

உ-ம். அறியலாம். எப்படி யென்றால் திருஷ்டாந்தத்தில் அக்கினியானது கட்டையை யனுசரித்துச் சுட்டுத் தன்னுருவமாக்கிக்கொண்டு தாகபாகாதிக் கிரியைகளைப் பண்ணினாலும் அந்தத் தாகபாகாதிக் கிரியைகள் கட்டையின் காரியமல்லாதுபோல சூட்சுமசரீரமும் ஸ்தூலத்தை யாசிரயித்துப் பதினேழுவிதமான காரியங்களைப் பண்ணினபோதும் கேவலமான ஸ்தூலத்திற் கந்நியமான சூட்சும சரீரத்தின் காரியமென்றே யறியவேண்டும்.

ச-கை. ஆனால் பதினேழுவிதமான காரிய மேதென்னில்,

உ-ம். காரணமுன்னில்லையா யறியவேண்டும்.

ச-கை. காரணமாவ தேதென்னில்,

உ-ம். பதினேழுவித அவயவங்களான சூட்சுமசரீரமே காரணம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஞானேந்திரிய பஞ்சகமும், கன்மேந்திரிய பஞ்சகமும், பிராணாதி பஞ்சகமும், சித்தத்தோடுங் கூடினமனதும், ஆங்காரத்துடன்கூடின புத்தியுமாகிய இந்தப் பதினேழுங்கூடிச் சூட்சும சரீர மென்னப்படும்.

ச-கை. ஞானேந்திரிய பஞ்சகமாவ தேதென்னில்,

உ-ம். சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் ஆ 5.

ச-கை. சுரோத்திராதிகளுக்கு ஞானேந்திரியமென்ற பெயரேன் வந்ததென்னில்,

உ-ம். சத்தாதி விஷயங்களைக் கிரகிக்கிறபடியினால் ஞானேந்திரியமெனப் பெயர்வந்தது.

ச-கை. இதற்கு ஞானோற்பத்தி யெப்படி வந்ததென்னில்,

உ-ம். சாத்துவித குணத்தி லுற்பத்தியாகையினால் ஞானம்வந்தது.

ச-கை. கன்மேந்திரிய பஞ்சகமாவதேதென்னில்,

உ-ம். வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் ஆ 5.

ச-கை. இதற்குக் கன்மேந்திரியமென்று பெயரேன் வந்ததென்னில்,

உ-ம். வசனாதிக்கிரியைகளைப் பிறப்பிக்கிறபடியினால் கன்மேந்திரிய மென்னப்பட்டது.

ச-கை. இதற்குக் கிரியாவுற்பத்தி யெப்படி வந்ததென்னில்,

உ-ம். ராசதகுணத்தி லுற்பத்தியாகையினால் கிரியாவுற்பத்தி வந்தது.

ச-கை. பிராணாதிபஞ்சகமாவதேதென்னில்,

உ-ம். பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் ஆ 5.

ச-கை. இதற்குப் பிராணாதியென்று பெயரேன் வந்ததென்னில்,

உ-ம். ஸ்தூலசரீரத்தைச் சீவிக்கப் பண்ணுகிறபடியால் பிராணாதியெனப் பெயர்வந்தது.

ச-கை. மனம் புத்தியாவதேதென்னில்,

உ-ம். அந்தக்கரணவிருத்தி விசேஷங்களே மனம் புத்தி யென்னப்படும்.

ச-கை. ஆனால் சுரோத்திரேந்திரிய மெவ்வகைப்பட்டதென்னில்,

உ-ம். சத்தங்களெல்லா மெதினாற் கிரகிக்கப்படுகிறதோ அதுவே சுரோத்திரேந்திரியம்.

ச-கை. அந்தச் சத்த மெத்தனைவகைப்படு மென்னில்,

உ-ம். லௌகீகம் வைதீகமென் றிரண்டுவகைப்படும்.

ச-கை. லௌகீகமாவதேதென்னில்,

உ-ம். பிராகிருதரூபமான பதினெண் பாஷைகளும் லௌகீகம்.

ச-கை. வைதீகமாவ தேதென்னில்,

உ-ம். அப்பிராகிருதரூபமான வேதசாஸ்திரங்க ளனைத்தும் வைதீகம்.

ச-கை. இந்த லௌகீக மெத்தனைவித மென்னில்,

உ-ம். அனந்தவிதமா யிருக்கும்.

ச-கை. வைதீக மெத்தனைவித மென்னில்,

உ-ம். அதுவு மனந்தவிதமா யிருக்கும். அன்றியில் பஞ்சீகிருத பேதத்தில் சத்த மிருபத்தைந்துவிதம். இத்தனைவித சத்தங்களு மெதினாற் கிரகிக்கப்படுகிறதோ, அஃதே சுரோத்திரேந்திரியம்.

ச-கை. இந்தச் சுரோத்திரேந்திரிய மெங்கேயிருக்கிறதென்னில்,

உ-ம். கர்ண ஷட்குள்ய வவிச்சின்ன நபோதேசத்தை யாசிரயித்திருக்கின்றது.

ச-கை. அந்த நபோதேசமே சுரோத்திரேந்திரிய மென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். சுழுத்தி மூர்ச்சை மரணமடைந்த சரீரங்களிலுமிருக்கிற நபோதேசத்தினாலுஞ் சத்தத்தைக் கிரகிக்கவேண்டும். அங்ஙன மில்லாதபடியினால் அந்த நபோதேசத்திற் கந்நியமாய் சத்தக்கிராகிய சத்திமத்தாய் சூட்சும

மான ஒரு வஸ்து நபோதேசத்தை யாசிரயித்துக்கொண் டிருக்கிறது. அதற்கே சுரோத்திரேந்திரியமென்று பெயர். அதற் கதிட்டான தேவதை திக்கு. அவ் வதிட்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட சுரோத்திரேந்திரியஞ் சத்தமெல்லாமறிந்து பஞ்சீகிருத பேதசத்த மிருப்பதையு மறிந்துகொண்டே யிருக்கும்.

ச-கை. தொக்கிந்திரியமாவ தேதென்னில்,

உ-ம். பரிசமெல்லா மெதினுற் கிரகிக்கப்படுகிறதோ, அதுவே தொக்கிந்திரியம்.

ச-கை. அந்தப் பரிச மெத்தனைவித மென்னில்.

உ-ம். சீத உஷ்ண சீதோஷ்ண மிருது கடினமென் றைந்துவிதம்; அவற்றுள் ஒவ்வொன் றனந்தவிதமா யிருக்கும்.

ச-கை இந்தத் தொக்கிந்திரிய மெங்கே யிருக்கு மென்னில்,

உ-ம். தொக்கைச் சர்வத்திரா வியாபித்துக்கொண் டிருக்கும்.

ச-கை. ஆனல் தொக்கையே தொக்கிந்திரியமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். சுழுத்தி மூர்ச்சை மரண சரீரத்திலிருக்கிற தொக்கினுற் பரிசத்தைக் கிரகிக்கவேண்டும். அங்ஙனங்கிர கியாதபடியினுல் அந்தத் தொக்குக் கந்நியமான ஸ்பரிசக் கிராகிய சத்திமத்தாய் சூட்சுமமான ஒருவஸ்து சிரசுநடு வில் நபோதேசத்திலிருந் திரண்டு கவராய்த் தொக்கைப் பரிசித்துக்கொண்டிருக்கிறது. அதற்கே தொக்கிந்திரிய மென்று பெயர். அதற் கதிட்டான தேவதை வாய்வு. அவ்வதிட்டானதேவதையினுற் பிரேரிக்கப்பட்ட தொக் கிந்திரியம் பரிசத்தையெல்லாமறிந்து பஞ்சீகிருதபேத பரிச மிருப்பதையு மறிந்துகொண்டிருக்கும்.

ச-கை. சட்சு விந்திரியமாவ தேதென்னில்,

உ-ம். ரூபமெல்லா மெதிறுற் கிரகிக்கப்படுகிறதோ, அஃதே சட்சுவிந்திரியம்.

ச-கை. அந்தரூப மெத்தனைவகைப்படு மென்னில்,

உ-ம். வெள்ளை சிவப்பு பச்சை மஞ்சள் கறுப்பு ஊதா மிசிரம் அகலம் நிகளம் உயர்ச்சி தாழ்ச்சி இவற்றுள் ஒவ்வொன் றநேகவிதமா யிருக்கும். இத்தனை ரூபங்களு மெதினுல் தெரியப்படுகிறதோ, அதுவே சட்சுவிந்திரியம்.

ச-கை. அது எங்கே யிருக்குமென்னில்,

உ-ம். கருவிழியை யாசிரயித்துக்கொண்டிருக்கும்.

ச-கை. ஆனுல் கருவிழியே சட்சுவிந்திரியமென்று சொல்லலாமே யென்னில்.

உ-ம். சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களி லிருக்கிற கருவிழியினுல் ரூபத்தை யறியவேண்டும். அங்ஙன மறியாதபடியினுல், கருவிழிக் கந்நியமான ரூபத்தைக் கிரகிக்கிற சத்திமத்தாய் சூட்சுமமாய் ஒருவஸ்து சிரசுநடுவே நபோதெசத்திலிருந்து இரண்டுகவராய்க் குவளைமுன்னிலையி லந்தக் கருவிழியை யாசிரயித்துக்கொண்டிருக்கிறது. அதற்கே சட்சுவிந்திரிய மென்றுபெயர். அதற்கதிட்டானதேவதை சூரியன். அவ்வதிட்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட சட்சுவிந்திரியம் ரூபமெல்லாமறிந்து பஞ்சீகிருதபேத ரூபமிருப்பதையுங் கிரகித்தறிந்துகொண்டிருக்கும்.

ச-கை. சிங்குவை யிந்திரியமாவ தேதென்னில்,

உ-ம். ரசமெல்லா மெதினுற் கிரகிக்கப்படுகிறதோ, அதற்கே சிங்குவையென்று பெயர்.

ச-கை. அந்த ரசமெத்தனைவிதமா யிருக்குமென்னில்,

உ-ம். உப்பு புளிப்பு கார்ப்பு கசப்பு துவர்ப்பு தித்திப்பு என் ருறுவிதம். அவற்று ளொவ்வொன் றநேகவிதமாயிருக்கும் இத்தனையு மெதினுற் கிரகிக்கப்படுகிறதோ, அதுவே சிங்குவேந்திரியம்.

ச-கை. அது எங்கே யிருக்குமென்னில்,

உ-ம். நுனிநாவை யாசிரயித்துக்கொண்டிருக்கும்.

ச-கை. ஆனுல் நுனிநாவையே சிங்குவேந்திரியமென்று சொல்லலாமே யென்னில்.

உ-ம். சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற நுனிநாவினுல் ரசங்களெல்லாங் கிரகிக்கவேண்டும். அப்படி கிரகிக்காதபடியினுல் அந்த நுனிநாவுக் கந்நியமாய் ரசகிராஹ்ய சத்திமத்தாய் சூட்சுமமாய் ஒரு வஸ்து கபாலநடுவில் நபோதெசத்திலிருந்து இரண்டு கவராய் தந்ததாலோஷ்டத்தைப்பற்றி அந்த நுனிநாவை யாசிரயித்துக் கொண்டிருக்கும் அதற்கே சிங்குவேந்திரியமென்று பெயர்- அதற் கதிட்டானதேவதை வருணன். அவ் வதிஷ்டானதேவதையினுற் பிரேரிக்கப்பட்ட சிங்குவேந்திரியம் ரசங்களையெல்லாமறிந்து பஞ்சீகிருத பேத ரசங்களையுங் கிரகித்துக்கொண்டிருக்கும்.

ச-கை. ஆக்கிராணேந்திரியமாவ தேதென்னில்,

உ-ம். சுகந்த துர்க்கந்தமெல்லா மெதினுற் கிரகிக்கப்படுகிறதோ, அதற்கே ஆக்கிராணேந்திரியமென்று பெயர்.

ச-கை. அது எத்தனைவிதமா யிருக்குமென்னில்,

உ-ம். சுகந்த துர்க்கந்த மிசரகந்தமென மூன்றுவிதம். அவற்று ளொவ்வொன் றநேகவிதமாயிருக்கும். இத்தனையு மெதினுற் கிரகிக்கப்படுகிறதோ, அதுவே ஆக்கிராணேந்திரியம்.

ச-கை. அது எங்கேயிருக்கு மென்னில்,

உ-ம். நுனிமூக்கை யாசிரயித்துக்கொண்டிருக்கும்.

ச-கை. ஆனால் நுனிமூக்கையே கிராணேந்திரியமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற நுனிமூக்கினாற் கந்தமறியவேண்டும். அங்ஙன மறியாதபடியினால் நுனி மூக்குக் கந்நியமாய் கந்தகிராஹ்ய சத்திமத்தாய் சூட்சுமமாய் ஒருவஸ்து கபாலத்திலிருந்து முகாரவிந்தவழியாய் இரண்டுகவராய் மூக்குத்தண் டெலும்பைப் பற்றி அந்த நுனிமூக்கை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அதற்கே ஆக்கிராணேந்திரியமென்று பெயர். அதற் கதிஷ்டானதேவதை அசுவினி. அவ் வதிஷ்டான தேவதையாற் பிரேரிக்கப்பட்ட ஆக்கிராணேந்திரியம் கந்தங்களையெல்லாங் கிரகித்து பஞ்சீகிருதபேத கந்தங்களையு மறிந்து கொண்டிருக்கும்.

ச-கை. கன்மேந்திரியங்களில் வாக்கிந்திரியமாவ தேதென்னில்,

உ-ம். சத்தமெல்லா மெதினா லுச்சரிக்கப்படுகிறதோ, அதுவே வாக்கிந்திரியம்.

ச-கை. அது எங்கே யிருக்கிறதென்னில்,

உ-ம். நுனிநா தாலுமூலம் மேலுதடு கீழுதடு பல் கண்டம் இருதயம் பிரமரந்திரமென்கிற அஷ்டதானங்களையு மாசிரயித்துக்கொண்டிருக்கும்.

ச-கை. ஆனாலந்த அஷ்டதானங்களையே வாக்கிந்திரியமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற அஷ்டதானங்களினாற் சத்தங்க ளுச்சரிக்கப்படவேண்டும். அங்ஙன மில்லாதபடியினால் அவ் வஷ்டதானங்களுக்கு மந்நியமாய் சத்த முச்சரிக்கிற சத்திமத்தாய் சூட்சுமமாய்

ஒருவஸ்து முகாரவிந்தத்திலிருந்து அவ்ஷ்டதானங்களையு மாசிரயித்துக்கொண்டிருக்கும். அதற்கே வாக்கிந்திரிய மென்று பெயர். அதற்கதிஷ்டான தேவதை அக்கினி. அவ்வதிஷ்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட வாக்கிந் திரியஞ் சத்தமெல்லா முச்சரித்துக்கொண்டிருக்கும்.

ச-கை. பாணீந்திரியமாவ தேதென்னில்,

உ-ம். கொடுக்கல் வாங்கல் முதலான கிரிகைக ளெதி னாற் செய்யப்படுகிறதோ, அதற்குப் பாணீந்திரியமென்று பெயர்.

ச-கை. அது எங்கே யிருக்குமென்னில்,

உ-ம். உள்ளங்கையி லாசிரயித்துக்கொண்டிருக்கும்.

ச-கை. ஆனால் உள்ளங்கையே பாணீந்திரிய மென்ன லாமே யென்னில்,

உ-ம். சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களி லிருக்கிற வுள்ளங்கையினாலுந் தானாதிக்கிரியைகளைப் பண்ணவேண் டும். பண்ணாதிருக்கிறபடியால் உள்ளங்கைக் கந்நியமாய் தானாதிக் கிரியாசத்திமத்தாய் சூட்சுமமாய் ஒருவஸ்து முகாரவிந்தத்தி லிருந்து உள்ளங்கையை யாசிரயித்துக் கொண்டிருக்கும். அதற்கே பாணீந்திரியமென்று பெயர். அதற் கதிஷ்டான தேவதை இந்திரன். அவ் வதிஷ்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட பாணீந்திரியங் கொடுக் கல் வாங்கலாகிற கிரியைகளைச் செய்யும்.

ச-கை. பாதேந்திரியமாகிற தேதென்னில்,

உ-ம். கமனாதி கிரியைகளை யெதினாற் செய்யப்படுகிற தோ, அதற்குப் பாதேந்திரியமென்று பெயர்.

ச-கை. அது எங்கே யிருக்குமென்னில்,

உ-ம். உள்ளங்காலை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அதுவே பாதேந்திரியம்.

ச-கை. ஆனா லுள்ளங்காலையே பாதேந்திரியமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களி லிருக்கிற வுள்ளங்காலினால் கமனாதிக்கிரியைகளைப் பண்ணவேண்டும். பண்ணாதபடியினால் உள்ளங்காலுக் கந்நியமாய் கமனாதிக் கிரியாசத்திமத்தாய் சூட்சுமமாய் ஒருவஸ்து முகாரவிந் தத்திலிருந் திரண்டு கவராய் உள்ளங்காலை யாசிரயித்துக் கொண்டிருக்கும். அதற்கே பாதேந்திரியமென்று பெயர். அதற் கதிஷ்டானதேவதை உபேந்திரன். அவ்வதிஷ்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட பாதேந்திரியங் கமனாதிக் கிரியைகளைப் பண்ணும்.

ச-கை. பாயு ரிந்திரியமாவ தேதென்னில்,

உ-ம். மலவிசர்க்கனாதிக் கிரியைக ளெதினாற் செய்யப் படுகின்றதோ, அதற்குப் பாயு ரிந்திரியமென்று பெயர்.

ச-கை. அது எங்கே யிருக்குமென்னில்,

உ-ம். குதத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அதுவே பாயு ரிந்திரியம்.

ச-கை. ஆனால் குதத்தையே பாயு ரிந்திரிய மென்ன லாமேயெனில்,

உ-ம். சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களி லிருக்கிற குதத்தினாலும் விசர்க்கனாதிக் கிரியைகளைச் செய்யவேண் டும். அப்படிக் கில்லாதபடியினால் குதத்திற் கந்நியமாய் மலவிசர்க்கனாதிக் கிரியாசத்திமத்தாய் சூட்சுமமாய் ஒரு வஸ்து முகாரவிந்தத்திலிருந்து குதத்தை யாசிரயித்துக் கொண்டிருக்கும். அதற்கே பாயு ரிந்திரியமென்று பெயர். அதற் கதிஷ்டான தேவதை மிருத்திவு. அவ் வதிஷ்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட குதேந்திரிய மலவிசர்க்க னாதிக் கிரியைகளைப் பண்ணும்.

ச-கை. உபஸ்தேந்திரியமாவ தேதென்னில்,

உ-ம். சுக்கில மூத்திர விசர்க்கனதிக் கிரியைக ளெதினுற் செய்யப்படுகிறதோ, அதற்கு உபஸ்தேந்திரியமென்று பெயர்.

ச-கை. அது எங்கே யிருக்குமென்னில்,

உ-ம். யோனி லிங்கங்களை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அதுவே யுபஸ்தேந்திரியம்.

ச-கை. யோனி லிங்கங்களையே யுபஸ்தேந்திரியமென்று சொல்லலாமேயென்னில்,

உ-ம். சுழுத்தி மூர்ச்சை மரண சரீரங்களிலிருக்கிற யோனி லிங்கங்களினலும் சுக்கில மூத்திர விசர்க்கனதிக் கிரியைகள் பண்ணவேண்டும். பண்ணுதபடியினல் யோனி லிங்கங்களுக் கந்நியமாய் சுக்கில மூத்திர விசர்க்கனதிக் கிரியாசத்திமத்தாய் சூட்சுமமாய் ஒருவஸ்து முகார விந்தத்திலிருந்து யோனி லிங்கங்களை யாசிரயித்துக்கொண்டிருக்கும். அதற்கு உபஸ்தேந்திரியமென்று பெயர். அதற்கதிஷ்டானதேவதை பிரஜாபதி. அவ் வதிஷ்டான தேவதையினற் பிரேரிக்கப்பட்ட உபஸ்தேந்திரியம் சுக்கில மூத்திர விசர்க்கனதி கிரியைகளைப் பண்ணும்.

ச-கை. பிராணுதி பஞ்சகத்தில் பிராணவாயுவாவ தேதென்னில்,

உ-ம். உசுவாச மெதினுற் பண்ணப்படுகின்றதோ, அதற்குப் பிராணவாயுவென்று பெயர். அதற்கு ஸ்தானம் இருதயம். அதற்கதிஷ்டானதேவதை விசிட்டன். அவ் வதிஷ்டான தேவதையினுற் பிரேரிக்கப்பட்ட பிராண வாயுவு உசுவாசம் பண்ணிக்கொண்டிருக்கும்.

ச-கை. அபானவாயுவாவ தேதென்னில்,

உ-ம். நிசுவாச மெதினாற் பண்ணப்படுகிறதோ, அதற் கபானவாயு வென்று பெயர். அதற்கு ஸ்தானங் குதம். அதற் கதிஷ்டான தேவதை விசுவகர்த்தா. அவ்வதிஷ் டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட அபானவாயுவு நிசுவாசம் பண்ணிக்கொண்டிருக்கும்.

ச-கை. வியானவாயுவாவ தேதென்னில்,

உ-ம். சரீரத்தைப் பலப்படநிறுத்தி யிந்திரியங்களுக் குப் பலனைக் கொடுத்துக்கொண்டிருக்கிற தெதுவோ, அத ற்கு வியானவாயு வென்று பெயர். அதற்கு ஸ்தானம் சர்வசரீரம். அதற்கதிஷ்டான தேவதை விசுவயோனி. அவ்வதிஷ்டானதேவதையினாற் பிரேரிக்கப்பட்ட வியான வாயுவு இந்திரியங்களுக்குப் பலனைக்கொடுத்துச் சரீரமெல் லாம் வியாபித்திருக்கும்.

ச-கை. உதானவாயுவாவ தேதென்னில்,

உ-ம். சுழுத்திகாலம் வந்தபோது சகலவிந்திரியங் களையு மொடுக்கிக்கொண்டு தனக்குக் காரணமான அஞ் ஞானத்தி லெது லயிக்கப்பண்ணுகிறதோ, சாக்கிராவஸ் தையி லந்தந்த இந்திரியங்களை யந்தந்தவிடத்தி லெது நிறுத்துகிறதோ, மரணகாலம் வந்தபோது சகல விந்திரி யங்களையுங் கிரகித்துக்கொண்டு லோகாந்தரத்திற் கெது போகிறதோ, அஃதே யுதானவாய்வு. அதற்கு ஸ்தானங் கண்டம். அதற் கதிஷ்டானதேவதை பிரமதேவன். அவ் வதிஷ்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட உதானவாயு இத்தியாதி தொழில்களை நடத்தும்.

ச-கை. சமானவாயுவாவ தேதென்னில்,

உ-ம். உண்டல் குடித்தல் உறிஞ்சல் நக்கலென்கிறநாலு வித வுண்டிகளைச் சாடராக்கினியோடுகூடி யுபசமனம் பண் ணிச் சரீரத்திற் கெது புஷ்டிசெய்விக்கிறதோ, அதற்குச்

சமானவாயு வென்று பெயர். அதற்கு ஸ்தானம் நாபி. அதற் கதிஷ்டான தேவதை க்ஷயன். அவ் வதிஷ்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட சமானவாயுவு மேற்சொல்லிய கிரியைகளைச் செய்யும். இதுவன்றி உபவாயுக் களெங்கும் இதற்குள் அந்தர்ப் பூதமாயிருக்கின்றது. தொழில் மாத்திரம் வேறு. அதிதேவதையும் ஸ்தானமுமொன்றாக விருக்கும்.

ச-கை. அந்த வாயுக்களாவ தேதென்னில்,

உ-ம். நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்று பஞ்சவாயுக்கள். அவற்றுள் வாந்திசெய்விப்பது நாகன்; விக்கல் ஏப்பம் இமைப்பு விழிப்புகளைச் செய்விப்பது கூர்மன்; தும்ம லிருமலைச் செய்விப்பது கிரிகரன்; சிரித்தல் வசனித்தலைக் செய்விப்பது தேவதத்தன்; துர்க்கந்தமாக்கிச் சரீரம் வீங்கப்பண்ணி தலை வெடிக்கச் செய்வது தனஞ்சயன் என்று சொல்லப்படும்.

ச-கை. அந்தக்கரண சதுஷ்டயத்தில் மனமாவ தேதென்னில்,

உ-ம். சங்கற்ப விகற்ப மெதினாற் பண்ணப்படுகிறதோ, அதுவே மனம்.

ச-கை. அது எங்கே யிருக்குமென்னில்,

உ-ம். கண்டத்தின் கீழிருக்கும். அதற் கதிஷ்டான தேவதை சந்திரன். அவ் வதிஷ்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட மனஞ் சங்கற்ப விகற்பம் பண்ணிக் கொண்டிருக்கும்.

ச-கை. புத்தியாவ தேதென்னில்,

உ-ம். நிச்சயமெல்லா மெதினாற் பண்ணப்படுகிறதோ, அதுவே புத்தி.

ச-கை. அது எங்கே யிருக்குமென்னில்,

உ-ம். முகத்திலிருக்கும். அதற் கதிஷ்டான தேவதை சதுர்முகன். அவ் வதிஷ்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட புத்தி நிச்சயமெல்லாம் பண்ணிக்கொண்டிருக்கும்.

ச-கை. அகங்காரமாவ தேதென்னில்,

உ-ம். அபிமானமெல்லா மெதினாற் செய்யப்படுகிறதோ, அதுவே யகங்காரம்.

ச-கை. அது எங்கே யிருக்குமென்னில்,

உ-ம். இருதயத்திலிருக்கும். அதற் கதிஷ்டான தேவதை ருத்திரன். அவ் வதிஷ்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட அகங்காரம் அபிமானமெல்லாம் பண்ணிக்கொண்டிருக்கும்.

ச-கை. சித்தமாவ தேதென்னில்,

உ-ம். சிந்தனையெல்லா மெதினாற் செய்யப்படுகிறதோ, அதுவே சித்தம்.

ச-கை. அது எங்கே யிருக்குமென்னில்,

உ-ம். நாபிப் பிரதேசத்தி லிருக்கும். அதற் கதிஷ்டான தேவதை விஷ்ணு. அவ் வதிஷ்டான தேவதையினாற் பிரேரிக்கப்பட்ட சித்தம் சிந்தனையெல்லாம் பண்ணிக்கொண்டிருக்கும். அதுவுமன்றி இந்த இலிங்கசரீரம் ஷோடசாத்மகமென்று ஒரு சுருதியிற் சொல்லுகிறது. அந்தப் பக்ஷத்தில் அந்தக்கரண மஞ்சுளொன்று மாத்திரமேயாகும். பதினேழென்று ஒரு சுருதியிற் சொல்லுகின்றது. அந்தப் பக்ஷத்தில் மனமுஞ் சித்தமும் ஒன்றென்றும், புத்தியு மகங்காரமு மொன்றென்றாகும். பத்தொன்பதென்று ஒரு சுருதியிற் சொல்லுகின்றது. அந்தப் பக்ஷத்தி லந்தக்கரணங்கள் நாலையுஞ் சொல்லுவதாகும். அப்படி எத்தனை விதமாகச் சொன்னாலும் விரோதமில்லை. இப்படி பதி

னேழுவித காரியங்களின்றும் பதினேழு அவயவமான இலிங்க சரீரமுண்டென்று நிச்சயிக்கப்பட்டது.

ச-கை. காரணசரீர முண்டென் றெப்படி யறிகிற தென்னில்,

உ-ம். காரியமான ஸ்தூலசூட்சுமமென்னும் இரண்டு சரீரங்கள் காணப்படுகிறபடியினால், இதுகளுக்குக் காரணமொன் றுண்டென்று யுத்திபண்ணவேண்டியது.

ச-கை. காரியத்தினால் காரணத்தை யூகித்தறியலாமா வென்னில்,

உ-ம். காரியமான புகையினாற் காரணமான அக்கினி யுண்டென்று யூகித்தறிவதுபோலக் காரியமான ஸ்தூல சூட்சும சரீரங்களினாற் காரணமான சரீரமுண்டென்று யூகித்தறியலாம். அல்லாமலும் அகமஞ்ஞானியென்று பிரத்தியக்ஷமா யனுபவிக்கிறபடியினாற காரணசரீர முண்டென்று நிச்சயிக்கலாம். இப்படி நிச்சயம்பண்ணின பிறகு ஆத்மாவுக்குச் சரீரத்திரய விலக்ஷணத்துவ மெப்படியென்று விசாரிக்கவேண்டும்.

ச-கை. ஆத்மாவுக்குச் சரீரத்திரய விலக்ஷணமாவ தே தென்னில்,

உ-ம். ஆத்மலக்ஷணஞ் சரீரத்திரயத்திலும், சரீரத்திரய லக்ஷண மாத்மாவிலு மில்லாதிருக்கிறதே சரீரத்திரய விலக்ஷணம்.

ச-கை. ஆனால் ஆத்மலக்ஷண மேதென்னில,

உ-ம். சத்து சித்து ஆனந்தமே யாத்மலக்ஷணம்.

ச-கை. அனாத்மலக்ஷண மேதென்னில்,

உ-ம். அசத்து சடம் துக்கமே யனாத்மலக்ஷணம்.

ச-கை. இந்த லக்ஷணங்களுக் கந்நியோந்நிய விலக்ஷணமுண்டோ வென்னில்,

உ-ம். உண்டு. திருஷ்டாந்தத்தில் ஸ்திரீ லக்ஷணம் புருஷனிடத்திலும், புருஷலக்ஷணம் ஸ்திரீயினிடத்திலு மில்லாதுபோற் சத்துலக்ஷண மசத்திலும், அசத்துலக்ஷ ணஞ் சத்திலுமில்லை. பிரகாசலக்ஷணம் அந்தகாரத்திலும், அந்தகார லக்ஷணம் பிரகாசத்திலு மில்லாததுபோலச் சித்துலக்ஷணஞ் சடத்திலுஞ் சடலக்ஷணஞ் சித்திலுமில்லை. சந்திரலக்ஷணஞ் சூரியனிலும், சூரியலக்ஷணஞ் சந்திரனிலு மில்லாததுபோல ஆனந்தலக்ஷணந் துக்கத்திலும், துக்க லக்ஷண மானந்தத்திலு மில்லை. இப்படி சச்சிதானந்தத் துக்கும், அசத்து சடந் துக்கத்துக்கும் அந்நியோந்நிய விலக்ஷணத்துவமாகச் சத்துலக்ஷணமும், அசத்துலக்ஷண மும், சித்துலக்ஷணமும் சடலக்ஷணமும், ஆனந்தலக்ஷண மும், துக்கலக்ஷணமுமுண்டு. இதுகளை விசாரித்தறியா மல் ஆத்மாவின் அந்நியோந்நிய விலக்ஷணத்துவ மறியக் கூடாது.

ச-கை. சத்துலக்ஷணமாவ தேதென்னில்,

உ-ம். ஒன்றினாலும் வாதிக்கப்படாமல் பூத பவுஷிய வர்த்தமான காலத்திலும் ஏகரூபமாயிருக்கிற தெதுவோ அதுவே சத்துலக்ஷணம்.

ச-கை. அசத்துலக்ஷணமாவ தேதென்னில்,

உ-ம். காலத்திரயத்திலு மில்லாததாயிருந்துந் தோற் றிக்கொண்டு, ஒன்றினால் வாதிக்கப்பட்டுப் போகிற தெது வோ, அதுவே அசத்துலக்ஷணம்.

ச-கை. இதற்குத் திருஷ்டாந்தமுண்டோ வென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அது எப்படியென்னில்,

உ-ம. பழுதையும், பழுதையினிடத் தாரோபிக்கப் பட்ட பாம்புமே திருஷ்டாந்தம்.

ச-கை. பழுதையினிடத்தில் சத்துலக்ஷணமும், அசத்துலக்ஷணமு முண்டோவென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அது எப்படியென்னில்,

உ-ம். பழுதையினிடத்தி லாரோபிக்கப்பட்ட சர்ப்ப முதலான பயபீதிகளாகிற ஒன்றினாலும் அந்தப் பழுதை வாதிக்கப்படாமல், பிராந்திகாலத்திலும் பிராந்திக்குப் பூர்வகாலத்திலும் பிராந்திபோன பிற்காலத்திலும் ஏகரூபமாயிருந்ததே சத்துலக்ஷணம். தானில்லாதிருந்துந் தோற்றிக்கொண்டு ஒன்றினால் வாதிக்கப்பட்டுப் போகிறதே அசத்துலக்ஷணம். இது சர்ப்பத்தினிடததிலுமுண்டு. பழுதைலக்ஷணம் பாம்பினிடத்தில்லாதபடியினாலும், பாம்புலக்ஷணம் பழுதையினிடத்தில்லாதபடியினாலும் அந்தப் பாம்பு பழுதைகளுக்குச் சத்தத்தினாலும் அர்தத்தினாலும் லக்ஷணத்தினாலும் உபமானத்தினாலும் விவகாரத்தினாலும் பேதலக்ஷண முண்டாயிருப்பதுபோலச் சத்துலக்ஷணம் தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்தினிடத்தி லில்லாதபடியினாலும் அசத்துல்க்ஷணஞ் சத்தான ஆத்மாவினிடத்தி லில்லாதபடியினாலும் சத்துக்கும் அசத்துக்கும் சத்தத்தினாலும் அர்த்தத்தினாலும் லட்க்ஷணத்தினாலும் உபமானத்தினாலும் விவகாரத்தினாலும் பேதமுண்டு.

ச-கை. இதினாலென்ன சித்தித்ததென்னில்,

உ-ம். சத்தென்ற சத்தம் அசத்தென்ற சத்தமாகாது; அசத்தென்ற சத்தம் சத்தென்றசத்தமாகாது. சத்தினுடைய சத்தார்த்தம் அசத்தினுடைய சத்தார்த்தமாகாது. அசத்தினுடைய சத்தார்த்தம் சத்தினுடைய சத்தார்த்தமாகாது. சத்தினுடைய லக்ஷணம் அசத்தினுடைய லக்ஷணமல்ல; அசத்தினுடைய லக்ஷணம் சத்தினுடைய லக்ஷணமல்ல; சத்தினுடைய வுபமானம் அசத்தினுடைய வுபமான

மல்ல; அசத்தினுடைய வுபமானம் சத்தினுடைய வுபமான மல்ல. சத்தினுடைய விவகாரம் அசத்தினுடைய விவகார மல்ல; அசத்தினுடைய விவகாரஞ் சத்தினுடைய விவகார மல்ல. ஆகையினால் சத்துரூபமான ஆத்மாவுக்கும், அசத்து ரூபமான தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்திற்கும் பழுதை யும் பாம்பும் போல ஐந்துவகையினாலுங் காலத்திரயத்தி லும் அன்னியோன்னிய பேதலக்ஷணஞ் சித்தித்தது.

ச-கை. சித்துலக்ஷண மேதென்னில்,

உ-ம். ஒருசாதனமு மபேக்ஷியாமல் தானுந் தோற் றிக்கொண்டு, தன்னிடத்தி லாரோபிக்கப்பட்ட பதார்த்தங் களையுந் தோற்றி வைக்கிற தெதுவோ, அதுவே சித்து லக்ஷணம்.

ச-கை. சடலக்ஷண மேதென்னில்,

உ-ம். தானுந் தோற்றாமல் அன்னியவஸ்துவையுந் தோற்றிவையாம லிருக்கிறதெதுவோ, அதுவே சடலக்ஷ ணம்.

ச-கை. இதற்குத் திருஷ்டாந்த முண்டோவென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சூரியப்பிரகாசத்தினால் விளங்குகிற கடங்க ளும் சூரியப்பிரகாசமுந் திருஷ்டாந்தம்.

ச-கை. ஆதித்தனிடத்திற் சித்துலக்ஷண முண்டோ வென்னில்,

உ-ம். திருஷ்டாந்தமெல்லா மேகதேச மாகையினால் ஏகதேச திருஷ்டாந்தமான ஆதித்தனிடத்திற் சித்து லக்ஷணமுண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஆதித்தன் பிரகாசாந்தரங்களை யபேக்ஷியாமல் தானுந் தோற்றிக்கொண்டு, தற்பிரகாசத்தைச் சம்பந்தித்திருக்கிற கடங்களையுந் தோற்றிவைக்கிறபடியா லாதித்தனிடத்திற் சித்துலக்ஷணமுண்டு.

ச-கை. கடத்தினிடத்திற் சடலக்ஷண முண்டோ வென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். தானுந் தோற்றாமல் அன்னியவஸ்துவையுந் தோற்றிவைக்க மாட்டாதபடியினால், சடலக்ஷணமுண்டு. ஆகையால் ஆதித்த லக்ஷணங் கடத்தில்லாதபடியினாலுங் கடலக்ஷணம் ஆதித்தனி லில்லாதபடியினாலும் ஆதித்தனுக்குங் கடத்துக்குஞ் சத்தம் அர்த்தம் லக்ஷணம் உபமானம் விவகாரமென்கிற ஐவகையினாலும் பேதலக்ஷண முண்டானதுபோலச் சித்துலக்ஷணம் சடமான தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்தினிடத்திலும், சடலக்ஷணம் சித்தாகிற ஆத்மாவினிடத்திலு மில்லை. ஆனபடியினால் சித்துக்கும் சடத்துக்கும் முன்சொன்ன ஐவகையினாலும் பேதலக்ஷண முண்டு.

ச-கை. இதனாலென்ன சித்தித்ததென்னில்,

உ-ம். அப்பிரகாச சுபாவமான சடவிகாரத்தினால் சொப்பிரகாசமான சித்தாகிய வாத்மாவுக்குக் காலத்திரயத்திலும் சம்பந்தமில்லையென்று அன்னியோன்னிய பேதலக்ஷணஞ் சித்தித்தது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். பிரகாசத்தினால் விளங்கப்பட்ட கடசுபாவமான விகாரங்களாகிற சித்திர அசித்திரத்தினாலும், நஷ்டலாபத்தினாலும், உற்பத்தி அனுற்பத்தியினாலும், அற்புதம்

அனற்புதத்தினுலும், பிரத்திவாய அப்பிரத்திவாயங்களி னுலும், உத்தம மத்திமங்களினுலும், இன்ப துன்பத்தினு லும், சமானம் அசமானத்தினுலும், அதிசயம் அனதிசயத் தினுலும், பிரகாசனுன ஆதித்தனை யெப்படி பரிசிக்கவில்லை யோ அப்படிபோல அப்பிரகாச தேக சுபாவமான விகா ரங்களும், குண தர்ம சாதி நாம வர்ணுசிரமாதிக் கிரியை களும், கர்த்துருத்துவ போக்துருத்வங்களும், காமக் குரோ தங்களுந் தேகேந்திரியாதிகளுக்கே யல்லாமல் சர்வப்பிர காசனுய் தேகேந்திரியாதிகளுக்குச் சாட்சியாய் சித்துருப னுன ஆத்மாவை லேசமும் பரிசிக்கவில்லையென்று சித் தித்தது.

ச-கை. ஆனுல் ஆனந்தலக்ஷண மேதென்னில்,

உ-ம். நிருபாதிகமாய் நிரதிசயமாய் நித்தியமான சுக சொரூபமே யானந்தலக்ஷணம்.

ச-கை. துக்கலக்ஷண மேதென்னில்,

உ-ம். தாபத்திரயாத்மகமே துக்கலக்ஷணம்.

ச-கை. இதற்குத் திருஷ்டாந்தமுண்டோ வென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். புதுப்பானையிலிருக்கிற குளிர்ந்த ஜலமும் வெங் கலப் பானையிலிருக்கிற புளியநெருப்புமே திருஷ்டாந்தம்.

ச-கை. ஜலத்தி லானந்தலக்ஷண மிருக்கின்றதா வென் னில்,

உ-ம். இருக்கின்றது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். வெய்யிலி லடிபட்டுத் தபிக்கப்பட்ட புருஷன் அந்தக் குளிர்ந்த நீர்ப்பானையைத் தொட்டுக் கண்ணி லொற்றிக்கொண்டமாத்திரத்தில் அவனுடைய தாபம்

நிவிர்த்தியாகின்றது. அது சாக்ஷாத் ஜலமல்ல. அந்த ஜலத்தின் ஆவேசமாத்திரத்துக்கே தாபநிவிர்த்தியிருப்பது பிரத்தியக்ஷமாகக் கண்டோம். அந்த ஜலத்தையே பானம் பண்ணிறுற் சகல தாபங்களும் போமென்பதிற் சந்தேக மில்லை. ஆகையினுல் அந்த ஜலத்தினிடத்தி லானந்த லக்ஷணமுண்டு.

ச-கை. புளியநெருப்பில் துக்கலக்ஷணமுண்டோ வென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். தாகதாபாதிக ளில்லாதவன் புளியநெருப்போடு கூடியிருக்கிற வெங்கலப் பானையைத் தொட்டமாத்திரத்தில் அந்தப் பானையின் உஷ்ணம் சுபாவத்தினுல் அதைத் தொட்டவனுக்குத் தாபாதிகளைக்கொடுத்துக் கையெல்லாங் கொப்புளிக்கச் செய்கின்றது. அது சாக்ஷாத் நெருப்பல்ல. நெருப்பினுடைய ஆவேசமாத்திரமே தாபாதிகளைக் கொடுக்கின்றதென்று பிரத்தியக்ஷமாகக் கண்டோம். அந்த நெருப்பையே தொட்டாற் சமஸ்தத்தையும் பஸ்மமாக்குமென்பதற்குச் சர்வானுபவ சித்தமாகையினுல் அந்தப் புளியநெருப்பினிடத்தில் துக்கலக்ஷணமுண்டு. இதுவுமன்றியில் வேறு திருஷ்டாந்தமு மிருக்கின்றது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். அமிர்தமும் காளகூடவிஷமுமே திருஷ்டாந்தம்.

ச-கை. அமிர்தத்தி லானந்தலக்ஷண முண்டோ வென்னில்,

உ-ம். தான் சுக சொரூபமா யிருந்துகொண்டு தன்னைப் பானம்பண்ணவர்களுக்கு நிரதிசயமான சுகத்தைக் கொடுக்கிறபடியினு லமிர்தத்தினிடத்தில் ஆனந்தலக்ஷண முண்டு.

ச-கை. காளகூடவிஷத்தில் துக்கலக்ஷண முண்டோ வென்னில்,

உ-ம். தான் தாபாத்மகமா யிருந்துகொண்டு தன் சமீபத்தில் வந்தவர்களை மிகுந்த துக்கரூபமான பிராண ஹானிசெய்கிறபடியினால் காளகூடவிஷத்தினிடத்தில் துக்க லக்ஷணமுண்டு. அமிர்தலக்ஷணங் காளகூட விஷத்திலில் லாதபடியினாலும், காளகூடவிஷலக்ஷணம் அமிர்தத்தி லில்லாதபடியினாலும், அமிர்தத்திற்குங் காளகூடவிஷத் திற்கும் முன்சொன்ன ஐந்துவித லக்ஷணத்தினாலும் பேத லக்ஷண மிருக்கிறதுபோலும், ஜல லக்ஷணம் நெருப்பினி டத் தில்லாதபடியினாலும், நெருப்பு லக்ஷணம் ஜலத்தி னிடத்தி லில்லாதபடியினாலும், ஜலத்துக்கும் நெருப்புக் கும் முன்சொன்ன ஐவகை லக்ஷணத்தினாலும் பேத லக்ஷண மிருக்கிறதுபோலும், ஆனந்தலக்ஷணம் துக்காத் மகமான தேகேந்திரியாதி புத்திர பாரியாதிப் பிரபஞ்சத்தி னிடத்தி லில்லாதபடியினாலும், துக்கலக்ஷணம் சுகசொரூப மான ஆத்மாவினிடத்தி லில்லாதபடியினாலும், ஆனந்தத் திற்குந் துக்கத்திற்கும் முன்சொன்ன ஐவகையினாலும் பேத லக்ஷணமுண்டு.

ச-கை. இதனா லென்னசித்தித்ததென்னில்,

உ-ம். காளகூட சுபாவமான தாபங்க ளமிர்தத்தைப் பரிசியாதுபோலும் அக்கினி சுபாவமான தாபங்கள் ஜலத் தைப் பரிசியாதுபோலும் தேகேந்திரியாதி பிரபஞ்ச சுபா வமான தாபத்திரயங்கள் சுகசொரூபமான ஆத்மாவைப் பரிசிக்கவில்லையென் றன்னியோன்னிய பேதலக்ஷணஞ் சித் தித்தது.

ச-கை. ஆனா லிந்தவிசாரத்திற்குப பலமேதென்னில்,

உ-ம். பழுதையைப்போற் சத்துரூபனும் ஆதித்த னைப்போற் சித்துரூபனும் ஜலாமிர்தத்தைப்போ லானந்த

சொரூபனுமான தான் பாம்பைப்போல் அனுர்தமும் கடத்தைப்போற் சடமும் அக்கினி காளகூடவிஷத்தைப் போல் துக்கசொரூபமுமான தேகேந்திரியாதிப் பிரபஞ் சத்திற்கு விலக்ஷணனென்றறிகிறதே பலம். இதுவல்லா மல் முன்சொன்ன சரீரத்திரயத்தினிடத்தில் ஈசுவரனி ருந்து கன்மத்தை யசைப்பிக்கிற விதமுந் தெரிந்து தன் னுடைய அஞ்ஞானத்தையும் போக்கடித்து, அருளே திருமேனியாயெழுந்தளிருய சற்குருவினுல் சகல வுபாதி களையுங் கழித்துத் தன்னை யெப்போதும் நிருமலனுய் சர் வோபாதி ரகிதனுய் சகல வுபாதிகளுக்குஞ் சாட்சிமாத்திர மாய்எவன் விசாரித்தறிகிருனே, அவனே சீவன் முத்த னென்றும் பரமுத்தனென்றும் சகல சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

சரீரத்திரய-விலக்ஷண நிருபகம்

முற்றிற்று.

---

பத்தாவது

# அவஸ்தாத்திரயசாக்ஷித்வ நிருபகம்.

---

சங்கை. ஆத்மா அவஸ்தாத்திரய சாட்சியென்று சுருதிகளிற் சொல்லுகிறபடியினுல் அவஸ்தாத்திரயத்தை யறியாமல் அவஸ்தாத்திரய சாட்சியை யறியக்கூடாது. ஆகையினுல் அவஸ்தாத்திரயமாவ தேதென்னில்,

உத்தரம். சாக்கிர சொப்பன சுழுத்தியென்று மூன் றவஸ்தைகளாகும்.

ச-ங்கை. சாக்கிராவஸ்தையாவ தேதென்னில்,

உ-ம். சகல விந்திரியங்களிலும் கர்த்ருத்வ போக்த்ருத்வ பாகியார்த்த ஞான மெம்மட்டிருக்கிறதோ, அம்மட்டுஞ் சாக்கிரமென்று பெயர்.

ச-கை. சொப்பனுவஸ்தையாவ தேதென்னில்,

உ-ம். இந்திரியங்களினுல் பாகியார்த்த ஞானம் வராமல் மனதே விஷயாகாரமாகப் பரிணமித்துக் கர்த்ருத்வாகாரமா யெந்த மட்டுந் தோற்றுகிறதோ அந்தமட்டுஞ் சொப்பனமென்று பெயர்.

ச-கை. சுழுத்தியவஸ்தையாவ தேதென்னில்,

உ-ம். இந்திரியங்களிறுற் பாகியார்த்தஞானமும் வராமல், மனது கர்த்ருத்வாகாரமாய்ப் பரிணமித்து விஷயாகாரமாய்த் தோற்ருமல் புத்தி காரணுத்மகமா யெந்தமட்டுமிருக்கிறதோ அந்தமட்டுஞ் சுழுத்தியென்று பெயர்.

ச-கை. ஆத்மாவுக் கவஸ்தாத்திரய சாட்சித்வமாவதெப்படியெனில்,

உ-ம். அவஸ்தாத்திரயங்களிற் கூடியிருந்துங் கூடாமலும் அவஸ்தாத்திரயத்தையும், அவஸ்தாத்திரய வியாபாரத்தையும், அவஸ்தாவாசரையு மறிந்துகொண்டிருப்பதேசாட்சித்வம்.

ச-கை. இந்தச் சாட்சித்வத்திற் கித்தனை விசேஷம் வேண்டுமாவெனில்,

உ-ம். வேண்டும்.

ச-கை. இது எங்கே கண்டோமெனில்,

உ-ம். திருஷ்டாந்தத்திற் கண்டோம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஸ்தல மடாதிகோயிலிற் ஜபம் பண்ணிக் கொண்டிருப்பவருடைய சந்நிதானத்தில் கடன்கொடுத்து வாங்

கிக்கொண்ட புருஷரிருவரும் வந்து ஒரு முகூர்த்தஞ் ஜபம் பண்ணிக்கொண்டிருந்து, பிற்பாடு சற்றுநேரங் கழித்து அவ்விருவரில் கடன்கொடுத்தவன் வாங்கினவனைக் கேட்க, அவன் காலாந்தரங் கொடுக்கிறேனென்று சொல்ல, இப்படி யந்நியோந்நியமா யொருமுகூர்த்தமட்டுஞ் சம்வாதம் பண்ணி, பிற்பாடு அந்த கடன கொடுத்தவன், வாங்கின வனைக் கடினமாய்க் கேட்க, அவ னில்லையென்று சொல்ல, இப்படி யொருமுகூர்த்தமட்டு மந்நியோந்நிய கலகம் பண்ணிப் பிற்பாடு அவர்களிருவருமா யரசனிடத்திற்போய்க் "கடன் கேட்டா லடித்தா" னென்று பிரியாது சொல்ல, "அவனே யடித்தான்" என்று கடன் வாங்கினவன் சொல்ல, இந்த வந்நியோந்நிய விருத்த வாக்கியங்களை யரசன் கேட்டு, இதற்குச் சாட்சியுண்டோவென்றும் இவரிருவர் சம்வாதத்திற் கெவன் சாட்சியாயிருந்தானோ அவனு லிவர்கள் சம்வாதம் வெளிப்படுமென்றுங் கண்டிருந்தது போல பூர்வஞ் சொல்லப்பட்ட சாட்சித்வலக்ஷண மிருக்கின்றது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். அந்தச் சம்வாதிகளிருவரு மெந்தமட்டு மவுன மாயிருந்தார்களோ, அந்தமட்டுஞ் சுழுத்தி யவஸ்தைக் குத் திருஷ்டாந்தம். அவ் வவஸ்தையில் வியாபாரத்திரயங் களில்லை. மௌனமாயிருந்த விருவரும் அவஸ்தாவாசிகளா யெந்தமட்டுஞ் சவுசந்நியமாய் சம்வாதம் பண்ணினார்களோ, அந்தமட்டுஞ் சொப்பனவஸ்தைக்குத் திருஷ்டாந்தம். அவ் வவஸ்தையில் வியாபாரத் திரயங்களுண்டு.

ச-கை. வியாபாரத்திரயமாவ தேதென்னில்,

உ-ம். அஸ்த சலனங் காயக வியாபாரம், அந்நியோந் நிய சம்பாஷணை வாசக வியாபாரம், உத்தரப்பிரத்யுத்தர சிந்தனையேமானச வியாபாரம், மிருதுபாஷிகளாகிய இரு

வருமே யவஸ்தாவாசிகள். இவர்க ளெந்தமட்டுங் கலகம் பண்ணிக்கொண்டிருந்தார்களோ, அந்தமட்டுமே சொப்ப னவஸ்தை.

௩௨-கை. ஆனால் சாக்கிராவஸ்தைக்குத் திருஷ்டாந்த மேதென்னில்,

உ-ம். அந்நியோந்நிய வடிகள் காயகவியாபாரம். அந்நியோந்நிய பவுருஷவசனங்கள் வாசகவியாபாரம். அந் நியோந்நிய மர்மசிந்தைகள் மானசவியாபாரம். இப்படி கலகம்பண்ணின விருவருமே யவஸ்தாவாசிகள். மத்தியஸ் தனுகிய தேவதத்தனிவர்கள் கலகத்தைப் பார்த்துக்கொண் டிருந்தவனுகையால் அவஸ்தாத்திரயங்களுடன் கூடியுங் கூடாமலிருந்துகொண்டு அவஸ்தாத்திரயத்தையும் அவஸ் தாத்திரய வியாபாரத்தையும் அவஸ்தாத்திரய வாசரையு மறிகிறபடியால் அந்த மத்தியஸ்த தேவதத்தனிடத்திற் சாக்ஷித்வமிருக்கின்றது.

ச-கை. சாக்ஷித்துவத்திற் கித்தனைவிசேஷம் வேண்டு மாவெனில்,

உ-ம். வேண்டும்.

ச-கை. ஆனால் தாஷ்டாந்தத்தில் சாக்ஷியான வாத் மாவினிடத்திலு மித்தனை விசேடமுண்டோவென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். அவஸ்தாத்திரயத்துடன் கூடியுங், கூடாமலிரு ப்பதும், அவஸ்தாத்திரய வியாபாரமும், அவஸ்தாத்திரய வாசரை யறிந்திருப்பதுமாகிய விசேடம் சாக்ஷியாகிய ஆத் மாவினிடத்திலிருக்கின்றது.

ச-கை. தாஷ்டாந்தத்தி லவஸ்தாத்திரய மேதென் னில்,

உ-ம். சாக்கிரசொப்பன சுழுத்திகளே யவஸ்தாத்திரயம்.

ச-கை. சாக்கிரமாவ தேதென்னில்,

உ-ம். நித்திரைவிட் டெழுந்தது முதல் நித்திரை வருகிற பரியந்தமுஞ் சாக்கிரமென்று சொல்லப்படும்.

ச-கை. இதற்குத் திருஷ்டாந்த முண்டோவென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். விசாலமாகிய பட்டணத்தைப்போற் சாக்கிராவஸ்தை ; அந்தப்பட்டணத்திற் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திர வீதிகள்போற் காயக வாசக மானச வியாபாரங்கள் ; அப்பட்டணத்தில் வரப்பட்ட ஆனி விருத்திகளுக்கு அபிமானியாகிய பிரபுவைப்போற் சுகதுக்கத்திற் றபிக்கின்ற சாக்கிராவஸ்தா வாசனை விசுவன்.

ச-கை. சொப்பனமாவ தேதென்னில்,

உ-ம். நித்திரைகாலத்திற் சாக்கிரவாசனை மயமாகிய மனதினாற் கற்பிக்கப்பட்ட பிரபஞ்சத்தினிடத்திற் பிரதிபாதிக சீவ னெம்மட்டும் விவகரித் திரானோ அம்மட்டுஞ் சொப்பன மென்னப்படும்.

ச-கை. இதற்குத் திருஷ்டாந்த மெப்படி யென்னில்,

உ-ம். மேற்சொல்லிய பட்டணத்திலிருக்குங் கோட்டையைப்போற் சொப்பனம் ; அக்கோட்டையிலிருக்கும் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திர வீதிகள்போல் காயக வாசக மானச வியாபாரம் ; அக்கோட்டையில் வரப்பட்ட ஆனிவிருத்திகளுக் கபிமானியாகிய பிரபுவைப்போல் சுக துக்கத்திற் றபிக்கின்ற சொப்பனவஸ்தா வாசனாகிய தைசதன்.

ச-கை, சுழுத்தியாவ தேதென்னில்,

உ-ம். பாகிய வியாபாரமும், அந்தர் வியாபாரமும், தேகேந்திர வியாபார பிரஞ்ஞையு மில்லாமல் சீவன் நிர்ச் சேஷ்டிதனாகி யெந்தமட்டும் நித்திரை செய்கிறானோ, அந்த மட்டுஞ் சுழுத்தியவஸ்தையென்று சொல்லப்படும்.

ச-கை. இதற்குத் திருஷ்டாந்த முண்டோ வென்னில்,

உ-ம். உண்டு

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். கோட்டையிலிருக்கிற வீட்டைப்போற் சுழுத்தி யவஸ்தை; அந்த வீட்டில் பிரம க்ஷத்திரியாதி வீதிக ளெப்படி யில்லையோ, அப்படிபோல் காயக வாசக மானச வியாபாரங்களில்லை. அந்த வீட்டில் வருகிற ஆனி விருத்தி களுக் கபிமானியாகிய பிரபுவைப்போல் நிசானந்தத்தை யனுபவிக்கப்பட்ட சுழுத்தியவஸ்தா வாசனாகிய பிராஞ் ஞன்.

ச-கை. ஆனா லிவ்வவஸ்தைகளைக்குறித்து ஆத்மாவுக் குச் சாட்சித்துவ மெப்படியென்னில்,

உ-ம். நேற்றைய ஜாக்கிராவஸ்தையும், அதிற்செய்யுங் காயக வாசக மானச வியாபாரங்களும், அவ் வவஸ்தா வாசனையும், நேற்றைய சொப்பனவஸ்தையும், அதிற்செய் யுங் காயக வாசக மானச வியாபாரங்களும், அவ் வவஸ்தா வாசனையும், நேற்றைய சுழுத்தி யவஸ்தையும், அதிற் சர்வாத்மனா யொரு வியாபாரமும் பண்ணவில்லை யென் பதும், அவ்வவஸ்தாவாசனையும் இன்றைக்கு நாம் காணுகிற படியினால், ஆத்மாவுக்குச் சாட்சித்வமுண்டென்பதிற் சந் தேகமில்லை.

ச-கை. ஆனாலிது ஸ்மரணையோ அல்லது அநுபவமோ வென்னில்,

உ-ம். ஸ்மரணையென்றே சொல்லவேண்டும்.

ச-கை. அநுபவமென்று சொல்லக்கூடாதோ வென்னில்,

உ-ம். இப்போதந்த விஷய ஜன்னீகரிஷ்ண மில்லாத படியினு லனுபவமென்று சொல்லக்கூடாது. ஸ்மரணை யென்றே சொல்லவேண்டும்.

ச-கை. ஆனால் இந்த ஸ்மரணை அநுபூத வஸ்துவிஷயமாய் வருகிறதோ, அனனுபூத வஸ்துவிஷயமாய் வருகிறதோ வென்னில்,

உ-ம். அநுபூதவஸ்து விஷயமாகவே வருகிறது.

ச-கை. அனனுபூதவஸ்து விஷயமாய்வருகிறதென்னலாமே யென்னில்,

உ-ம். பிரபஞ்ச வியாபாரமெல்லாம் நம்மாலேயே ஸ்மரிக்கப்பட வேண்டும்; அங்ஙன மில்லாமையினுல் ஸ்மரணையெல்லாம் அநுபூதவஸ்து விஷயமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. ஆனுலிது யாரா லனுபவிக்கப்படுகிறதென்னில்,

உ-ம். நம்மா லனுபவிக்கப்படுகிறது.

ச-கை. ஆனுல் நாம் கூடியிருந் தனுபவித்தோமோ, கூடாதிருந் தனுபவித்தோமோ வென்னில்,

உ-ம். கூடியிருந்தே யனுபவித்தோம்.

ச-கை. கூடாதிருந் தனுபவித்தோ மென்னலாமே யென்னில்,

உ-ம். சொர்க்காதிகளி லிருக்கும் விஷயத்தையும் நாமெப்போது மனுபவிக்கவேண்டும். அங்ஙன மில்லாதபடியால் அப்படி சொல்லக்கூடாது. கூடியிருந்தே வவஸ்தைகளையும், அவஸ்தா வியாபாரங்களையும், அவஸ்தாவாசரையு மனுபவித்தோ மென்றே சொல்லவேண்டும்.

ச-கை. ஆனாற் கூடாமலிருப்பது தெப்படியென்னில்,

உ-ம். நேற்றைய ஜாக்கிர சொப்பன சுழுத்திகளும், அவ்வவ்வவஸ்தா வியாபாரங்களும், அவஸ்தாவாசிகளும் நசித்துப்போயும் நாமிருப்பதினால் நாம் அவ் வவஸ்தைகளிற் கூடவில்லை. கூடினோமேயானால் நாமும் நசித்துப் போகவேண்டும்.

ச-கை. கூடியிருந்தால் நசித்துப்போக வேண்டுமென்றே நியமமுண்டோவென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். வஸ்திராதிகளிற் கூடியிருக்கிற சித்திராதிகள் வஸ்திராதிகள் நசித்துப்போனாற் சித்திராதிகளும் நசித்துப் போவதுபோல, நாமுங் கூடியிருந்தால் நசித்துப்போகவேண்டும். ஆகையால் நா மவஸ்தாத்திரயங்களுடன் கூடாமலிருந்து அவ்வவஸ்தைகளையும், அவஸ்தா வியாபாரங்களையும், அவஸ்தாவாசிகளையும் அறிகிறோம். ஆதலால் சாக்ஷித்துவம் நம்மிடத்திலிருக்கின்றது.

ச-கை. ஆனால் நாமே யவஸ்தாத்திரயங்களுக்குச் சாட்சியானால் தேவரீர் வாக்கியப்படியே யவஸ்தாதிகளை யறிகிறவன் சாட்சியாமே. அவஸ்தாவாசனல்லவோ அவஸ்தாதிகளையு மவஸ்தா வியாபாரங்களையு மறிகிறான். ஆதலால் அவ்வவஸ்தாவாசனுக்கே சாட்சித்வஞ் சித்தித்திருக்கிறது. இப்படியிருக்க அவஸ்தாவாசனுக்குச் சாட்சித்வமில்லை, அவனுக் கன்னிய வெதிருத்தனுக்கே சாட்சித்வமுண்டென் றெப்படி சொல்லலாமென்னில்,

உ-ம். அவஸ்தாவாசனுக்குச் சாட்சித்வ மின்றென்பதும் அவனுக் கன்னியமான வாத்மாவுக்கே சாட்சித்வமுண்டென்பதுமே கூடும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். பாகியமான விருட்சாதிகளைப்போலும், அந்தரான தேகாதிகளைப்போலும் அவஸ்தாவாசன் விகாரியாயிருக்கிறான். ஆதலால் விருக்ஷாதிகளுக்குந் தேகாதிகளுக்கு மன்னியபதார்த்த அவபாசகரூபமாகிய சாட்சித்துவ மில்லாததுபோல விகாரியாகிய அவஸ்தாவாசனுக்கும் அவஸ்தைக்கும் அவஸ்தா வியாபாரங்களுக்கும் அவபாசகரூபமான சாட்சித்வமில்லை.

ச-கை. ஆனா லிவன் விகாரியாயிருக்கிறானோ வென்னில்,

உ-ம். ஆம். விகாரியாகவே நேற்றைக்கெந்த சுகதுக்கத்துடன் தபித்தானோ, அப்படியே யின்றைக்கிராமல் அதைப்பார்க்கிலும் அதிகங் குறைச்சலாகிய சுகதுக்கங்களுடன் கூடித் தபிக்கிறானாதலால் விகாரத்துவ மிருக்கிறதேயன்றி சாட்சித்வமில்லை.

ச-கை. இவனுக் கன்னியமான சாட்சியென் றொன்றையுங் காணோமே. எப்படியுண்டென் றறிகிறதென்னில்,

உ-ம். அறியலாம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். இந்த வவஸ்தாவாசன் நேற்றைக் கெந்தச் சுகத்துடன் கூடியிருந்தானோ அப்படி யிராமல், இன்றுநானாதிகமாகிய சுகதுக்கத்துடன் கூடி யனுபவித்தானென்று எவன் அந்த அவஸ்தாவாசன் விகாரங்களை யறிகிறானோ, அவனே அவஸ்தாவாசனுக் கன்னியமான சாட்சியென் றறியலாம்.

ச-கை. ஆனால் நிர்விகாரனாகிய ஆத்மா நான் சாட்சியென் றறியவில்லையே; விகாரியான அவஸ்தாவாசனல்லவோ வறிகிறான்? ஆதலால் நிர்விகாரனாகிய ஆத்மாவே சாட்சியென் றெப்படி யறிகிறதென்னில்,

உ-ம். திருஷ்டாந்தமாகக்கேள். கண்ணாடியிற் பார்க்கிறபோது சுபாவமாகிய முகம் அதிற்பிரதிபிம்பித்து அந்தப் பிரதிபிம்ப வழியாகவே தனது சுபாவமுகத்தின் சவுந்தரிய ரூபாதிகளை யறிவதுபோல, நிர்விகாரமாகிய ஆத்மாவும் அந்தக்கரணத்திற் பிரதிபலித்து அந்தப் பிரதிபலன வழியாகவே கர்த்தாவாயிருந்து சுருதி சாஸ்திராதி விசாரம்பண்ணி, விகாரமாகிய பிரதிபலனந் தானல்லவென்று நிச்சயித்து, அந்தப்பிரதிபலனவழியே தானிருவிகாரனாகிய பரிபூரணனென்றும், தான் பிரமமென்றும், தான் சாட்சியென்றும், தனது விலட்சணாதிகளை யறிகிறான். இந்தத் திருஷ்டாந்தத்திற் றிரிசியமான கண்ணாடியு மதிற் றிரிசியமாய்ப் பிரதிபலித்த ஆபாசமுகமும் சுபாவ முகத்தின் சவுந்தரிய ரூபாதிகளை எப்படி யறியவில்லையோ, அதுபோல திரிசிய விகாரமான அந்தக்கரணமும் அதிற்பிரதிபலித்த திரிசியவிகாரியாகிய சிதாபாசனுந் தனதுசொரூபமான அதிஷ்டானவாத்ம சுபாவ சாட்சித்வ நிர்விகார பரிபூரணத்வ சொரூபத்தை யறியவில்லை. ஆகையினால் நிர்விகார வாத்மா சுதாவாய் நான் சாட்சியென் றறியாதிருந்த போதும், விகாரவவஸ்தாவாசன் நான் சாட்சியென் றறிந்தவனைப்போன் றிருநதபோதும், விகாரியாகிய வவஸ்தாவாசனுக்குச் சாட்சித்வங்கூடாது. நிர்விகார வாத்மாவுக்கே சாட்சித்வங்கூடும். அநதச் சாட்சித்வலட்சணம் நம்மிடத்திருப்பதால் நாம் சாட்சியென்பதிற் சந்தேகமே யில்லை.

சு-கை. நமக்கு இந்தச் சாட்சித்வம் பூர்வமே சித்தித்திருக்கிறதோ? இப்போது சாதனங்களினாற் சித்தித்ததோவென்னில்,

உ-ம். பூர்வம் விவாதகர்த்தாக்களுக்குச் சாட்சியாயிருந்தவருடைய சாட்சித்வம் சாதனங்களினாற் சித்தியாமற் பூர்வமே சித்தித்திருப்பதுபோல, நம்மிடத்தி லிருக்

கப்பட்டவருடைய சாட்சித்வமுஞ் சாதனங்களாற்சித்தித்த தல்ல; பூர்வமே சித்தித்திருக்கிறது.

ச-கை. ஆனால் ஏன் தோற்றவில்லை யென்னில்,

உ-ம். விசாரியாமையினால் தோற்றவில்லை. ஆகையினாற் சிரவணமே முக்கியமென் றுபநிஷதார்த்தங்களிற் சொல்லுகின்றது. மலபரிபாகத் தெல்லையிற் றெளிந்த சற்குருவினால் விசாரித்தபோது நமது சாட்சாத்கார வனுபவத்திற்கும் நாமே சாட்சித்வமென்று நித்தியமாயிருக்கின்றது. அப்படிக்கு நித்தியமாயிருப்பது சுவானுபவத்திற்குச் சித்திவராமல் விபரீத சந்தேகமிருக்குமானால் அந்தக் கரண நிருமலமாய் ஏகாக்கிர சித்தம் வரப்பண்ணிச் சாட்சாத்கார சாட்சித்வம்வரப் பயிற்றுவிக்கவேண்டும்.

ச-கை. இந்த விசாரத்திற்குப் பல மேதென்னில்,

உ-ம். பூர்வ விவாதகர்த்தருடைய சாட்சியாகிய தேவதத்தனுக்கு அன்யமான விவாதிகளுடைய வவஸ்தைகளும், அவஸ்தாவியாபாரங்களும், அவஸ்தாவியாபாரிகத்வமும், அவனை யெப்படி பரிசிக்க வில்லையோ, அவன் இவ் வவஸ்தாதிகளையெல்லா முதாசினமாகப் பார்த்துக்கொண்டேயிருந் தவ் வவஸ்தாதிகளுக்குச் சாட்சியா யெப்படி யிருக்கிறானோ, அதுபோல, நமக் கன்னியமான அகங்காராதியவஸ்தாத்திரயங்களும், அவஸ்தாவியாபாரங்களும், அவஸ்தாவாசிரயங்களும், அஸ்வதாவிகாரங்களும் நமக்கில்லை. இவ் வவஸ்தாவிகாராதிகள் சாட்சியாகிய நம்மைப் பரிசிக்கவில்லை. இந்த வவஸ்தாதிகளை யெல்லாம் நா முதாசினமாகப் பார்த்துக்கொண்டு காலத்திரயத்திலும் இந்த வவஸ்தாதிகளுக்குச் சாட்சியாயிருக்கிறோமென் றறிகிறதே இந்த விசாரத்திற்குப் பலம். ஆகையினால், ஆனந்தமே திருமேனியாகிய ஸ்ரீசற்குருவினால் நன்றாய் விசாரித்துத் தானே

சாட்சியென்றெவ னறிகிறானோ, அவனே கிருதகிருத்திய னாகிய சீவன் முத்தனென்று சுருதியாதிகளிற் சொல்லப் படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

அவஸ்தாத்திரயசாக்ஷித்வ நிருபகம் முற்றிற்று.

---

பதினோராவது.

# பஞ்சகோசவிலக்ஷண நிருபகம்.

---

சங்கை. ஆத்மா பஞ்சகோசத்துக் கன்னியமென்று சுருதி சொல்லுகிறபடி பஞ்சகோசங்களை யறியாம லவைக் கன்னியமாகிய சொரூபத்தை யறியக்கூடா தாகையினால் பஞ்சகோசமாவ தேதெனில்,

உத்தரம். அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயமென் றைந்து கோசங்களா கும்.

ச-கை. அன்னமய கோசமாவ தேதென்னில்,

உ-ம். அன்னத்தினாற் பிறப்பாய் ஸ்தம்பம்போல் தூல மாய் கரசரண வவயவாகாரமாய் ஷட்பாவ விகாரமத்தாய் ஷட்கோசத்துவமாய் தோற்றப்படுகிற தூலசரீரமே யன்ன மயகோசம்.

ச-கை. பிராணமய கோசமாவ தேதென்னில்,

உ-ம். கர்மேந்திரிய பஞ்சகமும், பிராணாதிபஞ்சகமுங் கூடினது பிராணமயகோசம்.

ச-கை. மனோமய கோசமாவ தேதென்னில்,

உ-ம். மனதும் ஞானேந்திரிய பஞ்சகமுங் கூடினது மனோமய கோசம்.

ச-கை. விஞ்ஞானமய கோசமாவ தேதென்னில்,

உ-ம். புத்தியும் ஞானேந்திரிய பஞ்சகமுங் கூடினது விஞ்ஞானமய கோசம்.

ச-கை. ஆனந்தமய கோசமாவ தேதென்னில்,

உ-ம். பிரியம் மோதம் பிரமோதமாகிய விருத்திமத்தாய்ப் பிரதானமாகிய அஞ்ஞான மானந்தமய கோசம்.

ச-கை. பிரியமோதப் பிரமோதமாவ தேதென்னில்,

உ-ம். இஷ்டமான வஸ்துவைப் பார்த்தமாத்திரம் வருகிற சந்தோஷத்திற்குப் பிரியமென்றும், அந்த வஸ்து லபித்தபிறகு வருகிற சந்தோஷத்திற்கு மோதமென்றும், அந்த வஸ்துவை யனுபவித்தபிறகு வருகிற சந்தோஷத்திற்குப் பிரமோதமென்றும் பெயர்.

ச-கை. இதுகளுக்குக் கோசமென்று பெயரேன் வந்ததென்னில்,

உ-ம். கோசம்போலவே யாத்மாவை யறியவொட்டாமல் மறைக்கிறபடியாற் கோசமென்று பெயர் வந்தது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். திருஷ்டாந்தமாகக்கேள். உறையானது கத்தியை மூடிக் கொண்டதுபோலும், கௌசிலையானது வீணையை மூடிக் கொண்டதுபோலும், பசரிக்காய்பையானது புழுவை மூடிக் கொண்டதுபோலும், புளியமோடானது பழத்தை மூடிக் கொண்டதுபோலும், சட்டையானது புருஷனை மூடிக்கொண்டதுபோலும், பஞ்சகோசங்களும் ஆத்மாவை மூடிக்கொண்டிருக்கிறபடியினலிதுகளுக்குக் கோசமென்றே சொல்லப்படும்.

ச-கை. திருஷ்டாந்தத்தி லுறையுங் கத்தியும், கௌசிலையும் வீணையும், பசரிக்காயும் புழுவும், புளியமோடும் பழமும், சட்டையும் புருஷனுமாகிய இவைகள் பரிச்சின்னமா

கையினு லொன்றை யொன்று உபசீவித்துக்கொண்டிருக்க வில்லை. ஆதலால் உறைமுதலிய பதார்த்தங்கள் கத்தி முதலிய பதார்த்தங்களை மூடுகிறதற்குச் சாமர்த்தியமுண்டு. தாஷ்டாந்தத்தில் சமான சத்தல்லாதபடியினுல் ஆத்ம சத்தை யுபசீவித்துக்கொண்டு தோற்றப்பட்ட பஞ்சகோ சங்களுக் கவ்வாத்மாவை மூடும்படிக் கெப்படி சாமர்த்திய முண்டென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஆதித்தகிரண பரிணும விசேஷாதிமேகங்கள் அவ்வாதித்தன் சத்தை யுபசீவித்துக்கொண்டே தோற்றின போதும் அவ் வாதித்தனை மூடிக்கொள்வதுபோலும், அக் கினியினுடைய சத்தை யுபசீவித்துக்கொண்டே தோற்றப் பட்ட புகை அவ் வக்கினியை மூடிக்கொள்வதுபோலும், பழுதையின் சத்தை யுபசீவித்துக்கொண்டே தோற்றப் பட்ட பாம்பு அந்தப் பழுதையை மூடிக்கொள்வதுபோ லும், மண்ணின் சத்தை யுபசீவித்துக்கொண்டே தோற்றப் பட்ட கடம் அந்த மண்ணை மூடிக்கொள்வதுபோலும், பொன்னின் சத்தை யுபசீவித்துக்கொண்டே தோற்றப் பட்ட வாபரணம் பொன்னை மூடிக்கொள்வதுபோலும், ஆத்மசத்தை யுபசீவித்துக்கொண்டே தோற்றப்பட்ட பஞ் சகோசங்களுக்கும் ஆத்மாவை மூடும்படியான சாமர்த்திய முண்டு.

ச-கை. ஆனு லாத்மாவுக்குப் பஞ்சகோச வெதிரித்வ மெப்படி யெனில்,

உ-ம். பூர்வ திருஷ்டாந்தத்திற் கத்தியு முறையும் கௌபினையும் வீணையும் பசரிக்காய்பையும் புழுவும் புளிய மோடும் பழமும் புருஷனுஞ் சட்டையுமாகிய இதுக ளேக

மாய் விவகரிக்கப்படத் தோற்றினாலும் அந்தக் கத்தி முதலானதும் உறைமுதலானதுகளுக்கு வேறாகத் தோற்றுவதுபோல ஆத்மாவும் பஞ்சகோசங்களு மேகமாய் விவகரிக்கப்படத் தோற்றினாலும் அந்த ஆத்மா காலத்திரயத்திலும் பஞ்சகோசங்களுக் கன்னியமாகத் தோற்றப்பட்டதே வெதிருத்வம்.

ச-கை. பஞ்சகோசங்களுடன் சேர்ந்திருக்கு மாத்மாவுக்கல்லவோ வெதிருத்வஞ் சொல்லவேண்டும்? அப்படியாத்மாவுக்குப் பஞ்சகோசங்களுடன் கூட்டர வுண்டோ வென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அந்தக் கூட்டர வெதினால் வந்ததென்னில்,

உ-ம். அன்னியோன்னிய வத்தியாசத்தினால் வந்தது.

ச-கை. அந்த அன்னியோன்னிய வத்தியாசமாவதென்னில்,

உ-ம். இந்த வஸ்துவின் தர்மம் அந்த வஸ்துவினிடத்தும், அந்த வஸ்துவின் தர்ம மிந்தவஸ்துவினிடத்துமாகத் தோற்றப்பட்டதே யன்னியோன்னிய வத்தியாசமென்று சொல்லப்படும்.

ச-கை. இந்த அன்னியோன்னிய வத்தியாசங்களினாலாத்மாவுக்கும் பஞ்சகோசங்களுக்குங் கூட்டர வுண்டோ வென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சங்க்ஷேபமாகக்கேள். அன்னமயகோசத்திற்குமாத்மாவுக்குஞ் சீவத்துவாரா, சாமானிய ஜாதித்துவாரா, விகாரத்துவாரா, அங்கத்துவாரா, வர்ணத்துவாரா, விசேஷஜாதித்துவாரா, ஆசிரமத்துவாரா, நாமத்துவாரா, சம்ஸ

காரத்துவாரா, வேஷத்துவாரா, கிரியையாதித்துவாரா கூட்டரவு வந்தது.

சங்கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். நான் சீவன், நான் மனுஷனென்பது சீவத்துவாரா சாமானிய வத்தியாசம்; நான் பிறந்தேன், நான் இருக்கிறேன், நான் வளர்ந்தேன், நான் பருத்தேன், நான் இளைத்தேன், நான் நசித்துப்போகிறேன் என்பது விகாரத்துவாரா விசேஷ அத்தியாசம்; நான் புருஷன், நான் ஸ்திரீ, நான் அலியென்பது அங்கத்துவாரா அத்தியாசம்; நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரனென்பது வர்ணத்துவாரா அத்தியாசம்; நான் தெலுங்கன், நான் தமிழன், நான் கணக்கன், நான் வேலிநாட்டி, நான் வேகிநாட்டி, நான் முழுக்குநாட்டி, நான் காசுலநாட்டி, நான் யோகி, நான் குச்சிலியன், நான் மாராஷ்டகன், நான் காசிபகோத்திரன், நான் பரத்துவாசகோத்திரன், நான் ஆஸ்வலாய சூத்திரன், நான் ஆபஸ்தம்ப சூத்திரன், நான் போதாயன சூத்திரன், நான் காத்தியாயன சூத்திரன் என்பது விசேஷசாதித்துவாரா அத்தியாசம்; நான் பிரம்மசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசியென்பது ஆசிரமத்துவாரா அத்தியாசம்; நான் கிருஷ்ணன், நான் ராமன், நான் எல்லாபட்டன், நான் திப்பாபட்டன், நான் கறுப்பன், நான் சிவப்பன் என்பது நாமத்துவாரா அத்தியாசம்; நான் தீக்ஷதன், நான் சோமயாகி, நான் மகாவிரதயாகி, நான் பவுண்டரீகயாகி என்பது சமஸ்காரத்துவாரா அத்தியாசம்; நான் மாயாவாதி, நான் தத்துவாதி, நான் பாகவதன், நான் சைவன், நான் வீரசைவன், நான் சாஸ்திரி, நான் புராணிகன், நான் யோகீசுவரன் என்பது வேஷத்துவாரா அத்தியாசம்; நான் உபாத்தியாயன், நான் சீஷன், நான்

பத்தன், நான் சுரோத்திரிகன், நான் ஞானி, நான் கலி யாண மாப்பிள்ளை, நான் தச்சன், நான் கருமான், நான் தட்டான், நான் குசவன், நான் அம்பட்டன், நான் வண் ணான், நான் கூலிக்காரன், நான் இடையன், நான் குதி ரைக்காரன், நான் மணியக்காரன், நான் கணக்கப்பிள்ளை யென்பது கிரியாத்துவாரா அத்தியாசம்; இது முதலான அன்னமயகோச சுபாவதர்மங்கள் ஆத்மாவினிடத்திலும், ஆத்மாவினுடைய சச்சிதானந்த சுபாவதர்மமானது என் தூலசரீரமென்றைக்கு மிருப்பதுபோலு நன்றாய் தோற்று கிறதென்றும் இன்பமா யிருக்கிறதென்றும் அன்னமய கோசத்தினிடத்துந் தோற்றப்படுவதால், இந்த அன்னி யோன்னிய வத்தியாசத்தினால் அன்னமயகோசத்திற்கும் ஆத்மாவுக்கு மித்தியாத்தியாசக் கூட்டரவு வந்தது.

ச-கை. பிராணமய கோசத்திற்கு மாத்மாவுக்குங் கூட்டர வெப்படி யென்னில்,

உ-ம். அத்தியாசபூர்வகமாய் நான் பசியையுடைத் தானவன், நான் தாகமுண்டானவன், நான் சத்தியுண்டான வன், நான் வீரியமுண்டானவன், நான் பலமுண்டானவன், நான் கிரியையுண்டானவன், நான் வாயுண்டானவன், நான் தாதா, நான் ஊமை, நான் கையில்லாதவன், நான் சப் பாணி, நான் கூனன், நான் காலுண்டானவன் என்கிற இது முதலான பிராணமயகோசதர்மங்க ளாத்ம சுபாவ மாகவும், ஆத்மசுபாவமாகிய சச்சிதானந்தங்கள் என் பிராண னன்றாய்த் தோற்றப்படுகிறதென்று பிராணமய சுபாவமாகவுந் தோற்றுகிறபடியினால், ஆத்மாவுக்கும் பிரா ணமய கோசத்திற்கும் அன்னியோன்னியாத் தியாசத்தி னால் இதராத்தியாசக் கூட்டரவு வந்தது.

ச-கை. மனோமய கோசத்திற்கு மாத்மாவுக்குங் கூட்டர வெப்படி யென்னில்,

உ-ம். நான் சங்கற்பவான், நான் விகற்பவான், நான் சோகி, நான் மோகி, நான் ரோகி, நான் போகி, நான் குரோதி, நான் துவேஷி, நான் இச்சாவந்தன், நான் பிரஷ்டன், நான் சற்சனன், நான் கிராதகன், நான் செவிடன், நான் குருடன் என்கிற இதுமுதலான மனோமயகோச சுபாவங்களான சங்கற்பாதி தர்மங்கள் ஆத்மாவினிடத்தும், ஆத்மதர்மமாகிய சச்சிதானந்தங்கள் என்மனது நன்ருய்த் தோற்றப்படுகிறதென்று மனோமய கோசத்தினிடத்திலுந் தோற்றுகிறபடியினுல் மனோமய கோசத்திற்கும், ஆத்மாவுக்கு மன்னியோன்னியாத் தியாசத்தினுல் இதரேதராத்தியாசக் கூட்டரவு வந்தது.

ச-கை. விஞ்ஞானமய கோசத்திற்கும், ஆத்மாவுக்குங் கூட்டரவெப்படி யென்னில்,

உ-ம். நான் கர்த்தா, நான் நிச்சயவான், நான்பத்திவான், நான் யுக்திபுத்தி சாதுரிய முண்டானவன், நான் போகசாதகன், நான் விரதன், நான் பண்டிதன், நான் லோகாந்தரத்திற்குப் போகிறவனென்கிற இது முதலான விஞ்ஞானமயகோச சுபாவ தர்மங்கள் ஆத்மசுபாவமாகவும், ஆத்மதர்மமான சச்சிதானந்தங்கள் என் புத்தி நன்ருய்த் தோற்றப்படுகிறதென்று விஞ்ஞானமயகோச தர்மமாகவுந் தோற்றுகிறபடியினுல் விஞ்ஞானமய கோசத்துக்கு மாத்மாவுக்கும் முன்போலவே இதரேதராத்தியாசக் கூட்டரவு வந்தது.

ச-கை. ஆனந்தமய கோசத்திற்கு மாத்மாவுக்குங் கூட்டர வெப்படி யென்னில்,

உ-ம். நான் போகதன், நான் சந்துஷ்டன், நான் சுகி, நான் சாந்தன், நான் ராசதன், நான் தாமதன், நான் சடன், நான் ஆனூர்தன், நான் துக்கன், நான் அசந்துஷ்டன், நான் மூடன், நான் அஞ்ஞானி, நான் துஷ்டன்,

நான் குண்டன், நான் மோகிதன், நான் விவேகி, நான் பிராந்தனென்கிற இதுமுதலான அஞ்ஞான சுபாவதர்மங்கள் ஆத்மாவினிடத்திலும் ஆத்மசுபாவ தர்மமான சச்சிதானந்தங்கள் என் அஞ்ஞானம் நன்றாய்த் தோற்றப்படுகிறதென் றானந்தமயகோச சுபாவமாகவும் தோற்றுகிறபடியினால், ஆனந்தமய கோசத்துக்கு மாத்மாவுக்கு மன்னியோன்னிய வத்தியாசத்தினாற் சத்தியாத்தியாசக் கூட்டரவு வந்தது. ஆகையினாற் பஞ்சகோசங்களுக் கன்னியமாயாத்மாவை வேறுபடுத்தி யறியவேண்டியது.

ச-கை. வேறுபடுத்தி யறியும்வித மெப்படி யென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் என் பசு, என் கன்று, என் பிள்ளை, என் பெண், என் பெண்சாதி யென்று தன்னைச் சம்பந்தித்துக்கொண்டு தோற்றப்பட்ட பசுமுதலானதுகள் தானல்லாததுபோல, தாஷ்டாந்தத்திலும் என் சரீரம், என் பிராணன், என் மனம், என்புத்தி, என் அஞ்ஞானமென்று தன்னைச் சம்பந்தித்துக்கொண்டு தோற்றுகிற பஞ்சகோசங்களுந் தானல்ல, அந்தப் பஞ்சகோசங்களுக்கு விலக்ஷணமான ஆத்மாவே தானென்றறியலாம். இன்னமும் பசுவுரத்திருக்கிறதென்றும். கன்று இளைத்துப்போச்சென்றும், பிழைக்கமாட்டாதென்றும்; பிள்ளை துர்ப்பலனென்றும், சொற்படி கேட்கவில்லையென்றும், குமாரத்தி மூடமாயிருக்கிறாளென்றும், தெண்டித்தா லசல்வீட்டுக்குப் போகிறாளென்றும்; என் பிள்ளை, என் குட்டி, என் வீடு, என்னுடைமை, என்னுப்பரிகை யென்றும், என் பெண்சாதி வீட்டுக்குச் சுதந்தரமுடையவளா யிருக்கவில்லை யென்றும், பத்திரமா பொன்றுஞ் சிலவழிக்காம லிருவென்று சொன்னாலுங் கேட்கவில்லையென்றும், எனக்கிதமாயொருகாரியமுஞ் செய்யவில்லையென்றுஞ் சொல்

வதுபோலவே, அன்னமயகோசமாகிய ஸ்தூலதேக விகாரங்களும், பிராணமயகோச சுபாவமாகிய பசி தாக விகாரங்களும், மனோமயகோசமான சங்கற்பாதி விகாரங்களும், விஞ்ஞானமயகோசமான கர்த்ருத்வாதி விகாரங்களும், ஆனந்தமயகோச சுபாவமாகிய போக்த்ருத்வாதி விகாரங்களும் உண்டாகின்றன. ஆதலால் இந்தப் பஞ்சகோச தர்மங்களும் சாட்சியாகிய நம்மைப் பரிசிக்கவில்லை யென்று வேறுபடுத்தி யறிகிறதே பஞ்சகோச வெதிருத்வஞானம்.

ச-கை. ஆனால் திருஷ்டாந்தத்திற் பசுவாதிகள் தன்னுடன் கூடாமல் தனக் கந்நியமாயிருப்பதனால் அப் பசுவாதிகளுக்குத் தான் வேறென்று வெதிருத்தஞானம் வரலாம்; தாஷ்டாந்தத்திற் பஞ்சகோசங்கள் தன்னுடன் கூடியிருப்பதால் பஞ்சகோசங்களுக்குத் தான் அந்நியனென்று வெதிருத்தஞானம் எப்படி வருமென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் அத்தியயனகாலத்தில் அத்தியயனம் பண்ணப்பட்ட புருஷர்களா லுச்சரிக்கப்பட்டுக் கூடப்பிறந்த சப்தங்களைக் கேட்டு இது இன்னசப்தம், இது இன்னார்சப்தமென்று பிரத்தியேகிக்க வசமில்லாதிருந்த போதிலும் விசாரித்து விவேகயுத்தமாகிய புத்தியினால் இது இன்னசப்தம், இது இன்னார்சப்தமென்று பிரத்தியேகித் தறிவதுபோலும், சலத்தோடுங் கூடியிருக்கிற சுடுகையைப் பகுக்க வசமில்லாமற்போனாலும், தொக்கிந்திரியத்தினாற் பரிசித்து விவேகயுத்தமாகிய புத்தியினால் சலத்தையும் உஷ்ணத்தையும் பிரத்தியேகித் தறிவதுபோலும், சுவரிலெழுதியிருக்கிற சித்திரங்கள் கறுப்பு வெள்ளை சிவப்பு ரூபத்தினாற் பகுக்க வசமில்லாமற் போனாலுங் கண்ணினாற் பார்த்து விவேக யுத்தமாகிய புத்தியினால் இது சுவர், இது சித்திரம், இது கறுப்பு, இது வெளுப்பு, இது சிவப்பென்று பிரத்தியேகித் தறிவதுபோலும், ஜலத்திற் கலந்திருக்குங்

தித்திப்பு முதலான ருசியைப் பகுக்க வசமில்லாதிருந்த போதிலும் ரசேந்திரியத்தினு லனுபவித்து விவேகமாகிய யுக்தி புத்தியினுல் இது தித்திப்பு, இது புளிப்பு, இது கசப்பு, இது துவர்ப்பு, இது கார்ப்பு, இது உவர்ப்பென்று பிரத்தியேகித் தறிவதுபோலும், வஸ்திரத்தை யாசிரயித் திருக்குங் கந்த விசேஷங்களைப் பகுக்க வசமில்லா திருந்த போதிலும் கிராணேந்திரியத்தா லாக்கிராணித்து விவேக புத்தியினுல் இது துர்க்கந்தம், இதுநற்கந்தம், இதுமிசிர கந்தமென்று பிரத்தியேகித் தறிவதுபோலும், தாஷ்டாந் தத்தில் பஞ்சகோசங்களையும், பஞ்சகோசங்களுடன் கூடி யிருக்கு மாத்மாவையும் பகுக்க வசமில்லாதிருந்தாலும் நன் ருய் விசாரித்தறிந்து விவேகயுக்தமாகிய புத்தியினுல் அனு பூதி விசாலமுள்ள ஸ்ரீசற்குரு சந்நிதானத்தில் பஞ்சகோச ஸ்வரூப மிப்படிப்பட்டதென்றும், ஆத்மஸ்வரூப மிப்படிப் பட்டதென்றும், பஞ்சகோசங்களுக்கும் ஆத்மாவுக்கும் சம்பந்தமில்லையென்றும், பிரத்தியேகமாய்ப் பகுத்தறிய லாம். இந்த மட்டும் விவகார நிமித்தியமாகப் பஞ்ச கோசங்களை யொருபொருட்படுத்தி ஆத்மாவைப் பஞ்ச கோசங்களுக் கந்நியமென்று விவேகித்தறியும்படி சொன் னேம். இனி வஸ்துவாகவே விசாரிக்கும்போது பழுதை யினிடத்தி லாரோபித்த சர்ப்பாதிகள் பழுதையன்றி வேறில்லாதது போல ஆத்மாவினிடத்தி லாரோபித்த பஞ்ச கோசங்களும் அதிஷ்டானமாகிய ஆத்மாவையன்றி வேறி ல்லை.

ச-கை. திருஷ்டாந்தத்திற் பழுதையென்ற ஞானம் வந்தபிறகு சர்ப்பாதி யுபாதிகள் தோற்ருததுபோல, தாஷ் டாந்தத்திலும் ஆத்மஞானம் வந்தபிறகு பஞ்சகோசங்களின் பிரவர்த்தி வராமற் போகவேண்டும். அப்படி போகாதபடி யினுல் ஆரோபமான பஞ்சகோசங்கள் அதிஷ்டானமான

ஆத்மாவையன்றி வேறில்லையென் றெப்படி புத்தியிலேறு மென்னில்,

உ-ம். கானலினிடத்திற் ஜலப்பிராந்தி வந்தபிறகு அந்தச் சலத்தில் ஸ்நானபானாதிக்கிரிகை பண்ணவேண்டு மென்று போன புருஷன், விசாரித்து இது ஜலமல்லவே, நாம் கானலென் றறியாமல் பிரமித்தோமேயென்று ஞானம் வந்தபின்பும் அந்த ஜலப்பிரவர்த்தியே காணப்படுவது போல, ஆத்மாவினிடத் தாரோபிக்கப்பட்ட பஞ்சகோசங்களு மதிஷ்டானமாகிய வாத்மாவையன்றி வேறில்லையென் றறிந்தபோதிலும் பஞ்சகோசங்களின் பிரவர்த்திவரலாம்.

ச-கை. திருஷ்டாந்தமான கானலினிடத்திற் ஜலப்பிரவர்த்தி தோற்றமாத்திரமேயன்றி ஸ்நானபானாதிக்கிரிகைகள் காணோம். தாஷ்டாந்தத்தில் அதிஷ்டானமான ஆத்மாவையன்றிப் பஞ்சகோசங்க ளில்லையென் றறிந்த போதிலும் பிறகு பஞ்சகோசங்களின் பிரவர்த்தியும் அவற்றின் விவகாரங்களும் வருகிறபடியால், அதிஷ்டானமாகிய வாத்மாவையன்றிப் பஞ்சகோசங்களில்லையென்ற ஞானம் புத்தியி லெப்படி யேறுமென்னில்,

உ-ம். ஏறும் எப்படியென்றால், மிருத்திகையி லாரோபிக்குங் கடம் மண்ணையன்றி வேறில்லையென் றறிந்த பின்னுங் கடாதிகளுடைய பிரவர்த்தியும், விவகாரங்களும் வருகிறதுபோலும், சுவர்ணத்தி லாரோபிக்குங் கடக மகுடாதி யாபரணங்கள் சுவர்ணத்திற் கன்னியமில்லையென் றறிந்தபின்னும் ஆபரணங்களின் பிரவர்த்தியும் விவகாரங்களும் வருகிறதுபோலும், ஆதமாவினிடத்தி லாரோபிக்கும் பஞ்சகோசங்க ளதிஷ்டானமாகிய வாத்மாவையன்றி வேறில்லையென் றறிந்தபோதிலும் பஞ்சகோசங்களின் பிரவர்த்தியும் விவகாரங்களும் வரலாம். அல்லாமலும் திருஷ்டாந்தத்திற் கடமுதலானது தோற்றிக்கொண்டே விவகாரத்

திற்கு வந்தபோதிலும் சூட்சுமபுத்தி யுடையவர்களுக்கு மண்ணையன்றி யந்நியமாய்க் கடாதிகளில்லையென்று புத்தியி லேறுவதுபோல, தாஷ்டாந்தத்திலும் பஞ்சகோசங்கள் தோற்றிக்கொண்டே விவகாரத்திற்கு வந்தபோதிலும் சூட்சுமபுத்தி யுடையவர்களுக்கு இந்தப் பஞ்சகோசங்க ளாத்மாவுக்கு வெதிருத்தமா யில்லையென்று புத்தியிலும் யுத்தியிலுமேறும். இந்தப்படி பிரத்தியேகித் தறிவதே பஞ்சகோசவிலக்ஷண ஞானமென்று சொல்லப்படும்.

ச-கை. இந்த விசாரத்திற்குப் பல மேதென்னில்,

உ-ம். ஆத்மா அவஸ்தாத்திரயத்தி லனுசூதனாயிருக்கிறான், பஞ்சகோசங்க ளவஸ்தாத்திரயத்தி லனுசூதமாயிருக்கவில்லை, வியாவிருத்தங்களாகிய பஞ்சகோசங்கள் தோற்றிக்கொண்டே விவகாரத்திற்கு வந்தபோதிலும் இந்தப் பஞ்சகோசங்க ளாத்மாவுக் கன்னியமாயில்லையென்றறிவதே யிந்த விசாரத்திற்குப் பலம். இப்படி யாத்மாவையும், பஞ்சகோசங்களையும் அபின்னமாய் அதனதன் றொழில்களைப் பகுத்து விசாரித்தறிந்த பிறகு பஞ்சகோசங்கள் தோற்றினுலு மாத்மாவுக் கந்நியமல்லவென்று ஆசாரியர றிவிக்க வெவ னறிகிறானோ, அவனே கிருதார்த்தனாகிய சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

## பஞ்சகோசவிலக்ஷண நிரூபகம்

முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

# சச்சிதானந்தலக்ஷண நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகள் ஆத்மாவுக்குச் சச்சிதானந்த சொரூபமென்பதில் சத்துரூபமாவ தெப்படியென்னில்,

உத்தரம். எந்தவஸ்து வொன்றினாலும் வாதிக்கப்படாமற் காலத்திரயத்திலு மேகரூபமா யிருக்கிறதோ அதுவே சத்துரூபம்.

ச-கை. அது ஆத்மாவினிடத்தி லுண்டோவென்னில்,

உ-ம். காலத்திரயத்திலு மொன்றினாலும் வாதிக்கப் படாம லிருக்கிறபடியால் ஆத்மாவினிடத்தில் சத்ரூபத்வ முண்டு.

ச-கை. ஆனால் காலத்திரயத்திலு மாத்மா வுண்டென் பதற்குப் பிரமாண மேதென்னில்,

உ-ம். சர்வஜனங்களுடைய வனுபவமே பிரமாணம்.

ச-கை. சர்வஜனங்களாவ தாரென்னில்,

உ-ம். தரித்திரன், மகராஜன், கர்மி, பக்தன், முமூட்சு இவர்களேயாம்.

ச-கை. இவர்க ளனுபவ மேதென்னில்,

உ-ம். தரித்திரன் நான் ஜன்மாந்தரத்தில் யாருக்கு மொன்றுங் கொடாமற்போனபடியால் இந்த ஜன்மத்திற் றரித்திரத்தை யனுபவிக்கிறேன்; இந்தச் ஜன்மத்திலுங் கொடுப்பதற்கு வகையில்லாதபடியினால் மேல்வருஞ் ஜன் மத்திலுந் தரித்திரனாகவே பிறப்பேனென்கிற வசனத்தி னாலும், மகராஜனும் நான் ஜன்மாந்தரத்திற் பெரியோர் களுக் குபகாரம் பண்ணினபடியினால் இந்த ஜன்மத்தில் ஐசுவரியமே யனுபவிக்கிறேன்; இந்த ஜன்மத்திலு மொரு

னருக் குபகாரம் பண்ணுவேனாகில் மேல்வருஞ் ஜன்மத்திலு மகராஜனாய்ப் பிறப்பேனென்கிற வசனத்தினாலும், கர்மியும் நான் அநேக ஜன்மத்திற் சற்கருமமே செய்தபடியினால் அந்தச் சற்கருமவாசனையால் இந்த ஜன்மத்திலும் சற்கருமமே செய்யும்படி வந்தது ; இந்தச் சற்கருமத்தினால் மேல் வரும் ஜன்மத்திலும் பரலோக முண்டென்கிற வசனத்தினாலும், பக்தனும் நான் அநேக ஜன்மத்திற பகவானை யுபாசித்தவனாகையால் அந்த வுபாசனைவழியே இந்த ஜன்மத்திலும் நிரதிசயமான பக்தியுண்டாயிருக்கிறது ; இதனால் மேலைக்குப் பகவத்கடாக்ஷ முண்டாகுமென்கிற வசனத்தினாலும், முமூட்சுவும் நான் அனேக ஜன்மத்தி லீஸ்வரார்ப்பணமாகச் சற்கர்மங்களைச் செய்தபடியினால் இந்த ஜன்மத்தில் சித்தசுத்தியும் சற்குருலாபமும் சிரவணாதிக்கியமு முண்டாயிற்று. நானே கிருதார்த்தன் எனக் கினிமேற் ஜனனமில்லை யென்கிற வசனத்தினாலும் திட விவேகமுடையவர்களுக்கு ஆத்மா காலத்திரயத்திலு மிருக்கிறானென்கிற யனுபவம். மேலும் சமஸ்தஜனங்களும் இந்த ஐவகைக்குள் அந்தர்ப்பூதமா யடங்கியபடியினால் இவர்களுடைய வனுபவப் பிரமாணத்தினா லாத்மாவுக்குச் சத்ரூபஞ் சித்தித்திருக்கின்றது. நாமும் இவர்களுக்குள் அந்தர்ப்பூதமாகையால் நமக்குஞ் சித்தித்தது.

ச-கை. அனுபவத்தினால் நமக்குச் சத்துரூபஞ் சித்தித்தது ; இனி யுத்தியினா லெப்படியென்னில்,

உ-ம். நாம் மூன்றுகாலத்திலு மிருக்கிறபடியினால் நமக்கு யுத்தியினாலுஞ் சத்ரூபஞ் சித்தித்தது.

ச-கை. அந்த யுத்தியாவ தேதென்னில்,

உ-ம். பகுத்து விசாரிப்பதே யுத்தியாகும்.

ச-கை. நாமிப்போ திருக்கிறோமோ? வில்லையோ வென்னில்,

உ-ம். இருக்கிறோம்.

ச-கை. சரீரியாயிருக்கிறோமோ? வசரீரியாயிருக்கிறோமோ வென்னில்,

உ-ம். அசரீரியாயிருப்பவனுக்கு விவகாரங் கூடாததலால், நாம் இப்போது விவகரிக்கிறபடியினாற் சரீரியாகவே யிருக்கிறோம்.

ச-கை. நமக்கிந்தச்சரீர மெதினால் வந்ததென்னில்,

உ-ம். கன்மத்தினால் வந்தது.

ச-கை. யார்செய்த கன்மத்தினால் வந்ததென்னில்,

உ-ம். நாம்செய்த கன்மத்தினால் வந்தது.

ச-கை. ஒருவன்செய்த கன்மத்தினால் வந்ததென்று சொல்லுவோமேயென்னில்,

உ-ம். அன்னியன்செய்த சோதிஷ்டோம யாகாதி பலன்களும் நமக்கு வரவேண்டும். வராதபடியினா லொருவன்செய்த கன்மத்தினாற் சரீரம்வந்ததென்று சொல்லக் கூடாது; நாம் செய்த கன்மத்தினாலேயே நமக்குச் சரீரம் வந்ததென்று சொல்லவேண்டும்.

ச-கை ஆனாலிந்தச் ஜன்மத்திற்செய்த கன்மத்தின்ற் சரீரம்வந்ததோ? ஜன்மாந்தரத்திற்செய்த கன்மத்தினாற் சரீரம்வந்ததோவெனில்,

உ-ம். ஜன்மாந்தரத்திற்செய்த கன்மத்தினாலேயே சரீரம்வந்தது.

ச-கை. இந்தச் ஜன்மத்திற் செய்த கன்மத்தினாற் சரீரம் வந்ததென்று சொல்லுவோமேயென்னில்,

உ-ம். அப்படி சொல்லப்படாது. விருக்ஷத்தை யுண்டாக்கப்பட்ட பீஜந் தனக்குக் காரணமாகிய விருக்ஷத்தை யெப்படி ஜெனிப்பிக்கமாட்டாதோ, அப்படிபோல இந்தச்

சரீரத்தினுற் செய்யப்பட்ட கன்மம் மேலைக்குச் சரீரங் கொடுக்குமன்றி, இந்தச் சரீரத்தைப் பிறப்பிக்கமாட்டாது. ஆகையா லிந்தச்ஜன்மத்திற்செய்த கன்மத்தினு லிச்சரீரம் வந்ததென்று சொல்லக்கூடாது.

ச-கை. பின்னை யெப்படி யென்னில்,

உ-ம். பூர்வஜன்மாந்தரத்திற்செய்த சன்மத்தினல் நமக்குச் சரீரம் வந்ததென்றே சொல்லவேண்டும்.

ச-கை. ஜன்மாந்தரத்தில் சரீரியாயிருந்து கன்மஞ் செய்தோமோ, அசரீரியாயிருந்து கன்மஞ்செய்தோமோ வென்னில்,

உ-ம். அசரீரியாயிருந்து கன்மஞ்செய்யக்கூடாதபடியினுல், சரீரியாயிருந்தே கன்மஞ்செய்தோம்.

ச-கை. அந்தச்சரீர மெதினுல் வந்ததென்னில்,

உ-ம். அதற்குப் பூர்வஜன்மத்திற்செய்த கன்மத்தினுல் வந்ததென்கிற யுத்தியினுல், நாமு மனேகங்கோடி கற்பகாலத்தி லிருந்து சரீரத்துடனனேக கர்மங்களைச்செய்து, அந்தக் கர்மத்தினுல் வரப்பட்ட அனேக சரீரமுந்தரித்து, அந்தந்தச் சரீர சுபாவமான சுகதுக்கங்க ளனுபவித்து, அனேககோடி கற்பாந்தரத்திலுஞ் சரீரியாயிருந்ததாகவே தோற்றுகின்றது. இந்த யுத்தியினுல் பூதகாலத்திலு மிருந்தோமென்பது சித்தித்தது.

ச-கை. ஆனுல் நமக்குப் பவுஷிபகாலத்தில் வித்தியமானத்வ மெப்படியென்னில்,

உ-ம். இந்த ஜன்மத்தி லிப்போது சிரவண மனன நிதித்தியாசனுதிகளைப் பண்ணி ஞானத்தைச் சம்பாதிக்காவிட்டால், பூர்வஜன்ம கர்மத்துக்குப் பலபூதமாகிய இந்தச் சரீரம் வந்ததுபோல இந்தச் சரீரத்திற் செய்கிற கர்மபலபூதமாகிய அனேக சரீரங்க ளினிமேலும் வரும். இந்தச்

சரீரத்தைத் தரித்துக்கொண் டிப்போ தனேகவித கர்மங்களை எப்படி செய்கிறோமோ, அப்படியே மேல்வருகிற சரீரத்தையுந் தரித்துக்கொண்டு, அனேகவித கர்மங்களைச் செய்யப்போகிறோம். அந்தக் கர்மங்களுக்குப் பலபூதமாகிய சரீரங்களும் வரப்போகின்றது. அதுகளையும் நாம் தரித்துக்கொண்டு அனேகவித கர்மங்களைச்செய்து அந்தந்தக் கர்மங்களுக்குப் பலபூதமாகிய சுகதுக்கங்களை யனுபவித்துக்கொண்டு அனேககோடி கற்பங்களிலு மிருப்போமென்பது யுத்தியினு லறிகின்றபடியால், நாம் காலத்திரயத்திலு மிருக்கிறோமென்கிறது யுத்தியினாற் சித்தித்தது. பிரளயங்களில் ஜகத்து வாதிக்கப்பட்டாலும் நாம் வாதிக்கப்படவில்லை. அன்றியும் நமக்கு உற்பத்தியாதி விகாரங்களில்லாதபடியினால் சத்ரூபஞ் சித்தித்தது. இப்படிப்பட்ட சத்ரூபம் நம்மிடத்திலிருப்பதால் சத்துலட்சணஞ் சித்தித்தது.

ச-கை. ஆனால் சித்துரூபமாவ தேதென்னில்,

உ-ம். எந்தவஸ்து ஒருசாதனாந்தரங்களை யபேட்சியாமல் தானுந்தோற்றிக்கொண்டு, தன்னிடத்தி லாரோபிக்கின்ற சர்வ பதார்த்தங்களையுந் தோற்றுவிக்கின்றதோ, அதுவே சித்தென்று சொல்லப்படும்.

ச-கை. இந்தச் சித்துரூபம் ஆத்மாவினிடத்தி லுண்டோவென்னில்,

உ-ம். நம்மிடத்தில் பாலியமுதல் இதுவரையிலுமெந்தெந்த வியாபாரஞ் செய்யப்பட்டதோ, அந்தந்த வியாபாரத்துக்குள் சிறிது தோற்றுமற்போனாலும் மற்றைய வியாபாரங்களெல்லாம் பிரகாச சாதனங்களாகிய ஆதித்த சந்திர அக்கினி நட்சத்திர மின்னல நேத்திர மென்கிற இதுகளி லொருசாதனமு மபேட்சியாமல் காடாந்தகாரத்

திலும் மூலையில் முக்காடிட்டுப் படுத்திருந்தாலும் எல்லா ருக்குந் தோற்றுகின்றது. ஆனபடியால், ஆத்மசொரூப மாகிய நம்மிடத்திலுஞ் சித்ரூப மிருக்கின்றது.

ச-கை. பாலியமுத லிதுவரையி லாரோபிக்கப்பட்ட சர்வபதார்த்தங்களிற் சிறிது தோற்றப்படுகின்றதன்றிச் சமஸ்த பதார்த்தங்களுந் தோற்றவில்லை. ஆகையினால் சர்வபதார்த்த அவபாசகத்வமாகிய சித்துரூபத்வம் நமக் கெப்படி கூடுமென்னில்,

உ-ம். அந்தர்ப்பிரபஞ்சமும் பாகியப்பிரபஞ்சமுஞ் சர்வபதார்த்தமென்று சொல்லப்படும். இவ்விரண்டு பிர பஞ்சமும் நம்மாலேயே தோற்றப்படுகின்றது.

ச-கை. இவ்விரண்டினுள் பாகியப்பிரபஞ்சம் நம்மா லெப்படி தோற்றுகிறதென்னில்,

உ-ம். பிருதிவி அப்பு தேயு வாய்வு ஆகாய மென் றும், சத்த பரிசரூபரச கந்தமென்றும், பஞ்சீகிருத பூத மென்றும், பிரமாண்டமென்றும், சதுர்த்தச புவனமென் றும், சதுர்வித பூதக்கிராமங்களென்றும், இதுகளுக்குக் காரணம் மாயையென்றும் அனேக நாமரூப குணத்வ விகாரசத்தி யாசிரயமாகிய பாகியப் பிரபஞ்சமெல்லாம் நம்மா லறியப்படுகின்றது.

ச-கை. இப்படி நம்மாலறியப்படுகின்றதோ? அல்லது நாம் பாகியப் பிரபஞ்சத்தினா லறியப்படுகிறோமோ வென் னில்,

உ-ம். பாகியப்பிரபஞ்சத்திற்கு நா மறியப்படாதபடி யினாலும், நம்மாலேயே பாகியமாகிய சமஸ்த பிரபஞ்சங் களு மறியப்படுகிற படியினாலும், பாகியப்பிரபஞ்சத்தை யறிந்துகொண்டிருக்கிற நமக்குப் பாகியமாகிய சர்வ பதார்த்த அவபாசகத்வஞ் சித்தித்தது.

ச-கை. இனி யந்தர்பதார்த்த அவபாசகத்வ மெப்படியென்னில்,

உ-ம். அஞ்ஞானமென்றும், அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமய கோசமென்றும், தூல சூட்சும காரணசரீரமென்றும், சட்பாவவிகாரமென்றும், சட்கோசமென்றும், ஷடூர்மியென்றும், ஞானேந்திரிய கன்மேந்திரியமென்றும், பிராணாதி பஞ்சகமென்றும், அந்தக்கரண சதுஷ்டயமென்றும், சங்கற்ப விகற்பாதியபிமான தாரணையென்றும், சாக்கிர சொப்பன சுழுத்தியென்றும், அவஸ்தாவியாபாரங்களென்றும், அவஸ்தாவாசிகளென்றும், சமாதி மூர்ச்சையென்றும், மனோவாக்குக் காயங்களென்றும், காமக்குரோத லோப மோக மத மாச்சரியாதிகளென்றும், மயித்திரி கருணை முதிதையுபேட்சைகளென்றும், இயம நியம ஆசன பிராணாயாம பிரத்தியாகார தியான தாரணை சமாதியஷ்டாங்க யோகங்களென்றும், பிரத்தியட்சம் அனுமானம் ஆகம மருத்தாபத்தி உபமானம் அபாவம் ஐதிகம் சம்பவமாகிய எட்டுப் பிரமாணங்களென்றும், ரோக ஆரோக்கியமென்றும் விவித நாம ரூப குண தர்ம விகார சத்தியாசிரயமாகிய அந்தர்ப் பிரபஞ்சமெல்லாம் நம்மா லறியப்படுகின்றது.

ச-கை. இப்படி நம்மா லறியப்படுகின்றதோ? அல்லது அந்தர்ப் பிரபஞ்சத்தினல் நா மறியப்படுகிறோமோ வென்னில்,

உ-ம். அந்தர்ப் பிரபஞ்சத்தினல் நாமறியப்படவில்லை, நாமே யந்தர்ப்பிரபஞ்சமாகிய சர்வபதார்த்தங்களையு மறிகிறோமாகையால், நமக்கு அந்தராகிய சர்வபதார்த்த அவபாசகத்வஞ் சித்தித்தது. அன்றியும் நம்மிடத்தி லாரோபிக்கப்பட்ட சர்வபதார்த்த அவபாசகத்வம் ஒருசாதனாந்தரங்களையு மபேட்சிக்காமல் நமக்குச் சித்தித்திருக்கின்றது.

ச-கை. ஆனால் மனதினா லல்லவோ சர்வமு மறியப் படுகின்றது? நாமு மனதினாலேயல்லவோ வறியப்படு கிறோம்? ஆதலால் சாதனாந்தர நிரபேட்சையாகிய சொப்பிர காசத்வமும் சர்வபதார்த்த அவபாசகத்வமும் நமக் கெப் படி கூடுமென்னில்,

உ-ம். மனமானது உற்பத்தி நாசவத்தாய் சரவயமாய் பரிச்சின்னமாய் கிரியமாய் கடத்தைப்போலவே பூதகாரிய மாயிருக்கிறபடியினால், அந்தமனம் சடத்வமேயன்றிச் சேதனத்வமன்று; ஆதலாலந்தச் சடமான மனம் ஒரு பதார்த்தத்தையுந் தோற்றுவிக்க மாட்டாது. ஏனெனில், ஆத்மாவினாலேயே தோற்றப்பட்ட மனம் ஆத்மாவைத் தோற்றுவிக்கமாட்டாதென்பதிற் சந்தேகமில்லை.

ச கை. ஆனாற் பின்னரென்னவென்னில்,

உ-ம். ஆத்மாவே மனதையுஞ் சர்வபதார்த்தங்களை யுந் தோறறுவிக்கின்றது. ஆகையினால் மனது உபாதிமாத் திரமேயாகும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். அகலிலிருக்கு மெண்ணெயினால் நனைக்கப் பட்ட வத்திதானுந் தோற்றாமலந்த எண்ணெய் முதலானது களையுந் தோற்றுவிக்கவில்லை. அதில் அக்கினியென்கிற தேஜசு திரியென்ற வுபாதியுடன் கூடிக்கொண்டு சாதனாந் தரங்களை யபேட்சியாமல் தானுந் தோற்றி அந்தத் திரி தயிலங் கலசமென்கிற பதார்த்தங்களையுந் தோற்றுவிக் கிறது. அதுபோல அகலென்ற தூலசரீரத்தில் தயில மாகிய கர்மத்தினால் தாபிதமாகிய திரியென்னு மனது தான் தோற்றாமலு மிருந்துகொண் டன்னிய பதார்த்தங்களையுந் தோற்றுவிக்கமாட்டாது. ஆத்மா அந்த மனதுடன் கூடிச் சாதனாந்தரங்களை யபேட்சியாமல் தானும் விசேஷமாகத்

தோற்றிக்கொண்டு, அந்த மனதையுந் தேகேந்திரியங்களை யும் அந்தர்ப்பாகியமாகிய சர்வபதார்த்தங்களையுந் தோற்று விக்கின்றது. அந்தக்கரணமும் அந்தக்கரண விருத்திகளை யறியுமிடத்தில் ஆத்மாவே நிருபாதிக மாயிருந்தறிகின்றது. அந்த ஆத்மசொரூபமே நாமாகையினால், சாதனாந்தர நிர பேட்சையாய் சுவயம்பிரகாசமா யிருக்கப்பட்ட நமக்கே சர்வபதார்த்த அவபாசகத்வஞ் சித்தித்தது. ஆதலால் நாமே சித்ரூபமென்பதிற் சந்தேகமில்லை.

ச-கை. ஆனால் ஆனந்தரூபமாவ தெப்படியென்னில்,

உ-ம். நித்தியமாய் நிருபாதிகமாய் நிரதிசயமாகிய சுக சொரூபமே யானந்தரூபம்.

ச-கை. இந்த ஆனந்தரூபம் ஆத்மாவினிடத்திலுண் டோ வென்னில்,

உ-ம். சற்சந்தனாதிகளைப் பரிசிக்கும் புத்திக்குச் சர் வோத்கிருஷ்டமாய் சர்வதுக்கநிவர்த்தகமாய் நித்தியமாகிய சுகமேயானந்தம். எந்த வானந்தஞ் சமஸ்தமானபேர்களி னாலுஞ் சுழுத்திகாலத்தில் அனுபவிக்கப்படுகின்றதோ, வவ் வானந்தத்திலு மிந்த லட்சணமிருக்கின்றது.

ச-கை. சுழுத்திக் காலத்தி லந்த வானந்த மிருக்கு மானா லவ்வானந்தத்திலுமிந்த லட்சணங்களுண்டென்று சொல்லலாம், துக்காபாவமாத்திரமேயன்றி யானந்த மில்லையே. இப்படி யில்லாதிருக்கு மானந்தத்திற்கு நிரு பாதி கத்துவமும் நிரதிசய சுக சொரூபத்வமு மெப்படி வந்த தென்னில்.

உ-ம். சுழுத்தியிற் புருஷனானவன் சுகமனுபவியாவிட் டால் அவ்வவஸ்தையைவிட் டெழுந்தபிறகு நான் சுகமாய் நித்திரை செய்தேனென்று சொல்லாதிருக்கவேண்டும். துக்கிதனாயிருந்து நித்திரை செய்தேனென்று சொல்ல

வேண்டும். அங்ஙன மில்லாதபடியினாற் சுழுத்தியவஸ்தை யிற் சமஸ்தமான பேர்களாலு மனுபவிக்கப்படுகிற வானந் தத்தில் நித்தியமாய் நிருபாதிகமாய் நிரதிசயமான சுக சொரூபத்வ லட்சண மிருக்கின்றது.

ச-கை. அந்தச் சுகத்திற்கு நிருபாதிகத்வ மெப்படி யென்னில்,

உ-ம். சுகஜன்னியமாகிய சற்சந்தன்றி விஷயங்கள் சுழுத்தி யவஸ்தையி லில்லாதிருந்தபோதும் சமஸ்தமான பேர்களுஞ் சுக மனுபவிக்கிறபடியால் அதற்கு நிருபாதி கத்வமுண்டு.

ச-கை. அதற்கு நிரதிசயத்வ மெப்படி யென்னில்,

உ-ம். சமஸ்த விஷய ஜன்னியமாகிய சுகங்களிலும் உத்கிருஷ்ட ஸ்திரீ சம்போக சுகத்திலும் விரசம்பிறந்து சம ஸ்தபிராணிகளு மந்தச் சுகங்களை விட்டுப் பிரதிதினமும் இந்தச் சுழுத்திசுகத்தையே யபேட்சித்து அந்தச் சுகத் திற்கு விக்கினம் பண்ணினவர்களைத் தண்டித்து அந்தச் சுகத்தையே மேலுமேலும் விரும்புகிறபடியினாலும் அதற்கு நிரதிசயத்வமுண்டு. இது மாத்திரமல்ல; சாக்கிரசொப் பனங்களிற் றோற்றப்பட்ட ஆதியாத்மீகம் ஆதிதெய்வீகம் ஆதிபவுதிகமாகிய தாபத்திரய துக்கங்களையும் போக்கின படியாலும் நிரதிசயத்வமுண்டு.

ச-கை. அதற்கு நித்தியத்துவ மெப்படியென்னில்,

உ-ம். சாக்கிர சொப்பனங்களி லனுபவிக்கப்பட்ட சமஸ்த விஷய, சுகங்களை யனேகவித ரூபமா யனுபவியா மல் பிரதிதினஞ் சமஸ்தமான பேர்களு மேகரூபமாகவே யனுபவிப்பதா லதற்கு நித்தியத்துவமுண்டு.

ச-கை. சுழுத்திசுகம் நித்தியமென்றால் சாக்கிரசொப் பனங்களிலுந் தோற்றவேண்டுமே. அங்ஙனந்தோற்றாத சுழுத்தி சுகத்திற்கு நித்தியத்துவ மெப்படி யென்னில

உ-ம். சுழுத்திசுகம் நித்தியமா யிருந்தபோதிலும் துக்கரூபமாகிய தேகேந்திரியாதி கூட்டரவினால் திரோதானப்பட் டிருக்கிற படியால் தோற்றவில்லை.

ச-கை. ஆத்மகாரியங்களாகிய தேகேந்திரியங்களினாற் காரணபூதமாகிய ஆத்ம சுகத்திற்குத் திரோதான மெப்படி கூடுமென்னில்,

உ-ம். அக்கினிக்குப் பிரகாசம் சுதசித்தமா யிருந்தாலுஞ் சுபகாரியமாகிய தூம சம்பிரசத்தினால் திரோதானம் வருகிறதுபோலும், ஆதித்தனுக்குப் பிரகாசம் சுதசித்தமா யிருந்தாலும் சுபகாரியமாகிய மேகாதிகளால் அவ்வாதித்தப் பிரகாசத் திரோதானம் வருகிறதுபோலும், ஆத்மாவுக்குஞ் சார்வதா சுகசொரூபம் சுதசித்தமாயிருந்தாலும் ஆத்ம காரியமாகிய தேகேந்திரியாதி சம்பிரசத்தினால் சாக்கிர சொப்பனங்களி லந்தச் சுகத்திற்குத் திரோதானம் வரும். பகிர்முகமானவனுக்கு இந்தச்சுகம் ஆத்மசுகமென று சாக்கிர சொப்பனங்களிற் றோற்றுமற்போனாலும் அந்தர்முகமானவனுக்குச் சார்வதா தோற்றிக்கொண் டிருக்கும். ஆதலாலிந்தச் சுழுத்திசுகமே காலத்திரயத்திலு மிருக்கிற படியால் இதற்கே நித்தியத்துவமும் நிருபாதிகத்துவமும், நிரதிசயத்துவமுமாகிய சுகசொரூபஞ் சித்தித்திருக்கின்றது. இப்படியே சாக்கிர சொப்பன சுழுததிகளிலும் விஷயகாலங்களிலும் ஆத்மானந்தமே பிரதிபலித்து விளங்குகின்றது. இதைச் சற்குருவினால் விசாரித்துத் தெளிந்தறியவேண்டும்.

ச-கை. இப்படி தெளிந்த விசாரத்திற்குப் பலமேதென்னில்,

உ-ம். இப்போது சொல்லிய சத்ரூபத்வமுஞ் சித்ரூபத்வமு மானந்த ரூபத்வமும் நம்மிடத்திற் சித்தித்

திருக்கிறபடியால் அந்தச் சச்சிதானந்த ஸ்வரூபமாகிய வாத்மா நாமேயென்கிற திடப்பிரஞ்ஞை வருகிறதே இந்த விசாரத்திற்குப் பலமென்று சகலசுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

சச்சிதானந்தலக்ஷண நிருபகம்

முற்றிற்று.

---

பதின்மூன்றாவது

## அகண்டத்வ நிருபகம்.

சங்கை. சச்சிதானந்த சொரூபமாகிய ஆத்மாவுக்கு அகண்டத்வமாவ தேதென்னில்,

உத்தரம். தேசத்தினுலுங் காலத்தினுலுங் வஸ்துவினு லும் வரும் அபரிச்சின்னத்துவமே யகண்டத்துவம்.

ச-கை. அகண்டத்வத்துக் கிந்த மூன்றுவிசேஷமு மேன்சொல்ல வேண்டும்? ஒரு விசேஷமாகிலு மிரண்டு விசேஷமாகிலும் போதாதோவென்னில்,

உ-ம். போதாது.

ச-கை. ஆத்மாவுக்குத் தேசத்தினுல் வருகிற அபரிச்சின்னத்வமே யகண்டத்வமெனச் சொல்லுவோமே யென்னில்,

உ-ம். ஆகாசமும் வியாபகமா யிருக்கிறபடியால் அவ் வாகாசத்திற் ககண்டத்வம் வரும். ஆதலா லவ் வாகாசத் திற்கு அகண்டத்வம் நிராகரிக்கிற நிமித்தமாய் காலத்தினு லும் அபரிச்சின்னத்வமே யகண்டத்வ மென்றுஞ் சொன் னோம்.

ச-கை. ஆகாசத்திற்குக் காலத்தினு லபரிச்சின்னத்வ மில்லையாயெனில்,

உ-ம். ஆகாசம் உற்பத்திநாசவவயத்தாயிருக்கிறபடியால் அதற்குக் காலத்தினு லபரிச்சின்னத்வஞ் சொல்லக் கூடாது. ஆனபடியினுல் காலத்தினுலு மபரிச்சின்னத்வ மென் றிரண்டாம் விசேஷமுஞ் சொல்லவேண்டிற்று.

ச-கை. இவ்விரண்டு விசேஷமும் போதுமே யென்னில்,

உ-ம். காலம் விபுவாய் தேசத்தினுலும் ஆகாசத்தினு லும் அபரிச்சின்னமா யிருக்கிறபடியினுலும், தனக்குப் பரிச்சேதங் கூடாதிருப்பதினுலும், அபரிச்சின்னத்வமாய் அகண்டத்வம் வரும். ஆதலால் காலத்திற் ககண்டத்வ நிரா கரிக்கிறநிமித்தம் ஸ்வரூபத்திற்கு வஸ்துவினுலும் அபரிச் சின்னத்வமென்று மூன்றும் விசேஷமுஞ் சொல்லவேண் டிற்று.

ச-கை. காலத்திற்கு வஸ்துவினுல் அபரிச்சின்னத்வ மில்லையா யெனில்,

உ-ம். காலம் ஆகாசாதிக ளல்லாதபடியினுல் அதற்கு வஸ்துவினுல் அபரிச்சின்னத்வ முண்டானுலும் ஆத்மாவை யன்றிக் காலாதிகளுக்குத் திரிவிதபரிச்சேத சூனியரூப மாகிய வகண்டத்வங் கூடாது.

ச-கை. ஆனுல் நானிந்தத் தேசத்திலிருக்கிறேன், அந்தத் தேசத்திலில்லையென்று தேசத்தினுலும், நான் முன்வருஷத்திற் பிறந்தேன், கொஞ்சநாளைக்குப்பின் பில் லாமற் போகிறேனென்று காலத்தினுலும், பிருதிவியாதிக ளல்லவென்று வஸ்துவினுலும் அபரிச்சின்னத்வமாகிய ஆத்மாவுக்குப் பரிச்சின்னத்வ முண்டாயிருக்கத் திரிவித பரிச்சேத சூனியமெப்படி கூடுமென்னில்,

உ-ம். நானிந்தத் தேசத்திலிருக்கிறேன், இந்தக்காலத்திற் பிறந்தேன், இந்தவஸ்து நானல்லவென்கிற திரிவித பரிச்சேதமும் அத்தியாசமாய் தேகத்தை யபேட்சித்துக் கொண்டே வருகிறபடியால், அத்தேகத்திற் கன்னியமான வாத்மாவுக்குத் தேசகாலவஸ்துக்களினாலும் அபரிச்சின்னத்வமுண்டு.

ச-கை. ஆனா லாத்மாவுக்குத் தேசத்தினா லபரிச்சின்னத்வ மெப்படி யென்னில்,

உ-ம். கடஜன மடஜன குட்டியஜன குசவுலஜன பிருதிவிசதி அப்புசதி தேயுசதி வாய்வுசதி ஆகாசசதி யென்றும், பூத பௌதிக மாகிய சமஸ்த பிரபஞ்சத்திலுஞ் சத்ரூபனாகிய ஆத்மாவுக் கனுவிர்த்தியிருக்கிறபடியால், ஆத்மா வியாபகனாயிருக்கிறான். அப்படி வியாபகனாயிருக்கிற ஆத்மாவுக்குத் தேசத்தினாலும் அபரிச்சின்னத்வமிருக்கின்றது.

ச-கை. ஆனா லாத்மாவுக்குக் காலத்தினா லபரிச்சின்னத்வ மெப்படி யென்னில்,

உ-ம். ஆத்மா அனாதியாயிருக்கிறபடியினாற் பூதகாலத்தினாலும், நித்தியனாயிருக்கிறபடியினால் பவிஷியகாலத்தினாலும், தேகாதி வெதிருத்தனாயிருக்கிறபடியினால் வர்த்தமான காலத்தினாலும், பரிச்சின்னமில்லாதபடியா லாத்மாவுக்குக் காலத்தினாலும் அபரிச்சின்னத்வ மிருக்கின்றது.

ச-கை. ஆனா லாத்மாவுக்கு வஸ்துவினா லபரிச்சின்னத்வ மெப்படி யென்னில்,

உ-ம். சர்வாத்மனா யிருக்கிறபடியா லாத்மாவுக்கு வஸ்துவினாலும் பரிச்சின்னமில்லை.

ச-கை. வஸ்துவாவ தேதென்னில்,

உ-ம். சுசாதிக விசாதிக சுவகத பேதமென் றூன்றுவிதமா யிருக்கும்.

ச-கை. மூன்றுவித ஜாதிபேதங்களேதென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் விருட்சத்திற்கு விருட்சாந்தரம் சுசாதிகம், பாஷாணுதிகள் விசாதிகம், பத்திரபுஷ்ப பலாதிகள் சுவகதபேதமென்று சொல்லப்படும். இந்த மூன்றுபேதமு மில்லாதபடியினுல் ஆத்மா சுகாதிக விசாதிக சுவகத பேத ரகிதமென்று சுருதியிற் சொல்லப்படுகின்றது.

ச-கை. கடஜன மடஜன குட்டியஜன குசவுலஜன தேவதத்த யெக்கியதத்த சயித்திராத்மா மயித்திராத்மா என்கிற சுசாதிகமும், சுசாதிகபேதமும், பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாச கட மட குட்டிய குசவுல வென்கிற விசாதிகமும், விசாதிகபேதமும், இச்சாதுவேஷ சுகதுக்க சத்துவ ராசத தாமச மென்கிற சுவகதமும், சுவகத பேதமு மாத்மாவுக் கிருக்கிறபடியினுல் சுசாதிக விசாதிக சுகத பேத ரகித மென் றெப்படி சொல்லலா மென்னில்,

உ-ம். ஆத்மாவுக்குச் சுசாதிகாதிபேதங்கள் உபாதியினுல் வந்ததே யல்லாமல் பாரமார்த்தீகமாய் விசாரிக்குமிடத்திலில்லையென்றே சொல்லவேண்டும்.

ச-கை. இல்லையென்று சொல்லுகிற தெப்படி யென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் ஒரு ஆகாசமே கட மட குட்டிய குசவுலவன விருக்ஷாதி யுபாதியினுல் கடாகாச மடாகாச குட்டியாகாச குசவுலாகாச வனுகாச விருக்ஷாகாச மென் றனேகமாக விவகரிக்கப்படுகிறதுபோல், ஆத்மாவும் நாமரூபக்கிரியை மூன்னிலை யாதிகளாகிய சரீர வுபாதிகளினுல் தேவதத்த யெக்கிய தத்த விஷ்ணுமித்திர கிருஷ்ண ராமனென் றனேகமாய் விவகரிக்கப்படுகின்றது. பாரமார்த்தீகமாய் விசாரிக்குமிடத்தில் அவ் வாகாசத்

தைப்போலு மாத்மாவுக்குச் சுசாதிகமும் சுசாதிகபேதமு மில்லை.

ச-கை. விசாதிகபேத மில்லையென்பதெப்படி யென்னில்,

உ-ம். சத்ரூபனாகிய வாத்மாவுக்கு விசாதிகமாகிய பிரபஞ்சமெல்லாம் சச விஷாண வந்தியா புத்திர ககனார விந்தம்போல் அசத்தாயிருக்கிறபடியினால், விசாதிகமும் விசாதிகபேதமுமில்லை.

ச-கை. சுவகத பேத மில்லையென்ப தெப்படியென்னில்,

உ-ம். இச்சை துவேஷ சுகதுக்காதிகளெல்லாம் அந்தக்கரண சுபாவமன்றி யாத்மசுபாவ மல்லாதபடியினால் சுவகதமும் சுவகதபேதமுமில்லை.

ச-கை. ஆனாற் பின்னமாகிய சச்சிதானந்தத்தினா லாத்மாவுக்குப் பேதமில்லையாவென்னில்,

உ-ம். சச்சிதானந்தங்கள் அன்னியோன்னியமும், பின்னமுமாகுமானாற் பேதமுண்டு; அங்ஙன மில்லாதபடியினாற் பேதமில்லை.

ச-கை. ஆனால் சத்துசித்து ஆனந்தமென்று சப்த பேதமும், அர்த்தபேதமு மிருப்பதினாலும், அஸ்த கர பாணி சப்தத்தைப்போற் பரியாய சப்த மல்லாமற் போனபடியினாலும் சச்சிதானந்தத்திற்கெப்படி யேகார்த்தங் கூடுமென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் தீபமானது சிவப்பு உஷ்ணம் பிரகாசமென்று சப்தத்தினாலும் அர்த்தத்தினாலும் பின்னம்போல விவகரிக்கப்பட்டாலும் அஸ்த கர பாணி சப்தம்போலும் பரியாய சப்தமல்லாதபடியினாலும், சிவப்பு உஷ்ணம் பிரகாசம் தீபத்திற்கு ஸ்வரூபமா யிருக்கிறபடி

யினுலும் பரஸ்பர பின்னமின்றி யேகார்த்தங் கூடுவது போலத் தாஷ்டாந்தத்திற் சச்சிதானந்தங்கள் சப்தத்தினு மர்த்தத்தினுலும் பின்னம்போல விவகரிக்கப்பட்டாலும் ஆத்மசுபாவமாயிருக்கிறபடியால் பரஸ்பர பின்னமின்றி ஏகார்த்தங் கூடும்.

ச-கை. அப்படி பேதமில்லாவிட்டால் சுருதியாதிகள் ஆத்மா சத்ரூபனென்று ஒன்றுமாத்திரஞ் சொல்லவேண்டும். அப்படியில்லாமற் சித்ரூபனென்று மானந்தரூபனென்று மெதைப்பற்றிச் சொல்லுகின்றது? பேதமில்லாவிட்டா லிப்படி சொல்லுமாவெனில்,

உ-ம். சுருதியாதிகள் சச்சிதானந்தங்களுக்குப் பேதஞ் சொல்லுமிடத்தில் தாற்பரியமேயில்லை.

ச-கை. பின்னை யெப்படி தாற்பரியமென்னில்,

உ-ம். ஆத்மசுபாவமாகிய சத்து அசத்தாகிய ஜகசுபாவமாகவும், ஆத்மசுபாவமாகிய சித்து ஜடமாகிய புத்தியாதி சுபாவமாகவும், ஆத்மசுபாவமாகிய ஆனந்தம் துக்கரூபமாகிய புத்திரபாரியாதி சுபாவமாகவுந் தோற்றிக்கொண்டு, ஜகசுபாவமாகிய அசத்ரூபமும், புத்தியாதி சுபாவமாகிய ஜடரூபமும், புத்திரபாரியாதி சுபாவமாகிய துக்கரூபமுமாய் நான் செத்துப்போகிறேன், நான் சடன், நான் துக்கியென் றுத்மசுபாவமாய்த் தோற்றுகிற இந்த விபரீதபிராந்தியை நிராகரிக்குநிமித்தம் ஆத்மா சத்ரூபன், சித்ரூபன், ஆனந்த ரூபனென்று சுருதியாதிகள் சொல்லுகிற தாற்பரியமன்றி, ஆத்மசொரூபமாகிய சச்சிதானந்தத்திற்கு அன்னியோன்னியபேதஞ் சொல்லுமிடத்தில் தாற்பரியமேயில்லை. இன்னமும் சில சமயிகள் ஆத்மா ஜடரூபனென் றங்கிகரித்து அவனுக்குச் சத்து தர்மமென்றுஞ் சிற்சுகங்கள் குணங்களென்றுஞ் சொல்லுகிறபடியா லவர்களை நிராகரிக்குநிமித்தமு மாத்மா சச்சிதானந்த சொரூபமென்று சுரு

தியாதிகள் சொல்லுகின்றன. ஆகையால் சத்தே சித்து, சித்தே யானந்தமென்று சுருதி தாற்பரியம் தீர்க்கமாகச் சித்தித்தது.

ச-கை. சுருதியினாற் சித்தித்ததுபோல் யுக்தியினாலுஞ் சித்திக்க வில்லையே யென்னில்,

உ-ம். யுத்தியினாலுஞ் சித்தித்திருக்கின்றது.

ச-கை. அதெப்படி? சத்தானது தானே தோற்றுகின்றதா? மற்றொன்றினால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகின்றதாவென்னில்,

உ-ம். தானே தோற்றப்படுகிறதென்றே சொல்லவேண்டும். அப்படி சொன்னால் சத்தே சித்தென்று யுத்தியினாலும் சித்திக்கின்றது. மற்றொன்றினால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகிறதென்று சொல்லுவோமானால், சத்துவிலட்சணத்தினால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகின்றதா, சுதந்தரத்தினால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகிறதாவென்று சங்கைவரும்.

ச-கை. சத்துவிலட்சணத்தினால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகிறதென்று சொல்லலாமா வென்னில்,

உ-ம். அப்படியானால் சத்துவிலட்சணம் அசத்தானபடியினால் அவ்வசத்தான சத்துவிலட்சணத்தினால் சத்து. தோற்றப்படுகிறதென்று சொல்லக்கூடாது. அப்படி சொன்னால் அசத்தாகியசச விஷாணாதிகளாலும் சத்தாகிய கடாதிகள் தோற்றவேண்டும். அப்படி தோற்றாதபடியினால் சத்துவிலட்சணமாகிய வசத்தினாற் சத்துதோற்றுகிறதென்று சொல்லவேகூடாது.

ச-கை. ஆனால் சுதந்தரத்தினாலேயே சத்து தோற்றுவிக்கப்படுகிறதென்று சொல்லலாமாவென்னில்,

உ-ம். சொல்லலாம்.

ச-கை. அந்தச் சுதந்தரம் தானுந்தோற்றிக்கொண்டு சத்தைத் தோற்றுவிக்கின்றதா? தான்தோற்றமற் சத்தைத் தோற்றுவிக்கின்றதா வென்னில்,

உ-ம். சுதந்தரம், சுதாவாகத் தோற்றியிருந்துகொண்டு அந்தச் சத்தைத் தோற்றுவிக்கிறதென்று சொல்வோமானுல், அந்தச் சத்தெதினுல் தோற்றப்படுகிறதென்று அனவஸ்தாதோஷம் வரும். ஆதலால் சுதந்தரம் தன் சுதாவாகவே தோற்றமல் தோற்றிக்கொண்டிருந்து அந்தச் சத்தைத் தோற்றுவிக்கிற தென்று சொல்லவேண்டும்; மேலும் வேதாந்தபட்சத்தில் இரண்டுசத்து இல்லாதபடியினுல், எந்தச்சத்து சுதாவாகத் தோற்றப்படுகின்றதோ அதற்கே சித்துத்வமென்று யுக்தியினுலுஞ் சித்தித்தது.

ச-கை. ஆனுல் சித்தாகிய சத்துக்கு ஆனந்தத்வஞ் சித்திப்ப தெப்படியென்னில்,

உ-ம். சத்விதியத்தினு லானந்தமுஞ் சித்தித்திருக்கின்றது.

ச-கை. சித்தாகிய சத்துக்குச் சுதந்தரத்தினுல் சத்விதியத்வம் வருகின்றதா? சத்துவிலட்சணத்தினுல் வருகின்றதா வென்னில்,

உ-ம். சுதந்தரத்தினுல் வருகின்றதென்று சொல்லக்கூடாது.

ச-கை. ஏனென்னில்,

உ-ம். சத்துக்குச் சுதந்தரத்வ முபாதிமாத்திரமன்றிச் சுதாவாயில்லை.

ச-கை. சத்விதியவிலட்ஷணத்தினுல் சத்துக்குச் சத்விதியத்வம் வருகிறதென்று சொல்லுவோமேயென்னில்,

உ-ம். சத்விதியவிலட்சணமும் ரச்சுசர்ப்பத்தைப் போல் சத்தான படியினுல் அவ் வசத்தான சத்விதியவிலட்

சணத்தினால் சித்தாகிய சத்துக்குச் சத்விதியத்தம்வரு கிறதென்று சொல்லக்கூடாது. ஆகையினால் அந்தச் சத்துக்குச் சுதந்தரமும் சத்விதியலட்சணமும் சத்விதியத் வஞ் சம்பாதிக்கப்பட்ட பதார்த்தங்களா யில்லாதபடி யினால், அந்தச் சத்விதியத்துக்கு அத்விதியத்வஞ் சித்தித் தது. அந்த அத்வைதமே யானந்தரூபத்வ மானபடியால், எப்போது அத்வைதஞ் சித்தித்ததோ, அப்போதே ஆனந்த ரூபத்வமுஞ் சித்தித்தது. இந்தப்படி யுத்தியினாலும் சத்தே சித்து, சித்தே யானந்தமென்றுஞ் சித்தித்தது.

ச-கை. சுருதியுத்திகளினா லல்லவோ சித்தித்தது? அனுபவத்தினாற் சித்திக்கவில்லையே யென்னில்,

உ-ம். அனுபவத்தினாலுஞ் சித்தித்திருக்கின்றது

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சுழுத்தியிற் சர்வப்பிராணிகளாலும் அனுபவிக் கப்பட்டதாய் ஒருசுகந் தோற்றுகின்றதே; அந்தச்சுகஞ் சாக்கிரசொப்பனத்திற் தோற்றப்பட்ட சுகம்போல நானா ரூபமாயிருக்காமல் சர்வப்பிராணிகளுடைய சுழுத்தியினும் ஏகரூபமாயிருக்கிறபடியினால் அந்தச் சுழுத்தி சுகமே சத் தாயிற்று.

ச-கை. அந்தச் சத்தாகிய சுழுத்தி சுகத்திற்குச் சித் துத்வ மெப்படி யென்னில்,

உ-ம். தானுந் தோற்றிக்கொண்டு தன்னிடத்திலாரோ பிக்கபட்ட சர்வபதார்த்தங்களையுந்தோற்று விக்கிறபடி யினால் சித்துத்வமு முண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சுழுத்தியிலிருந்தெழுந்த புருஷனால் நான் சுக மாய் நித்திரை செய்தேன், ஒன்றையுமறியாதிருந் தேனெ ன்று ஒருசுகமும் அஞ்ஞானமுந் தோற்றப்படுகின்றது.

இந்தநினைவு அனுபவ மில்லாமல் வரா தாகையினால் இந்தச் சுகமும் அஞ்ஞானமும் சுழுத்திகாலத்தி லனுபவிப்பதாகத் தோற்றுகின்றது. அந்தச் சுகம் சுவரூபமானபடியினால் சுகமனுபவிக்கப்படுகிற தென்பது மோகமே. அஞ்ஞானமாத்திரமே யனுபவிக்கப் படுகின்றது.

ச-கை. இப்படி யனுபவிக்கப்பட்ட அஞ்ஞானம் எவரால் தோற்றப்படுகிற தென்னில்,

உ-ம். சுழுத்தி யவத்தையில் பிரகாச சாதனங்களாகிய ஆதித்த சந்திர நட்சத்திர மின்னல் அக்கினி சட்சுவாதிக ளில்லாமற் சுகமாத்திரந் தோற்றிக்கொண்டிருக்கிறபடியால், அந்தச் சுகத்தினு லஞ்ஞானந் தோற்றப்படுகிறதென்றே சொல்லவேண்டும்.

ச-கை. அஞ்ஞானத்தினாற் சுகந் தோற்றப்படுகிறதென்று சொல்லுவோமேயென்னில்,

உ-ம். அஞ்ஞானஞ் சடமாகையினால் அதனாலந்தச் சுகந் தோற்றப்படுகிறதென்று சொல்லப்படாது.

ச-கை. அந்தச் சுகம் தான் தோற்றிக்கொண் டஞ்ஞானத்தையுந் தோற்றுவிக்கின்றதோ? தான் றோற்றாமலஞ்ஞானத்தைத் தோற்றுவிக்கின்றதோ வென்னில்,

உ-ம். தான் றோற்றாம லஞ்ஞானத்தையுந் தோற்றுவிக்கமாட்டாது; ஆகையால் தான் தோற்றிக்கொண்டே யஞ்ஞானத்தையுந் தோற்றுவிக்கின்றது. அவ் வஞ்ஞானத்தினாற் சமஸ்த பிரபஞ்சமு மலினமாயிருக்கிறபடியினாலும், அஞ்ஞானத்தையுந் தோற்றுவிக்கின்றபடியினாலும் அந்தச் சுகத்திற்கே சகல பதார்த்த அவபாசகத்வஞ் சித்தித்தது. இதுவே யாத்மாவுக்குச் சர்வக்ஞத்வமாகையினாற் சுழுத்தி யவத்தையிற் சத்தாகிய சுகத்திற்குச் சித்ரூபத்வமுஞ் சித்தித்தது.

ச-கை. இதற்கு ஆனந்தரூபத்வ மெப்படியென்னில்,

உ-ம். இந்தச் சுழுத்தி சுகத்திற்கு நிருபாதிக நிரதிசய சுகசொரூபத்வ மிருக்கிறபடியா லானந்தரூபத்வமுஞ் சித்தித்தது. ஆதலா லனுபவத்தினாலுஞ் சத்தே சித்து; சித்தேயானந்தமென்று சித்தித்தது. இந்தப்பிரகாரத்தினாலாத்மாவுக்குச் சச்சிதானந்தங்கள் சுவரூபமாகையினால் சுவகதபேதமும், விசாதிகமாகிய வனாத்மா அசத்தாகையினால் விசாதிகபேதமும், ஆத்மாந்தர மில்லாதபடியினால் சுசாதிக பேதமுமில்லை. இப்படி சர்வாத்மனாயிருக்கிற வாத்மாவுக்குச் சுசாதிக விசாதிக சுவகத பேதரூபமாகிய வஸ்துவின்ற் பரிச்சேதமேயில்லை. மேலும் ஆத்மா விபுவாயிருக்கிறபடியால் தேசத்தினாலும், நித்தியனாயிருக்கிறபடியால் காலத்தினாலும், சர்வாத்மனாயிருக்கிறபடியினால் வஸ்துவினாலும் பரிச்சேத மில்லாதிருக்கின்றபடியினால் சச்சிதானந்த சொரூபமாகிய வாத்மாவுக்கு அகண்டத்வஞ் சித்தித்தது. இவ்வகண்டத்வ சொரூபமாகிய சச்சிதானந்த லக்ஷணத்தைத் தெளிந்த சுவானுபவ ஞானாசாரியரிடத்தில் விசாரித் தறியவேண்டும்.

ச-கை. இந்த விசாரத்திற்குப் பல மேதென்னில்,

உ-ம். சமஸ்த பிராணிகளுந் தேகமே நானென்று திடப்பிரக்ஞையா யிருப்பதுபோலத் தேகத்தினிடத்தில் நானென்கிற ஆத்மபுத்தி வராமல் அகண்ட சச்சிதானந்த சொரூபமாகிய ஆத்மாவே நானென்கிற திடப்பிரக்ஞை பெறுவதே இந்த விசாரத்திற்குப் பலம். இப்படி சற்குரு முன்னிலையில் விசாரித்து ஆத்மசுவரூபமே நானென் றறிகிறவனெவனோ, அவனே சர்வ சமுசாரத்திலுமிருந்து விடுபட்டவனும் பரிபூரண ஞானியுமென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

## அகண்டத்வ நிரூபகம்

முற்றிற்று.

---

பதினென்காவது

# அஞ்ஞானசொரூப நிரூபகம்.

சங்கை. எந்த அஞ்ஞானத்தினால் சமஸ்தபிராணிகளும் ஜனனமரண துக்கபரம்பரையைப் பெறுகிறார்கள். அந்த அஞ்ஞான சொரூப மேதென்னில்,

உத்தரம். தன்னைத்தா னறியாதிருக்கிறதே யஞ்ஞானம்.

ச-கை. எவர்களுந் தன்னைத்தா னறியார்களாவென்னில்,

உ-ம். அறியார்கள்.

ச-கை. யாருந் தன்னைத்தா னறியாதிருக்கிறார்களென்று சொல்லலாமா வென்னில்,

உ-ம். அப்படியிருக்கிறபடியினாற் சொல்லலாம்.

ச-கை. ஆனால் தன்னை மற்றெப்படி யறிகிறார்களென்னில்,

உ-ம். நான் மனுஷன், நான் ஸ்திரீ, நான் புருஷன், நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரமசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் மூரிகநாட்டான், நான் வேலிநாட்டான், நான் வேரிநாட்டான், நான் யோகி, நான் தெலுங்கன், நான் தமிழன், நான் கர்னாடகன், நான் மாராஷ்டகன், நான் தத்துவாதி, நான் வைஷ்ணவன், நான் சைவன், நான் வீரசைவன், நான் பாகவதன், நான் பத்தன், நான் புராணிகன், நான் சாஸ்திரி, நான் கிருஷ்ணன், நான் ராமன், நான் நாராயணன், நா னின்னானுக்குத் தகப்பன், நான் இன்னானுக்குப் பிள்ளையென் றிப்படி யறிகிறார்களேயல்லாமல் வேறில்லை.

ச-கை. எவர்களுந் தங்களைத் தாங்களறியார்களென்று முன்னே சொல்லி, இப்போது இப்படியே யறிகிறார்களென்று சொன்னால் பூர்வ வசனத்திற்கும் இந்த வசனத்திற்கும் விரோத மில்லையாவெனில்,

உ-ம். இல்லை. தான் மனுஷனல்லாததினால் தன்னை மனுஷனென்றறிந்ததும், தான் ஸ்திரீயல்லாததினால் ஸ்திரீயென்றறிந்ததும், புருஷனல்லாததினால் புருஷனென்றறிந்ததும், பிராமணனல்லாததினால் பிராமணனென்றறிந்ததுந் தன்னையறிந்ததல்லவே. ஆகையினா லெவர்களுந் தன்னைத்தா னறியார்களென்று சொல்லலாம்.

ச-கை. மனுஷனாகிய தன்னை மனுஷனென் றறிந்தானேயன்றி, எருதென்றறியவில்லை; ஸ்திரீயாகிய தன்னை ஸ்திரீயென் றறிந்தாளேயன்றிப் புருஷனென்றறியவில்லை; புருஷனாகிய தன்னைப் புருஷனென் றறிந்தானேயன்றிப் பசாசென்றறியவில்லை; பிராமணனாகிய தன்னைப் பிராமணனென்றறிந்தானேயன்றிச் சூத்திரனென்றறியவில்லை. இந்தப்படி சமஸ்தமானபேர்களும் யதார்த்தமாய் தங்களைத் தாங்க ளறிந்திருக்கிறபோது யாருந் தங்களைத்தாங்க ளறியார்களென் றெப்படி சொல்லுகிறதென்னில்,

உ-ம். சொல்லலாம். தாங்கள் மனுஷரேயானாற் பூர்வ ஜன்மத்தில் மனுஷனாகவே யிருக்கவேண்டும். இனி வருகிறஜன்மத்திலு மனுஷனாகவே பிறக்கவேண்டும்; அப்படியில்லையே. பூர்வஜன்மத்தில் தான் யக்ஷனோ, தேவதையோ, கந்தருவனோ, தாபரமோ, பசாசோ, எருதோ, கடாவோ, நாயோ, நரியோ வென்றறியப்பட வில்லையே. தனக்கு மனுஷத்வஞ் சுதசித்தமானால் மேலைக்குத் தேவாதி சரீரம் பெறவேண்டுமென் றிந்தச்சரீரத்தில் விரும்பியா கோபாசனாதிக் கிரியைகள் பண்ணுதிருக்க வேண்டும்.

பண்ணுகிறபடியால் தன்னை மனுஷனென் றறிந்ததறிவல்ல; இந்தப்பிரகாரமே பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திராதிகளென்று தங்களை யறிந்த தறிவல்லவென்றே யறியவேண்டும்.

ச-கை. எல்லாரு மிந்தப்பிரகார மறியார்களா வென்னில்,

உ-ம். சிலபேர்களில் லௌகீகமானவர்கள் சீவனென் றறிவார்கள். அந்தச் சீவசொரூப மேதென்றுகேட்டால், அதையறிந்து சொல்லத்தெரியாது. ஆகையா லிவர்களு மறிந்தவர்களல்ல.

ச-கை. எப்படியறிந்தவர்க ளல்லவென்னில்,

உ-ம். மனுஷனல்லாத தன்னை மனுஷனென்றறிந்தவனெப்படி யறிந்தவனல்லவோ, அதுபோலச் சீவனல்லாத தன்னைச் சீவனென்றறிந்தது மறிவல்ல.

ச-கை. சிலபேர்களிற் சாஸ்திரிகளானவர்க ளறியார்களா வென்னில்,

உ-ம். அவர்களு மறியாதவர்களே.

ச-கை. சாஸ்திரிகள் ஆத்மசொரூப மின்னதென்று நிச்சயித்துக் கொண்டிருக்க, அவர்களு மறியார்களென்று சொல்லுவ தெப்படி யென்னில்,

உ-ம். சாஸ்திரிகளிற் சாருவாகர் அனாத்மரூபமாகிய தூலதேகத்தையே யாத்மாவென்றும், பிராணோபாசகர் பிராணனையே யாத்மாவென்றும், பவுத்தரிற் சிலர் அனாத்மாவாகிய நாசமாகிற புத்தியையே யாத்மாவென்றும், சில மூடர் சச விஷாணமாகிய சூனியத்தையே யாத்மாவென்றுஞ் சொல்லுகிறார்கள். அவர்கள் சாஸ்திரிகளானாலுந் தன்னை யறிந்தவர்களல்ல. இன்னமும் மீமாஞ்சரும், சைவர்களும், ராமானுஜரும், மாத்துவரும், பரிபூரண

மாகிய வாத்மாவை யணுப்பிரமாணமென்று சொல்லுகிறார்கள். இன்னூர் தார்க்கிகர் ஆத்மாவை விபுத்வமென் றங்கிகரித்தபோதிலும் அவர்களும் ஆத்மாவை யறிந்தவர்களல்லவென்றே சொல்லவேண்டும்.

ச-கை. அதேதெனென்னில்,

உ-ம். தார்க்கிகர் ஆத்மாவுக்கு விபுத்வ மங்கீகரித்தபோதிலும், ஆத்மா அனேகமென்றும், சடமென்றும், சடமாகிய வாத்மாவுக்குச் சிற்குணமென்றும், அந்த ஆத்மாவுக்கு இச்சையாதிகுணங்க ளுண்டென்றும், திருக்காகிய வாத்மாவைத் திரிசியமா யங்கீகரித்தபடியினு லவர்கள் சாஸ்திரிகளானுலு மாத்மாவை யறிந்தவர்களல்ல.

ச-கை. சாங்கியயோகிகளு மாத்மாவை யறியார்களோவென்னில்,

உ-ம். அவர்களிற் பேதமாகிய சிலபட்சத்தார் ஆத்மாவுக்கு விபுத்வமும் சச்சிதானந்த சொரூபத்வமும், அசங்கத்வமு மங்கீகரித்தபோதிலும் ஆத்மாவை நானுவாகவும், ஜகத்து நித்தியமென்றும், சீவேஸ்வராதிகளுக்குப் பேதமு மங்கீகரித்தபடியினு லவர்கள் சாஸ்திரிகளானுலு மாத்மாவையறிந்தவர்களல்ல.

ச-கை. ஆனுல் இந்தச்சாஸ்திரிகளெல்லா மறியாமற்போனுல் போகட்டும்; வேதாந்தசாஸ்திரிகளாகிலு மாத்மாவை யறியார்களா வெனில்,

உ-ம். அவர்களில் அமுமூட்சுவென்றும், முமூட்சுவென்று மிரண்டுவிதம். அவற்றுள் முமூட்சுக்க ளிரண்டுவிதமும், அமுமூட்சுக்கள் நாலுவிதமுமா யிருப்பார்கள்.

ச-கை. அந்தநாலுவிதமானவர்க ளாரென்னில்,

உ-ம். திரவியாதி விஷயப் பிரயோசன நிமித்தம் வேதாந்தம் படித்தபேர்களும், பிரசித்திநிமித்தம் படித்த

பேர்களும், தமக்குப் பூஜார்த்தவந்தன மறியாதைநிமித்தம் படித்தபேர்களும், இதர மதத்திலிருந்துக்கொண்டு பிரதிஷ்டையாக வேதாந்த சாஸ்திரத்தின் மர்மத்தை யறிந்து தூஷிக்க வேண்டுமென்று படித்தபேர்களுமாம். இவர்கள் வேதாந்த சாஸ்திரிகளானாலு மாத்மாவை யறிந்தவர்களல்ல.

ச-கை. ஆனால் இந்த நாலுவகையானவர்களுக்கும் பலமேதென்னில்,

உ-ம். வேதாந்தத்தைத் தூஷிக்கவேண்டிப் படித்தவனுக்கு நரகமும், மிருகாதிஜந்து பிராப்தியும் உண்டு. மற்ற மூவர்களுக்கோ வென்றால், இந்தச் சரீரத்தில் திரவியாதி கீர்த்தியாதி பூஜாதிபலமும் தேகாந்தத்திற் பக்குவத்துக்கீடாய் சொர்க்காதிலோகப் பிராப்திபலமும் வரும்.

ச-கை இனி முமுட்சுக்களி லிரண்டுவகை யெப்படியென்னில்,

உ-ம். பிரதிபந்த நீக்கிப்படித்தவர்கள், பிரதிபந்தத்துடன் கூடிப்படித்தவர்க ளென்றிரண்டுவிதமா யிருப்பார்கள்.

ச-கை. பிரதிபந்தமாவ தேதென்னில்,

உ-ம். பூர்வகாரியமும் இனிமேல் நடக்குங்காரியமும் இப்போது நடக்குங்காரியமும், பூர்வாதிபழக்கம் விடாமற் சிந்தனைவருகிறதே பிரதிபந்தம். இதனோடுகூடி வேதாந்தம் படித்தால், காலாந்தரத்திற் பிரதிபந்தந் தீர்ந்தபிறகு ஆத்மசொரூபத்தை யறிந்து முத்தராவார்கள். பிரதிபந்தமின்றி வேதாந்தம் படித்தவர்க ளிந்தச் சரீரத்திற்றானே யாத்மசொரூபத்தை யறிந்து முத்தியடைவார்கள்.

ச-கை. பூர்வம் யாருந் தன்னைத்தா னறியார்களென்று சொல்லி, இப்போது பிரதிபந்தமின்றிப் படித்தவர்க ளாத்

மாவை யறிவார்களென்றுஞ் சொன்னால், பூர்வ வசனத்திற்கு மிந்தவசனத்திற்கும் விரோதமில்லையாவென்னில்,

உ-ம். பிரதிபந்த நீக்கிப்படித்து ஆத்மாவை யறிந்தவர்கள் ஆத்மாவே யாகையினால் யாரு மாத்மாவை யறியார்களென்று சொன்னதில் விரோதமில்லை.

ச-கை. பூர்வம் தன்னைத்தானறியார்களென்று சொல்லிப்பிறகு ஆத்மாவை யறியார்களென்று சொன்னதற்கு விரோதமில்லையாவெனில்,

உ-ம். தானே யாத்மாவாகியபடியினால் யாருந் தன்னைத்தா னறியார்களென்று சொன்னதற்கும், ஆத்மாவை யாருமறியார்களென்று சொன்னதற்கும் விரோதமில்லை.

ச-கை. ஆனால் தன்னையறியாமலிருக்கப்பட்ட வஞ்ஞான மெதினாற் போமென்னில்,

உ-ம். ஆத்மஞானத்தினாலன்றி மற்றொன்றினாலும் போகாது.

ச-கை. கர்மத்தினாற் போமென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். கர்மம் அஞ்ஞானவிரோதியல்லாதபடியினாலஞ்ஞானத்தைப் போக்கமாட்டாது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் கடம் கடாந்தரத்திற்கு விரோதமில்லாதபடியினால் கடத்தைக் கடாந்தரமெப்படி போக்கமாட்டாதோ, அப்படிபோல, கர்மமும் அஞ்ஞானத்திற்கு விரோதமல்லாதபடியா லஞ்ஞானத்தைப் போக்கமாட்டால் மேலுமேலும் விருத்தியே செய்விக்கும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். அமாவாசை நிசியிருட்டில்வந்த மேகாவரணம் அவ் வமாவாசை நிசியிருட்டுக்கு விரோதமல்லாதபடியி ஞல், அவ்விருட்டைப் போக்காமல் பின்னும் விருத்திசெய் விப்பதுபோலக் கன்மமும் அஞ்ஞானத்தைப் போக்காமல் பின்னும் விருத்தியே செய்விக்கும். அல்லாமலும் அமா வாசை நிசியிருளில் மார்க்கமறிந்து செல்லும் புருஷனுக் கெதிரே யொருமனுஷன் வந்தால், அவன் பிராமணனென் றாஞ் சூத்திர னென்றுந் தோற்ருமல், யாரோ புருஷன் வருகிருனென்று சாமானியமாகத் தோற்றப்படுகிறது போலும், ஒருமா டெதிர்ப்பட்டால் ரிஷபம், எருமை, பசு வெனத் தோற்ருது சாமானியமாகத் தோற்றப்படுகிறது போலும், அந்தச் சமயத்தில் மேகாவரணமு முண்டாளுல், அவ் வந்தகாரத்திற்கு அதிக விருத்தியுண்டாக்கிச் சாமா னியமாகத் தோற்றிய மனுஷாதிகளையும் பரிச்சிதந் தோற்ற வொட்டாமற் செய்கிறதுபோலக் கர்மமு மஞ்ஞான விருத்திசெய்து ஆத்மாவைப் பரிச்சிதந் தோற்றவொட்டா மற் செய்விக்கும்.

ச-கை. திருஷ்டாந்தத்தில் மேகாவரணமு மந்தகார விருத்தி செய்வித்து மனுஷாதிகளைப் பரிச்சிதந்தோற்ருமற் செய்வது பிரத்தியட்சமாகக் கண்டோம். தாஷ்டாந்தத் தில் கன்மம் அஞ்ஞானவிருத்திசெய்வித்து நித்தியமாய் லபித்திருக்கிற ஆத்மாவை எப்படி தெரியவொட்டாமற் செய்யுமெனில்,

உ-ம். அஞ்ஞானமான இருளுடன் கன்மமான மேக முங் கூடி-ஞல் மூடுபட்ட அந்தகாரத்தில் ரத்தினம், புத்த கம், சாளக்கிராமம், உருத்திராட்ச முதலிய பதார்த்தங் கள் கையிலகப்பட்டிருந்தாலும் இது வளையற்கல்லோ, ரத் தினமோ; இது வேதமோ, சாஸ்திரமோ; இது சீதாராம மோ, லட்சுமிநாராயணமோ; இது சண்முகமோவென்

றுள்ளபடியிருந்ததை யறியக்கூடாமல் மறைப்பிக்கிறது போல, அந்தக் கர்மத்தோடேகூடிய வஞ்ஞானமுமநாதிய மாய் லபித்திருக்கிற வாத்மாவைத் தோற்றவொட்டாமற் செய்விக்கும்.

ச-கை. அந்தகாரத்தில் கையிலகப்பட்ட ரத்னாதிகளு டைய யதார்த்தஞானம் எப்படி வருமென்னில்,

உ-ம். சூரியோதயமாய் அந்தகார நசித்தபிறகு கையி லிருக்கிற ரத்னாதிகளுடைய யதார்த்தஞானந் தோற்றப்படு கிறதுபோல, தாஷ்டாந்தத்திலும் கன்மத்தினால் விருத்தி யாகிய ஆவரணமான வஞ்ஞான சத்தாவரணமுஞ் சித்தா வரணமும் பிரம ஞானவிசார சூரியோதயத்தினால் நசித்த பிறகு ஆத்மா யதார்த்தமாகத் தோற்றும்.

ச-கை. திருஷ்டாந்தத்தில் சூரியோதயத்தினால் போன பொருளெது? இருக்கிறபொருளெதுவென்னில்,

உ-ம். சூரியோதயத்தினால் ரத்னாதிரூபத்தைத் தெரி யாது மறைத்த அந்தகாரமாத்திர நசித்துப்போய் மேகா வரணமாத்திர மிருக்கும்.

ச-கை. அந்த மேகாவரண மென்னசெய்யுமென்னில்,

உ-ம். சிலருக்குச் சுகமுஞ் சிலருக்குத் துக்கமுஞ் செய்விக்கும்.

ச-கை. யாருக்குச் சுகமும் யாருக்குத் துக்கமுஞ் செய்விக்குமெனில்

உ-ம். வழிநடப்போர் கிருஷிபண்ணுகிறவர்களாகிய இவர்களுக்குச் சுகமும், நெல் லுலர்த்துகிறவர், வைக்கோ லுலர்த்துகிறவர், ஸ்நானம்பண்ணினவர், வாய்வு சரீரக் காரர்களாகிய விவர்களுக்குத் துக்கமுஞ் செய்விக்கும்.

ச-கை. தாஷ்டாந்தத்திற் போகிறதெது? இருக்கிற தெது வென்னில்,

உ-ம். ஞானோதயத்தினால் அஞ்ஞான நசித்துப்போம் அஞ்ஞான காரியமாகிய தேகேந்திரியாதிகளிருக்கும்.

ச-கை. அப்படியிருக்கப்பட்ட தேகேந்திரியாதிக ளஞ்ஞானிகளுக்கென்ன செய்விக்கு மென்னில்,

உ-ம். சுகதுக்கங்களைக் கொடுத்துக் கொண்டிருக்கும்.

ச-கை. மேகாவரண மந்தகாரகாரியமல்லாதபடியினா லந்தகார நசித்துமிருக்கலாம்; தேகேந்திரியாதிக ளஞ்ஞானகாரியமாகையினால், காரணமான அஞ்ஞான நசித்தபிறகு மெப்படியிருக்குமெனில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் கற்றாழையும் புகையும் அம்பு வேகமு மிருப்பது போலிருக்கும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். கற்றாழையின் காரணமான வேர் போயும் காரியமாகிய கற்றாழை யிருப்பதுபோலும், காரணமான அக்கினி போயும் காரியமாகிய புகை யிருப்பதுபோலும், காரணமான வில்லொடிந்தும் அதனால் விடுபட்ட காரியமாகிய அம்பு வேகமிருப்பது போலும், தேகேந்திரியாதிகளின் காரணமான அஞ்ஞான நசித்துப்போனாலும் காரியமாகிய தேகேந்திரியாதிக ளிருக்கும்.

ச-கை. தேகேந்திரியாதிகளுக் கெப்போது நாசம் வருமென்னில்,

உ-ம். மேகாவரணத்தி னாசத்திற் கொரு நியம மில்லாதுபோலத் தேகேந்திரியாதிகளுடைய நாசத்திற்கு நியம மில்லை. பிராரத்த நாசத்தில் தேகேந்திரியாதிகளும் நாசப் படும்.

ச-கை மேகாவரணம் அந்தகாரவிருத்தி பண்ணுவிக்கிறது பிரத்தியட்சமாகக் கண்டோம்; கன்மம் அஞ்ஞான விருத்திபண்ணுவிக்கிறது பிரத்தியட்சமாகக் காணோமே யென்னில்,

உ-ம். திரிவிதகரணங்களிறற் செய்யப்படுகிற கனமம் அகர்த்தாவாகிய வாத்மாவைக் கர்த்தாவாகவும், அபோக்தாவாகிய வாத்மாவைப் போக்தாவாகவும், சுகதுக்கமின்றிய வாத்மாவைச் சுகதுக்கியாகவும் செய்கிறபடியால், அஞ்ஞானவிருத்தி பண்ணுகிறதென்று பிரத்தியட்சமாய்க் காணலாம். இந்தக் கன்மம் அஞ்ஞானத்தைப் போக்க மாட்டாது.

ச-கை. பின்னை யெதினுற் போமென்னில்,

உ-ம். ஆத்மஞானத்திறல் தான் போகவேண்டுமல்லாமல், வேறொன்றினுலும் போகாது.

ச-கை. இந்த ஆத்மஞான மெதினுல் வருமென்னில்,

உ-ம். விசாரணையினுல் வரவேண்டும்.

ச-கை. அப்படியேன் சொல்லவேண்டும்? திருஷ்டாந்தத்தில் அக்கினியானது பசியைப் போக்காமல் விருத்தி பண்ணினபோதிலும், அரிசியை யன்னுகாரமாய்ப் பரிணமிக்கப்பண்ணி பசியைப் போக்கடிப்பதுபோல, தாஷ்டாந்தத்தில் கன்மமானது அஞ்ஞானத்தைப் போக்காமல் விருத்திபண்ணினபோதிலும் சித்தவிருத்தியாகிய வஞ்ஞானத்தைப் போக்கிற ஞானுகாரமாய்ப் பரிணமிக்கப்பண்ணி, யஞ்ஞானத்தைப் போக்குமென்று சொல்லலாமேயென்னில்,

உ-ம். ஆனுல் அக்கினியானது அரிசியை யன்னுகாரமாகப் பரிணமிக்கப்பண்ணி பசியைப் போக்குமென்பது பிரத்தியட்சமாகக் கண்டோம்; தாஷ்டாந்தத்தில் கன்மமானது அஞ்ஞான நிவிர்த்தியாகிற ஞானத்தை யுண்டுபண்ணி, அந்தவழியினு லஞ்ஞானத்தைப் போக்குமென்பது கூடாது. ஏனென்றுல் சித்தவிருத்தியைக் கர்த்தத்வாகாரமாகப் பரிணமிக்கப்பண்ணுகிற கன்மம் அஞ்ஞா

னத்தைப்போக்கிச் சித்தவிருத்தியை அகார்த்தத்வாகார மாகப் பரிணமிக்கப்பண்ணுகிற ஞானத்தைக் கொடுக்க மாட்டாது. ஆதலால் கன்மத்தினால் ஞானம் வராது. விசாரணையினாலேயே வரவேண்டும்.

ச-கை. எந்தவிசாரணையினால் வரவேண்டுமென்னில்,

உ-ம். ஆத்மானாத்ம விசாரணையினாலேயே வரவேண்டும்.

ச-கை. அதற்குத் திருஷ்டாந்த மெப்படி யென்னில்,

உ-ம். அர்த்தத்துடன் கூடியிருக்குங் காயத்திரியைப் புருஷரா னுச்சரித்தாலும் அதனருத்தம் விசாரிக்காமையினால் தெரியவில்லை. அந்த அர்த்தந் தெரியவேண்டிச் சேதுஸ்நானமும், கங்காசாகரத்தினி லாயிரம்வருஷம் அகமருஷண ஸ்நானமும், லட்சம் பிராமணபோஜன முதலானதுகளுஞ் செய்தாலும், பஞ்சாக்கினிமத்தியிலிருந்து பதினாயிரம்வருஷந் தபசுபண்ணினாலும், நூறு அசுவமேத யாகம் லட்சங்காயத்திரிஜபம் இதுமுதலானதுகளை அனேக நாள் செய்தாலும் அந்தக் காயத்திரிக் கர்த்தந்தெரியாது; அந்த அர்த்தம் அறிந்தவர்களிடத்திற்போய் அவர்களை வழிபட்டு விசாரிக்க அவர்கள் மனமிரங்கி அதனருத்த மின்னதென்றுசொல்ல அதைக்கேட்டு மனதினால் யூகித்தால் தெரியவரும். அதுபோலத் தாஷ்டாந்தத்தில் மிருத்திகா ஸ்நானமுதலான கர்மங்கள் பண்ணினதினாலும் ஆசாரநியம நிஷ்டைகளினாலும் ஆத்மஞானம் வராது. ஆத்மானாத்ம விசாரணையினாலேயே வரவேண்டும்.

ச-கை. இதற் கனுபவ முண்டோவென்னில்,

உ-ம். சர்வானுபவ சுதசித்தமா யுண்டாயிருப்பதைக் கர்மத்துவாரா எடுத்துச் சொல்லுகிறோம்.

ச-கை. அந்தக் கர்மமாவ தேதென்னில்,

உ-ம். ஸ்நான சந்தியாவந்தன அநுஷ்டான ஜபதபாதி யுபாசனைகளும், தேவபூசை அதிதி பூசார்ச்சனைகளும், வைசுவதேவ தீர்த்தஸ்நான முதலானதுகளுங் கர்மமென்று சொல்லப்படும். இந்தக் கன்மங்களில் இதுவரைக்கும் நா மெம்மாத்திரமானாலுஞ் செய்துகொண்டு வந்தோமல்லவா? அப்படி செய்துவந்த கன்மங்களினால் இதுவரையில் நமது ஸ்வரூபந் தெரியாதபடியினால், எவர்களுக்கும் கன்மத்தினா லாத்மஞானம் வரமாட்டாது. விசார ஞானத்தினாலேயே யாத்மஞானம் வரவேண்டியது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஒருபுருஷ னொருவனை இன்றைக்குத் திதி வார நட்சத்திரயோக கரணங்க ளென்னவென்று கேட்டால், அவன் விசாரித்திருந்தால் இன்றைக் கின்னவாரம், இன்ன திதி, இன்ன நட்சத்திரம், இன்னயோகம், இன்னகரணமென்று சொல்லுவான். விசாரியாதிருந்தால் நான் விசாரிக்கவில்லை, ஆதலால் நானறியேனென்று சொல்லுவானேயல்லாமல் நான் ஸ்நானம் பண்ணவில்லை, சந்தியாவந்தனம் பண்ணவில்லை, யாசாரமா யிருக்கவில்லை, காஷாயந்தரிக்கவில்லை, பூசைபண்ணவில்லை யாகையால் நானறியேனென்று சொல்லமாட்டான். மேலும் கோவிலில் தேவதைகளுக்குப் பூசை நிவேதனமாச்சுதா வென்று கேட்டால், அவன் விசாரித்திருந்தால் ஆச்சுது, ஆகவில்லையென்று சொல்லுவான். இல்லாவிட்டா லெனக்குத் தெரியாது, நான் விசாரிக்கவில்லையென்று சொல்லுவானே யல்லாமல் நான் ஸ்நானசந்தியாவந்தன அநுஷ்டான ஜபதபங்கள் பண்ணாதபடியினா லறியேனென்று சொல்லமாட்டான். இப்படியே உலகத்திலுள்ள சர்வப்பிராணிகளினாலும் எந்தெந்த வஸ்து விசாரிக்கப்படுகின்றதோ, அந்தந்த வஸ்து ஞானம் வருமன்றி விசாரியாதவஸ்து ஞானம் வரமாட்டாது.

அதுபோலத் தாஷ்டாந்தத்திலும் ஆத்மஞானம் சமஸ்த பிராணிகளுக்கும் அனுபவ சொரூபமாகிய ஆசாரியர் முகமாய் விசாரித் தறிவதனுல் வரவேண்டுமென்றிக் கர்ம வுபாசனைகளினுல் வரமாட்டாது.

ச-கை. கன்மத்தினுல் ஞானம்வருமென்று சுருதி யாதிகள் சொல்லியிருக்க, அந்தச் சுருதியாதிகளுக்கு விரோதமாய் கன்மத்தினுல் ஞானம்வராதென் றெப்படி சொல்லலாமென்னில்,

உ-ம். ஏகதேசமாகிய நிஷ்காமகர்மமே ஞானத்திற் குப் பரம்பராசாதனமன்றி நானுவித கன்மமுஞ் சாதன மாகாது. ஆகையினுல் அப்படி சொன்ன சுருதியாதி களுக்கும் விரோதமில்லை.

ச-கை. ஆனுல் கன்ம மெத்தனை விதமென்னில்,

உ-ம். லௌகீகமென்றும், வைதீகமென்று மிரண்டு விதம். இவ்விரண்டினுள் லௌகீககர்மஞ் சீவனத்துக் கேது வாகுமன்றி யதனுல் ஞானம் பிறவாது. எனைய வைதீக கர்மமு மைந்துவிதமாயிருக்கும்.

ச-கை. அது எப்படியென்னில்,

உ-ம். நித்திய, நைமித்திய, காமிய, நிஷித்த, பிராயச் சித்தமென் றைந்துவிதம். அவற்றுள் காமியகன்மத்தி னுல் ஞானம்வராது; சொர்க்கமாத்திரம் வரும். நிஷித்த கன்மத்தினுல் காலசூத்திராதி நரகங்கள்வரும். பிராயச் சித்த கன்மத்தினுல் புருஷனுக்குக கர்மத்தி லதிகாரத்துவ முண்டாக்கிப் பிரத்தியவாயத்தையும் போக்கடிக்கும். ஆதலா லிம்மூன்று கன்மமும் ஞான சாதகமல்லாமற் போயிற்று.

ச-கை. நித்திய, நைமித்திய கன்மங்களோ வென்னில்

உ-ம். அதுகளும் சாத்துவித, ராசத, தாமதமென மூன்றுவித கன்மங்களாயிருக்கும். அவற்றுள் ராசத தாமத கர்மங்க ளிரண்டுஞ் ஜன்ம ஜன்மங்களேயுந் துக்க சுகங்களேயுங் கொடுக்குமன்றி யவ்விரண்டினுலும் ஞானம் வராது. சாத்துவித கர்மமாத்திரத்தினுல் சித்தசுத்திவரும். அந்த சித்தசுத்தித்துவாரா, ஞானத்திற்குப் பரம்பரா சாதனமென்று சொல்லப்படும். இதுவே சுருதியாதிகளின் சம்மதமுமென் றறியவேண்டியது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். நித்திய, நைமித்தியரூபமாகிய சாத்துவிதகர்மத்தினுல் தன்னே விசாரிக்கச் சித்தசுத்திவரும். சித்தசுத்தித்துவாரா நித்தியா நித்திய வஸ்துவிவேகம்வரும். நித்தியா நித்தியவஸ்து விவேகத்துவாரா, இகமுத்திரார்த்த பல போக விராகம்வரும். இகமுத்திரார்த்த பலபோக விராகத்துவாரா, சமாதிஷட்க சம்பத்திவரும். சமாதிஷட்க சம்பத்தித்துவாரா, முமூட்சுத்வம்வரும். முமூட்சுத்வத்துவாரா, சற்குருலாப முண்டாம். சற்குரு லாபத்துவாரா சிரவணமும், சிரவணத்துவாரா மனனமும், மனனத்துவாரா நிதித்தியாசனமும், நிதித்தியாசனத்துவாரா உள்ள படியிருக்கிற ஆத்மஞானமும் வரும். இந்தப்படி ஏகதேச மான கன்மம் ஞானத்திற்குப் பரம்பராசாதனமென்றும், விசார முண்டாவதுவே சாட்சாத் சாதனமென்றுஞ் சொல்லவேண்டியது.

ச-கை. இந்தத் திருஷ்டாந்தத்திற் கனுபவ முண்டோ வென்னில்,

உ-ம். பசித்தவர்களுடைய பசியைப் போக்கித் திருப்தி யாக்குவதற்குப் பக்குவமாகிய அன்னமே சாட்சாத் சாதனமும், உழவு முதலிய பயிர்களே பரம்பராசாதனமுமா யிருப்பதுபோல, அஞ்ஞானத்தைப்போக்கி யாத்மானுபவ

திருப்தியாக்குவதற்கு நிஷ்காமகன்மமே பரம்பராசாதன மும், விசார ஞானமே சர்ட்சாத் சாதனமுமாயிருக்கின் றது. இந்தப்படி அஞ்ஞான சொரூபத்தை அருளே திரு மேனியான வாசிரியர் முன்னிலையிற் சந்தேக விபரீதமற விசாரித்தறிகிறவ னெவனோ, அவனே கிருத கிருத்தியனு கிய பிரம வித்தென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல் லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

அஞ்ஞானசொரூப நிரூபகம்.

முற்றிற்று.

---

பதினைந்தாவது.

# ஞானாஞ்ஞானசொரூப நிரூபகம்.

ச-கை. ஞானஞ்ஞான சொரூபத்தை விசாரிக்கவேண்டு மென்று சுருதியாதிகள் சொல்லுகின்றபடியால் ஞான மாவதேது? அஞ்ஞானமாவ தேதென்னில்,

உ-ம். தன்னை யதார்த்தமா யறிகிறதே ஞானம்; தன் னை யதார்த்தமா யறியாததே யஞ்ஞானம். இன்னமும் நானே பிரமமென் றறிகிறதே ஞானம்; நான் மனுஷனென் றறிகிறதே யஞ்ஞானம். இன்னமும் அத்துவிதியனாகிய வாத்மாவைத் துவிதியனாகவும், அபரிச்சின்னனாகிய வாத் மாவைப் பரிச்சின்னனாகவும், அசங்கனாகிய வாத்மாவைச் சங்கனாகவும், அகர்த்தா அபோக்தாவாகிய வாத்மாவைக் கர்த்தா போக்தாவாகவுந் தோற்றுவிக்கிறதே அஞ்ஞானம். அத்விதியனாகிய வாத்மாவை யத்விதியனாகவும், அபரிச் சின்னனாகிய வாத்மாவை யபரிச்சின்னனாகவும், அசங்கனா

கிய வாத்மாவை யசங்கனாகவும், அகர்த்தா அபோக்தா வாகிய ஆத்மாவை அகர்த்தா. அபோக்தாவாகவும் தன்னை யுள்ளபடி தோற்றுவிக்கிறதே ஞானம்.

ச-கை. அத்துவிதியனாகிய வாத்மாவைத் துவைதனாகத் தோற்றுவிக்கிறது அஞ்ஞானமென்றால் ஆத்மா துவைத னாகத் தோற்றுகிறதோ வென்னில்,

உ-ம். நீ, நான், அவன், இவன், தேவதத்தன், எக்கிய தத்தன், விஷ்ணு மித்திரனென் றிப்படி யனேகவிதமாகத் தோற்றப்படுகின்றது.

ச-கை. அபரிச்சின்னனாகிய வாத்மாவைப் பரிச்சின்ன னாகத் தோற்றுவிக்கிறது அஞ்ஞானமென்றால் ஆத்மா பரிச் சின்னனாகத் தோற்றுகின்றதோ வென்னில்,

உ-ம். இந்தவீட்டிலிருந்து மிந்தவீட்டிலில்லை; இந்த தேசத்திலிருந்து மிந்ததேசத்திலில்லை யென் றிப்படி யனேகவிதமாகத் தோற்றப்படுகின்றது.

ச-கை. அசங்கனாகிய வாத்மாவைச் சங்கனாகத் தோற்றுவிக்கிறது அஞ்ஞானமென்றால், ஆத்மா சங்கனாகத் தோற்றுகின்றதோ வெனில்,

உ-ம். அவர்களுடன் கூடிக்கொண்டிருந்தேன், இவர் களுடன் கூடிக்கொண்டிருந்தேன், தாயுடன் கூடிக்கொண் டிருந்தேன், தகப்பனுடன் கூடிக்கொண்டிருந்தேன், தமை யன் தம்பியுடன் கூடிக்கொண்டிருந்தேனென் றிப்படி யனேகவிதமாகத் தோற்றப் படுகின்றது.

ச-கை. அகர்த்தாவாகிய வாத்மாவைக் கர்த்தாவாகத் தோற்றுவிக்கிறது அஞ்ஞானமென்றால், ஆத்மா கர்த்தா வாகத தோற்றுகின்றதோ வென்னில்,

உ-ம். நான் ஸ்நானம்பண்ணினேன், சந்தியாவந்தனம் பண்ணினேன், ஔபாசனம்பண்ணினேன், அக்கினிஷ்

டோமம் பண்ணினேனென் றிப்படி யனேகவிதமாகத் தோற்றப்படுகின்றது.

ச-கை. அபோக்தாவாகிய வாத்மாவைப் போக்தா வாகத் தோற்றுவிக்கிறது அஞ்ஞானமென்றால், ஆத்மா போக்தாவாகத் தோற்றுகின்றதோ வென்னில்,

உ-ம். நான்போசனம் பண்ணினேன், பால்புசித்தேன், வாழைப்பழஞ் சாப்பிட்டேன், மாம்பழம் பட்சித்தேனென் றிப்படி யனேகவிதமாகத் தோற்றப்படுகின்றது.

ச-கை. அத்துவிதனாகிய வாத்மாவை அத்துவிதியனாகத் தோற்றுவிக்கிறது ஞானமென்றா லப்படி யத்துவிதியனாகத் தோற்றுகின்றதோ வென்னில்,

உ-ம். தோற்றுகின்றது. ஆனாலும் ஆத்மாவுக்கு அத்து விதியமறிந்தா லல்லவோ அத்துவிதியனாகத் தோற்றுகின்ற தென்ப தறியலாம்.

ச-கை. ஆனால் அத்துவிதியம்ாவ தேதென்னில்,

உ-ம். சுசாதிக விசாதிக சுவகத பேத ரகிதத்வமே அத்துவிதியம்.

ச-கை. அதற்குத் திருஷ்டாந்த மெப்படியென்னில்.

உம். விருட்சத்திற்கு விருட்சாந்தரம் சுசாதிகம், சிலா திகள் விசாதிகம், பத்திர புஷ்ப பலம் சுவகதம் ஆகிய இம்மூன்று விதமுஞ் ஜகசொரூபமாகிய பதார்த்தங்களுக் கெல்லாமுண்டு. தாஷ்டாந்தமாகிய ஆத்மாவினிடத்தில் இம் மூன்று பேதங்களுமில்லையென்று சுருதியாதிகள் சொல்லு கின்றது.

ச-கை. ஆத்மாவினிடத்தில் சுசாதிக விசாதிக சுவகத மும், அதின் பேதமும் பிரசித்தியாய்த் தோற்றப்பட்டா லல்லவோ ஆத்மா சுசாதிக விசாதிக சுவகத பேத ரகித

மென்று சுருதியாதிகள் சொல்லலாம். அப்படி பிரசித்தி யாய்த் தோற்றுகின்றதா வென்னில்,

உ-ம். வஸ்துத்வ சாமானியத்தினால் பிரசித்தியாய்த் தோற்றுகின்றது.

ச-கை. வஸ்துத்வ சாமானியமாவ தேதென்னில்,

உ-ம். ஒருவஸ்து இருக்கிறதென்பதும், ஒருவஸ்து வென்று தோற்றப்படுவதுமே வஸ்துத்வ சாமானியம்.

ச-கை. ஆனால் அனாத்மவஸ்துவினிடத்தில் சுசாதிக விசாதிக சுவகதமும், அதின் பேதமுங்கண்டோம். அப் படியே ஆத்மாவும் ஒருவஸ்துவாகையினால், அவ்வாத்மாவி னிடத்திலும் சுசாதிக விசாதிக சுவகதமும், அதின்பேதமு முண்டென்று பிரசித்தியாச்சுது. ஆதலால் சுசாதிக விசா திக சுவகத பேதரகிதமென்று சுருதிகள் சொன்னமாத் திரத்தினாலந்த அர்த்தம் நமக்குப் புத்தியி லேறுவதெப்படி யென்னில்,

உம். விசாரித்தா லேறும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஆத்மா சத்ரூபம், அப்படி சத்ரூபமாகிய வாத் மாவுக்குச் சுதந்தர மில்லையல்லவா? ஆகையினால் சுசாதிக விசாதிக சுவகத பேத ரகிதமென்று புத்தியில் யூகித்தறிந்தா லேறும்.

ச-கை. அதெப்படி? நீ, நான், அவன், இவன், தேவதத் தன், எக்கியதத்தன், ராமன், கிருஷ்ணனென்கிற விவர்க ளிருக்கிறார்களென்றும், பிருதிவிசதி, அப்புசதி, வாய்வு சதி, தேய்வுசதி, ஆகாசசதியென்றும் சத்துக் கனேகபேதங் காணப்படுகிறபடியினால், ஆத்மா சுசாதிக விசாதிக சுவகத பேத ரகிதமென் றெப்படி யறியலாமென்னில்,

உ-ம். எல்லாவற்றிலும் சதி சதி யென்றும் சத்து ஏக ரூபமாய்க் காணப்படுகிறபடியினால், ஆத்மா சுசாதிக விசாதிக சுவகத பேத,ரகிதமென்றே சொல்லாம்.

ச-கை. அப்படி சொல்லப்படாது ; பூர்வம் சத்து ஏக ரூபமாயிருக்கிறபடியா லதற்குப் பேதமில்லையே யென்று சொல்லியபடி, கடகடவென்கிறது மேகரூபமா யிருக்கிற படியால் அங்கும் பேதமில்லாமற் போகவேண்டும். அதற்குப் பேதமிருப்பதால், சத்துக்கு ஏகரூபத்தினாற் சுசாதிக முஞ் சுசாதிகபேதமுமில்லை யென்பது கூடாதேயென்னில்,

உ-ம். அந்தக் கடாதிகளினிடத்தில் ஆகார வைலட்சணியமிருக்கிறபடியினால் அங்கே சுசாதிகமும், சுசாதிக பேதமு மிருக்கின்றது ; சத்தினிடத்தில் ஆகார வைலட்சணிய மில்லாதபடியினால் சுசாதிகமுஞ் சுசாதிகபேதமு மில்லை. ஆதலாற் சத்தாகிய வாத்மாவுக்குச் சுசாதிகமும் சுசாதிகபேதமு மில்லையென்று சித்தித்தது.

ச-கை. சத்தாகிய வாத்மாவுக்கு விசாதிகமும் விசாதிக பேதமுமுண்டோ? வில்லையோவென்னில்,

உ-ம். சத்ரூபனானகையா லில்லை.

ச-கை. ஆத்மாவுக்கு விசாதிகமாவ தேதென்னில்,

உ-ம். அசத்தாகிய பிரபஞ்சமே விசாதிகம். இவ் வசத்தாகிய பிரபஞ்சம் சத்தாகிய வாத்மாவுக்குத் துவைத பட்சஞ் சம்பாதிக்கமாட்டாது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உம். திருஷ்டாந்தத்தில் அசத்தான மலடி பிள்ளை தாயைப் புத்திரவதி யாக்காததுபோல அசத்தான பிரபஞ்சமும் ஆத்மாவுக்குத் துவைதபட்சஞ் சம்பாதிக்க மாட்டாது. ஆதலால் சத்தாகிய வாத்மாவுக்கு விசாதிகமும், விசாதிகபேதமு மில்லையென்று சித்தித்தது.

ச-கை. சச்சிதானந்தத்தின லாத்மாவுக்குச் சுவகத மும் சுவகதபேதமு முண்டோ? வில்லையோவென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் விருட்சத்திற்குப் பத்திர புஷ்ப பலாதிகளினல் வரப்பட்ட சுவகதமும், சுவகத பேதமு மெப்படி யிருக்கின்றதோ, அப்படியே யாத்மாவுக் குச் சச்சிதானந்தத்தினற் சுவகதமுஞ் சுவகதபேதமுமில்லை.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். விருட்சத்திற்குப் பத்திர புஷ்ப பலாதிகளினல் சுவகதமும் சுவகதபேதமும் பிரத்தியட்சமாகத் தோற்று கிறதினலுண்டு. சச்சிதானந்தங்கள் ஆத்மாவினிடத்தில் சுவரூபமாகையினல் சப்தமாத்திரத்திற் பேதந் தோற்றின லும் பிரத்தியட்சத்திற் பேதந் தோற்றப்படவில்லை. ஆத லாற் சச்சிதானந்தத்தின லாத்மாவுக்குச் சுவகதமுஞ் சுவ கதபேதமு மில்லையென்பதுகூடும்.

ச-கை. அப்படி சொல்லுவது கூடாது. ஏனெனில் சப்தபேத மிருப்பதினலும், அஸ்த கர பாணி சப்தத்தைப் போற் பரியாய நாம சப்தமல்லாதபடியினலும், சப்த பேதத்தினல், அர்த்தபேதமுண்டான படியினலும் சச்சி தானந்தத்தின லாத்மாவுக்குச் சுவகதமும் சுவகதபேதமு முண்டென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். சச்சிதானந்தத்தில் சப்தபேதம் அர்த்தபேத முண்டாயிருந்தாலும் அது பேதமல்ல.

ச-கை. எப்படியென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் அக்கினியினிடத்தில் சிவப்பு உஷ்ணம் பிரகாசமிருக்கின்றது. இம்மூவிதமான சப்த பேதமும், அர்த்தபேதமுந் தோற்றினலும் அஸ்த கர பாணி சப்தத்தைப்போற் பரியாய நாம சப்தமாகாமல்

ஏகார்த்தமாய் விளங்குவதுபோலச் சச்சிதானந்தமும் ஏகார்த்தமாகிய வாத்மசொரூபமாகப் பிரகாசிக்கின்றது.

ச-கை. அக்கினிக்குச் சொரூபமாகிய ரோகிதோஷ்ணப் பிரகாசத்திற் கொருசமயத்திற் பிரத்தியட்சமாய் பிரதிபந்தங் காணப்படுகிறபடியினா லெப்படி சுவரூபமாகு மென்னில்,

உ-ம். அதுகளுக்குத் தர்மத்வமும் குணத்வமும் சொன்னாலுஞ் சொல்லலாம். ஆத்மாவினிடத்தில் சச்சிதானந்தத்திற்குச் சர்வாத்மனாகப் பேதஞ் சொல்லக்கூடாது.

ச-கை. எதினாற் சொல்லக்கூடாதென்னில்,

உ-ம் சுருதிக்கு விரோதம்வருகிறபடியினாலும் ஆத்மா நிரவயவனாகையாலுஞ் சொல்லக்கூடாது. ஆதலாற் சச்சிதானந்தங்கள் அகண்டமே; அகண்டமாகையினால் அத்வைதமே யாகும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சத்தே சுவயந்தோற்றுகிறபடியினாற் சித்தாயிற்று. அந்தச் சித்தாகிய சத்தே யிரண்டாம் வஸ்துவல்லாதபடியினா லதுவே யானந்தமாயிற்று. ஆதலாற் சச்சிதானந்தத்திற்குப் பேதமின்றி யாத்மாவுக்கு அத்விதியத்வஞ் சித்தித்தது.

ச-கை. யுக்தி யுக்தமாகிய வனுபவமின்றி யிப்போது சொன்ன வசனமாத்திரத்தினா லாத்மா அத்விதியனென்பது புத்தியிலெப்படி யேறுமென்னில்,

உ-ம். விசாரிக்குமிடத்திற் புத்தியி லேறும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். இல்லாதவஸ்து இருக்கிறதென்று சொல்லக்கூடாது. ஆகையினால் சத்து இருக்கிறதென்பதிற் சந்தேகமில்லை.

ச-கை. அசத்து தோற்றப்படுகிறதே யென்னில்,

உ-ம். தோற்றுதவஸ்து இருக்கிறதென்பது விவேகித்தால் விஷய மாகாதபடியினால் சத்து தோற்றுகிறதென்றே சொல்லவேண்டும்.

ச-கை. அப்படி தோற்றிக்கொண்டிருக்கிற சத்து தானே தோற்றுகிறதா? மற்றொன்றினாற் றோற்றுகிறதா வென்னில்,

உ-ம். தானே தோற்றப்படுகிறதென்றே சொல்லவேண்டும். அப்படி சொன்னால் சத்தே சித்தாகச் சித்தித்தது. அன்னியத்தினால் தோற்றுகிறதென்று சொன்னால் சுதந்தரத்தினால் தோற்றுவிக்கப்பட்டுத் தோற்றுகின்றதா? சத்து விலட்சணத்தினால் தோற்றுகிறதாவென்று சங்கிக்கவரும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சுதந்தரமென்றால் அந்தச் சுதந்தரம் நிக்ருஷ்டமாயிருந்துகொண்டு அந்தச் சத்தைத் தோற்றுவிக்கின்றதா? அல்லது சமானமா யிருந்துகொண்டு தோற்றுவிக்கின்றதா? அல்லது ஒன்றினாற் றான் பிரகாசவதிசயம் பெற்றுத் தோற்றுவிக்கின்றதா? அல்லது தானே தோற்றிக்கொண்டு அந்தச் சத்தையுந் தோற்றுவிக்கின்றதா வென்று விசாரிக்கவரும்.

ச-கை. ஆனால் ஆத்மசொரூபமாகிய சத்தைத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிற சுதந்தரம் நிக்ருஷ்டமா யிருந்து கொண்டு தோற்றுவிக்கிறதென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். சூரியப்பிரகாசத்திற்கு நிக்ருஷ்டமாகிய தீபமுஞ் சூரியனைத் தோற்றுவிக்கவேண்டும். அங்ஙன மில்லாதபடியினால் அந்தச் சத்துக்குச் சுதந்தரம் நிக்ருஷ்டமாயிருந்துகொண்டு சத்தைத் தோற்றுவிக்கிறதென்று சொல்லக்கூடாது:

ச-கை. சுதந்தரம் சத்துக்குச் சமானமாயிருந்து கொண்டு சத்தைத் தோற்றுவிக்கிறதென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். தீபத்திற்குச் சமானமாகிய தீபாந்தரமு மந்தத் தீபத்தைத் தோற்றுவிக்கவேண்டும். அங்ஙன மில்லாமை யால் சுதந்தரஞ் சமானமாயிருந்துகொண்டு சத்தைத் தோற்றுவிக்கிற தென்பது கூடாது.

ச-கை. ஒன்றினால் தான் பிரகாசவதிசயம் பெற்றுக் கொண்டு சத்தைத் தோற்றுவிக்கிறதென்று சொல்லு வோமே யென்னில்,

உ-ம். அந்தச் சுதந்தரத்திற்குப் பிரகாச வதிசயங் களைச் சம்பாதிக்கிறவஸ்து சத்தோ, வசத்தோ வென்று நிரூபிக்கக்கூடாது. அன்றியும் சத்தென்றால் சொப்பிர காசமோ? அப்பிரகாசமோவென்று நிரூபிக்கக்கூடாது.

ச-கை. சொப்பிரகாசமென்று சொல்லலாமே யென் னில்,

உ-ம். சொப்பிரகாசமாகிய சத்தே சித்தாகியபடி சத் துக்குச் சொப்பிரகாசத்வமும் அத்விதீயத்வமும் வேதாந் திகளுக் கன்னியரா லங்கீகரிக்கப்படவில்லை. ஆதலால் ஆத்மசொரூபமாகிய சத்தைத் தோற்றுவிக்கிற சுதந்தரத் திற்குப் பிரகாசவதிசயமுஞ் சம்பாதிக்கிற சத்து சொப்பிர காசமென்பது கூடாது.

ச-கை. அப்பிரகாசமென்று சொல்லுவோமே யென் னில்,

உ-ம். அப்பிரகாசமாகிய வஸ்து பிரகாசமாகிய வஸ்து வுக்குப் பிரகாச வதிசயத்தைச் சம்பாதிக்கக் காணேம். ஆகையால் அப்பிரகாச மென்பது கூடாது.

ச-கை. சுதந்தரம் அன்னியவஸ்துவினு லதிசயத்தைப் பெற்று ஆத்மாவைத் தோற்றுவிக்கிறதென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். அன்னியவஸ்து அசத்தாகையினு லப்படியுஞ் சொல்லக்கூடாது. ஆத்ம சொரூபமாகிய சத்துக்குப் பிரகாசவதிசயங்களைச் சம்பாதிக்கிற சுதந்தரத்திற்குப் பிரகாசவதிசயங்களைச் சம்பாதிக்கிற சத்து வேறொன்றுண்டென்று சொல்லவரும்.

ச-கை. அப்படி சொல்லலாமே யென்னில்,

உ-ம். அப்படிசொன்னுல் அதற்கொன் றுண்டென்றும், அதற்கொன் றுண்டென்றும் இந்தப்படி யனவஸ்தா தோஷமும், சத்துக்கு அப்பிரகாசத்வமும், துவைதத்வமும் சொல்லுகிறவர்களுக்கு அபரிகாரமாக இடிவிழுவதுபோலச் சங்கையும் வரும். மேலும் உலகத்தில் ஒன்றுக்கதிசயங்களைச் சம்பாதிக்கிறவஸ்து தானதிசயமா யில்லாதிருப்பது காணும்.

ச-கை. பின்னை யெப்படியென்னில்,

உ-ம். அவ்வஸ்து, தானும் அதிசயமாகிய வஸ்துவாயிருந்துகொண்டு மற்றொருவஸ்துவுக்கு அதிசயங்களைச் சம்பாதிக்கு மென்பது அக்கினியாதிகளிடத்திற் கண்டோம். ஆதலால் முற்சொன்ன பட்சத்திரயங்களுங் கூடாதபடியினுற் சத்தைத் தோற்றுவிக்கிற சுதந்தரந்தானே சொப்பிரகாசமா யிருந்துகொண்டு தோற்றுவிக்கிறதென்றே சொல்லவேண்டும். இப்படி சொன்னுல் சொப்பிரகாசமாகிய சுதந்தரமே சித்தாகச் சித்தித்தது.

ச-கை. ஆனு லுலகத்தி லாகாசாதிகளைப்போல வுபாதியினுவாய்ச் சித்தாத்விதியமும் நிரூபிக்கக் கூடாதே யென்னில்,

உ-ம். நிருபாதிகமாகிய சத்தே யத்விதியமென்று சுருதியாதிகளிற் சொல்லுகிறபடியினால், சத்து பிரகாச மாகிய சுதந்தரத்தினால் தோற்றப்படுகிறதென்று சொல்லக் கூடாது. ஆத்மசொரூபமாகிய சத்தே பிரகாசமாயிருக்கிற படியினால், அதுவே சித்தென்று சொல்லலாம்.

ச-கை. கடாதிகளுக்கு விலட்சணமாகிய தீபாதிகளி னால் கடாதிகள் தோற்றுகிற தென்பதுபோலச் சத்துக்கு விலட்சணமாகிய வஸ்துவினாற் சத்து தோற்றப்படுகிற தென்று சொல்லுவோமேயெனில்,

உ-ம். கடாதிகளுந் தீபாதிகளும் சமான சத்தாகாரமா யிருக்கிற படியால் அந்தக் கடாதிகளைப்பார்க்கிலுந் தீபா திகள் கடாதிகளுக்குப் பிரகாசங்கள் பிரத்தியட்சமாய்க் கொடுத்துக் காண்பிக்கிறதினால் தீபாதிகளினாற் கடாதிகள் தோற்றலாம்; தாஷ்டாந்தத்தில் சத்துக்கு விலட்சணமான வஸ்து அசத்தானபடியினாலது வஸ்துத்வமாயிருந்து விளக் கிற தர்மஞ்சொல்லக்கூடாது. ஆதலாற் சத்துவிலட்சண மாகிய அசத்தினாற் சத்து தோற்றுகிறதென்பது கூடாது. அகலினிடத் தில்லையென்கிற தீபாதிகளினாலும், பிராந்தி களாற் றோற்றுகிற வுபாதிகள் அனேகமானதினாலும், கடா திகள் தோற்றப்படுகிறதென்று சொல்லக்கூடாதுபோல், சத்துவிலட்சணமாகிய வசத்தினால் சத்து தோற்றுகிற தென்று சொல்லக்கூடாது. மேலும் சத்தைத் தோற்று விக்கிற பதார்த்தங்களொன்றாகிலுமில்லை. சமஸ்த பதார்த் தங்களுஞ் சத்திலாரோபிக்கப்படுகிறபடியினாலும், அந்தப் பதார்த்தங்க ளனைத்துஞ் சத்தை யுபசீவித்துக்கொண்டு தோற்றுகிறபடியினாலும் சத்து சொப்பிரகாசமே. அந்தச் சத்தே சித்து; அந்தச் சித்தான சத்துக்கு திரிசியமாயிருக் கப்பட்டவஸ்து அசத்தாயிருக்கிறபடியினாலும், அந்தச் சத்தே யிரண்டாம்வஸ்து வுண்டாகிற தில்லாமற் போன தினாலும் அந்தச் சித்தான சத்தே யானந்தரூபமாயிற்று.

ச-கை. உலகத்தி லிரண்டாம்வஸ்து வுண்டாகிற தில்லாமற் போனவஸ்துவே யானந்தமாயிருக்கிற துண்டா வென்னில்,

உ-ம். சுழுத்தியில் இரண்டாம்வஸ்து வில்லாதபடியினா லதுவேயானந்தமாச்சுது. சாக்கிர சொப்பனத்தி லிரண்டாம்வஸ்து விருக்கிறபடியினால் துக்கமே தோற்றுகிறது. சாக்கிரத்திலு மேகாந்தமாயிருக்கிறசமயத்தில்இரண்டாம்வஸ்துவை யனுசந்திக்காதபோது சமஸ்த பிராணிகளுக்கு மானந்தமாய் தோற்றப்படுகின்றது. ஏகாந்தமாயிருக்கிற புருஷன் இரண்டாம் வஸ்துவை ஸ்மரிக்காமற் சுகமாயிருந்தாலும் அவசியமாய் ஸ்மரிக்கப்பண்ணுகிற ஒரு சப்த சிரவணத்தினாலும் ரூப தரிசனத்தினாலும் எழுந்தபோது பயரூபமாய் துக்கமே தோற்றுகின்றது. இரண்டாம்வஸ்து தோற்றினால் ஜயமுண்டென்றே சுருதிகள் சொல்லுகிறபடியால் இரண்டாம்வஸ்து தோற்றாத சுழுத்தியி லானந்தமாயிற்று. அவ் வானந்தத்தில் கற்பனை பிறந்தபடியினால் ரச்சுவாதிகளிற் கற்பிக்கப்பட்ட சர்ப்பாதிகளைப்போல அவ் வானந்தத்திற்கு வெதிருத்தமில்லை. ஆதலாலாத்மாவே காலத்திரயத்திலு மிருக்கிறபடியால் சத்தென்றும், சொப்பிரகாசமா யிருக்கிறபடியாற் சித்தென்றும், இரண்டாம்வஸ்து உண்டாகிற தில்லாமற் போகிறபடியா லானந்த மென்றும் சொல்லப்படும். ஆதலால் சத்ரூபனாகிய ஆத்மாவுக்குச்சுதந்தர மின்மையால் சுசாதிகமும், சுசாதிகபேதமும்; விசாதியாகிய அசத்தில்லாதபடியினால் விசாதிகமும், விசாதிகபேதமும்; சத்தே சித்து சித்தே யானந்தமானபடியினால் சுவகதமும், சுவகதபேதமுமில்லை. இதனா லாத்மா அத்விதியனென்கிற சுருதிவாக்கியப்படி யுத்தி யனுபவமுஞ் சித்தித்தது. இந்தப்படி முமுட்சுவானவர்கள் அத்விதியனாகிய ஆத்மாவே நானென்றறிந்து அனுபவிக்கத்தக்கது.

ச-கை. ஆத்மா அத்விதியனென்று சுருதி சொல்லுகிறதுபோலவே பரிபூரணனென்றுஞ் சொல்லுகின்றதே; ஆத்மாவுக்குப் பரிபூரணத்வ மெப்படியென்னில்,

உ-ம். பரிபூரணத்வமென்று சாமானியமாகச் சொன்னால் வியாபகத்வமோ, விபுத்வமோ, அபரிச்சின்னத்வமோ, பரிபூரணத்வமென்று விசாரிக்கவரும். அவற்றுள் அபரிச்சின்னத்வமே பரிபூரணத்வமென்று சொல்லவேண்டும்.

ச-கை. அப்படியேன் சொல்லவேண்டும்? வியாபகத்வமே பரிபூரணத்வமென்று சொல்லலாமேயென்னில்,

உ-ம். சுவயகாரிய வனுசூதத்வ மல்லவோ வியாபகத்வம்? அது பிருதிவியாதிகளுக்கு மிருக்கிறபடியினால் அப்படி கூடாது. .

ச-கை. ஆனால் விபுத்வமே பரிபூரணத்வமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். சர்வமூர்த் திரவிய சையோகத்வமல்லவோ விபுத்வம்? அது ஆகாசாதிகளுக்கு மிருக்கிறபடியினால் அப்படியுங் கூடாது. அபரிச்சின்னத்வமே பரிபூரணத்வமென்று சொல்லவேண்டும். இந்த அபரிச்சின்னத்வம் பரிச்சின்னமான வாகாசாதிகளுக்கில்லை. ஆத்மாவுக்கோவென்றால், வியாபகத்வம், விபுத்வம், அபரிச்சின்னத்வமாகிய மூன்றுமுண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். பிருதிவியாதிகளுக்குச் சுவயகாரியமான சதுர்வித பூதக்கிராமத்தில் அனுசூதத்வமிருக்கிறதுபோல, ஆத்மாவுக்குச் சுவயகாரியமான பிரபஞ்சத்தி லனுசூதத்வமிருக்கிற படியால், வியாபகத்வமும், ஆகாசாதிகளுக்குச் சர்வமூர்த் திரவியசையோகத்வ மிருக்கிறதுபோல, ஆத்மா

வுக்குஞ் சர்வமூர்த்திரவிய சையோகமிருக்கிறபடியால், விபுத்வமு மிருக்கின்றது.

ச-கை. ஆனால் வியாபகமானவனே யாத்மா, விபுவானவனே யாத்மாவென்று சொல்லலாமேயென்னில்,

உ-ம். அப்படி சொல்லுமிடத்து ஆத்மாவுக்குத் துவிதந்தோற்றுகிறபடியா லங்ஙனங் கூடாது. அபரிச்சின்னத்வமே பரிபூரணத்வம், அத்விதிபத்வமே யபரிச்சின்னத்வம். மேலும் அத்விதியத்வமே யபரிச்சின்னத்வ னான போதிலும் இன்னும் விசாரிக்கவேண்டும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். திரிவித பரிச்சேத சூனியத்வமே யபரிச்சின்னத்வம்.

ச-கை. திரிவிதபரிச்சேதமாவ தேதென்னில்,

உ-ம். தேசகாலவஸ்துவே திரிவிதபரிச்சேதம்.

ச-கை. தேசகால வஸ்துவினு லாத்மாவுக்குப் பரிச்சேதம் பிரசித்த மாயிற்றுவென்னில்,

உ-ம். அனாதியாகிய பிராந்தியினாற் பிரசித்தமாயிற்று.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். நான் இந்தத்தேசத்திலிருந்தேன், அந்தத் தேசத்திலில்லையென்று தேசத்தினாலும், இந்தவருஷத்திற் பிறந்தே னினிமேல் நானில்லாமற் போகப்போகிறேனென்று காலத்தினாலும், இந்த வஸ்து நான், அந்தவஸ்து நானல்ல வென்று வஸ்துவினாலும், ஆத்மா பிராந்தியினாற் பரிச்சேத மாகத் தோற்றுகின்றது. அதை விசாரிக்குமிடத்தி லில்லை.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஆத்மா வியாபகனாயிருக்கிறபடியால் தேசத்தினாலும், நித்தியனாயிருக்கிறபடியால் காலத்தினாலும், சர்

வாத்மனு யிருக்கிறபடியால் வஸ்துவினுலும் பரிச்சேத மில்லை.

ச-கை. திரிவிதபரிச்சேத சூனியமே யபரிச்சின்னத்வ மென்றேன் சொல்லவேண்டும்; தேசத்தினுற் பரிச்சேத ரகிதமே அபரிச்சின்வத்வமென்று சொல்லலாகாதா வென்னில்,

உ-ம். தேச பரிச்சேத ரகிதம் ஆகாயத்துக் கிருப்ப தால் அதற்கும் அபரிச்சின்னத்வம் வரும். அதை நிரா கரிக்கிறநிமித்தம் காலத்தினுலும் ஆத்மா பரிச்சேத ரகித னென் றங்கீகரிக்கவேண்டும்.

ச-கை ஆனு லாகாசத்திற்குக் காலபரிச்சேத முண்டா வென்னில்,

உ-ம். சுருதிகளி லாகாசத்திற்கு நாசஞ்சொல்லுகிற படியினுல் காலத்தினு லாகாசத்திற்குப் பரிச்சேதமுண்டு.

ச-கை. ஆனு லாத்மாவுக்குத் தேசத்தினுலுங் காலத்தி னுலும் பரிச்சேதரகிதமே யபரிச்சின்னத்வமென்று சொல்ல லாமேயெனில்,

உ-ம். காலத்திற்குத் தேசத்தினுலுந் தன்னுலும் பரிச் சேத ரகிதமாயிருக்கிறபடியா லதற்கும் அபரிச்சின்னத்வம் வரும். அதை நிராகரிக்கிற நிமித்தம் வஸ்துவினுலும் பரிச் சேதரகிதமே யபரிச்சின்னத்வமென் றங்கீகரிக்கவேண்டும்.

ச-கை. ஆனுல் காலத்திற்கு வஸ்துபரிச்சேதமுண்டா வென்னில்,

உ-ம். காலம் ஆகாசாதிவஸ்துவல்லாதபடியால் காலத் திற்கு வஸ்துவினுற் பரிச்சேதமுண்டு.

ச-கை. அப்படியானுல் ஆத்மாவுக்கும் வஸ்துவினுற் பரிச்சேதந் தோற்றுகின்றது. எப்படியென்றுல் ஆத்மா

வுக்கு வியாபகத்வமும் நித்தியத்வமு மிருக்கிறபடியால் தேசத்தினாலுங் காலத்தினாலும் பரிச்சேதரகிதமுண்டான போதிலும் ஆத்மா ஆகாசாதி வஸ்துவல்லாதபடியினால் பரிச்சேதந் தோற்றுகின்றதேயெனில்,

உ-ம். அதனாலு மாத்மாவுக்குப் பரிச்சேதமில்லை.

ச-கை. எப்படி யில்லையென்னில்,

உ-ம். ஆகாசகாலமே, வாய்வுகாலமே, தேய்வுகாலமே, அப்புகாலமே, பிருதிவிகாலமே யென்று விவகாரமின்மையால், காலத்தை யுபசீவித்துக்கொண்டு ஆகாசாதிகளிருக்கவில்லை. மேலும் அவ் வாகாசாதிகளைப்போற் காலமும் அவித்தியா பரிணாம மாகையினாலும், விவகாரத்தில் காலமும், ஆகாசாதிகளும் பின்ன சத்தாகாரமாகத் தோற்றுகிறபடியினாலும், கடாதிகளினால் கடாதிகளுக்குப் பரிச்சேதம் பிரத்தியட்சமாய்த் தோற்றுகிறதுபோல, வஸ்துவினாற் காலத்திற்குப் பரிச்சேதம் பிரத்தியட்சமாய்த் தோற்றுகின்றது. ஆதலால் வஸ்துவினால் காலத்திற்குப் பரிச்சேதஞ் சொல்லுவதுயுக்தமே. ஆத்மாவோவென்றால் ஆகாசாதிகளல்லாத வஸ்துவைப்போற் றோற்றப்பட்டாலும் எப்போதுஞ் சத்தாமாத்திரமாயிருக்கின்றபடியாலும் அவ் வாத்மசொரூபமாகிய சத்தை யுபசீவித்துக்கொண்டே யாகாசாதிக ளிருக்கிறபடியினாலும் பழுதையினிடத் தாரோபிக்கப்பட்ட பாம்பு அந்தப் பழுதையையன்றி யெப்படி பரிச்சேதமல்லவோ, மிருத்துவினிடத்திற் றோற்றப்பட்ட கடாதிகள் மிருத்துவன்றி யெப்படி பரிச்சேதமல்லவோ, அப்படிபோல ஆத்ம சொரூபமாகிய சத்தினிடத்திற் றோற்றப்பட்ட ஆகாசாதி வஸ்துக்களும் ஆத்மசொரூபமாகிய சத்துக் கன்னியமல்லாதபடியினா லாத்மாவுக்குப் பரிச்சேதமல்ல. ஆதலா லாத்மாவுக்கு வஸ்துவினாலும் பரிச்சேதமில்லையென்பது யுக்தமே.

ச-கை. தேசமுங் காலமும் வஸ்துவாயிருக்கிறபடியி ஞல், அந்த வஸ்துவினுற் பரிச்சேத ரகிதமே யாத்மாவுக்கு அபரிச்சின்னத்வ மென்று சொன்ஞற் போதாதோ வென் னில்,

உ-ம். போதும். ஆனுலுந் தேசகாலங்களுக்கு ஆகா சாதிகளைப்போல வஸ்துத்வப் பிரசித்தி யின்மையினுலும் ஆத்மாவுக்குச் சுதசித்தமாகிய வியாபகத்வமும் அனுதி யாகிய வஞ்ஞானத்தினுல் வந்த தேகேந்திரியாதி யத்தியா சத்தினுல் தோற்றுமற் போனபடியினுலும் அந்தப் பிராந்தி யைத் தள்ளுநிமித்த மித்தனையுஞ்சொல்ல வேண்டிற்று. இந்தத் திரிவிதபரிச்சேத சூனியத்வமே, யபரிச்சின்னத் வம், அஃதே பரிபூரணத்வம், அஃதே யகண்டத்வம், அஃதே யத்துவிதியத்வம் என்று சுருதியாதிகளிற் சொல்லு கிறபடி சற்குருமுன்னிலையில் விசாரித் தறிந்தவனே முத்தன்.

ச-கை. ஆனு லாத்மாவுக்கு அசங்கத்வ மெப்படி யென்னில்,

உ-ம். சங்கத்வம் பிரசித்தமானுலல்லவோ அசங்கத்வம் விசாரிக்க வேண்டும்.

ச-கை. விசாரத்தினுல் தள்ளப்பட்ட சங்கத்வம் ஆத் மாவுக் குண்டோ வென்னில்,

உ-ம். உண்டு.

சங்கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். பிராந்தியினுல் வந்த தேகேந்திரியாதி யத்தியா சத்தினுல் ஆத்மாவுக்குச் சங்கத்வந் தோற்றப்படுகின்றது. இதுவுமன்றி அவர்களுடன் கூடிக்கொண்டிருந்தேன், இவர்களுடன் கூடிக்கொண்டிருந்தே னென்று சங்கத்வந் தோற்றப்படுகின்றது. ஆதலால் சுருதிவிசாரத்தினு லாத்மா

அத்விதியனென் றெப்போ தறிகிறானோ, அப்போ திரண் டாம்வஸ்து வில்லாதபடியினா லாத்மாவுக்குச் சங்கத்வந் தள்ளப்பட்டது.

ச-கை. ஆனால் பரமாத்மா சீவாத்மா வென்பதின்றி அத்விதியனாய் அசங்கனா யிருந்தபோதிலும் விவகார காலத்திற் சங்கனைப்போற் றோற்றுவதாலாத்மாவுக்கு அசங் கத்வ மெப்படி கூடுமென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் பழுதையாதிகளிடத்திலாரோ பிக்கின்ற பாம்பாதிகளுடன்கூட அந்தப் பழுதையாதி களுக் கெப்படி காலத்திரயத்திலுஞ் சங்கமில்லையோ, அப் படியே யாத்மாவினிடத்திலும் ஆரோபிதமாகத் தோற்று கின்ற தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்துடன் கூடியும் ஆத் மாவுக்குக் காலத்திரயத்திலுஞ் சங்கமேயில்லை. இதுவு மன்றி உலகத்தில் சாவயவமா யிருக்கப்பட்ட பதார்த்தங் களுக் கன்னியோன்னிய சங்கங்கள் கண்டோம்; நிரவய வமா யிருக்கப்பட்ட பதார்த்தங்களுக்குச் சாவயவமாயிருக் கப்பட்ட பதார்த்தங்களுடன் கூடியுங் காலத்திரயத்திலுஞ் சங்கங் காணோம்.

ச-கை. அஃதெப்படி காணோமென்னில்.

உ-ம். பரமார்த்தத்தில் நிரவயவமென்று சம்மதமா யிருக்கப்பட்ட ஆகாசாதிகளுக்குப் பிருதிவியாதிகளுடன் கூடச் சங்கஞ் சொல்லக்காணோம். அப்படி சொன்னால் ஜலாதி சங்கத்தினால் வஸ்திராதிகளுக்கு ஈரமுதலானதுகள் வருவதுபோல், ஆகாசாதிகளுக்கும் பிருதிவியாதிகளுடன் கூடின சங்கத்தினால் அந்தப் பிருதிவியாதிகளின் விகாரம் வரவேண்டும். அங்ஙனமின்மையால் அவ் வாகாசாதிகள் பிருதிவியாதிகளுடன் கூடிக்கொண்டதுபோலத் தோற்றி னாலும் அவ்வாகாசாதிகளுக்குப் பிருதிவியாதிகளுடன் கூடியு மெப்படி சங்கமில்லையோ, அப்படிபோல ஆத்மாவும்

பிராந்தியினு லிந்தத் தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்துடன் கூடிக்கொண் டிருக்கிறவனைப்போலத் தோற்றமாகத் தோற்றினாலும் ஆத்மா அசங்கனே. அல்லாமலும் விவகார காலத்திற் பரமார்த்தத்தை யனுசரித்து ஆகாசாதிகளுக்கு நிரவயத்வ மங்கீகரித்து இப்படி சொன்னோம். பரமார்த்தமாக விசாரிக்கு மிடத்தில் ஆகாசாதி சர்வபதார்த்தமும் பிராந்தியினால் ஆத்மாவினிடத்தி லாரோபிதமாகத் தோற்றியபடியால், அவ்வாரோபித பதார்த்தங்களும் பழுதையிற் றோற்றப்பட்ட பாம்பாதிகளைப்போலவே அதிஷ்டான ஆத்ம சத்தே ஸ்வரூபமா யிருக்கிறபடியினால் காலத்திரயத்திலும் அத்விதியனாகிய வாத்மா வசங்கனென்பதிற் சந்தேகமில்லை.

ச-கை. ஆனா லாத்மாவுக்கு அகர்த்தத்வ மெப்படி யென்னில்,

உ-ம். கர்த்ருத்வம் பிரசித்தமானு லல்லவோ அகர்த்ருத்வம் விசாரிக்க வேண்டும்.

ச-கை. விசாரத்தினால் தள்ளப்பட்ட கர்த்ருத்வம் ஆத்மாவுக் குண்டோவென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். நான் ஸ்நானம்பண்ணினேன், ஸ்நானம்பண்ணப்போகிறேன், ஜபம்பண்ணினேன், ஜபம்பண்ணப்போகிறேன், அக்கினிஹோத்திரம் பண்ணினேன், அக்கினிஹோத்திரம்பண்ணப்போகிறேன், எக்கியம்பண்ணினேன், எக்கியம்பண்ணப்போகிறேன் என்கிற கர்த்ருத்வம் அத்தியாசத்தினால் ஆத்மசுபாவமாகவே தோற்றப்படுகிறபடியால் அதை நிராகரிக்கு நிமித்தம் விசாரிக்கவந்தது.

ச-கை. ஆனா லாத்மாவுக்கு அகர்த்ருத்வ மெப்படி யென்னில்,

உ-ம். உலகத்தில் கர்த்ருத்வமென்பது கிரியைகள் முன்னிலையாய் நானென் றாசிரயித்துப் பரிச்சின்னமாய் சங்கமாய் சரவயமாய் விகாரமா யந்தந்த வஸ்துக்களை யாசிரயித்துக்கொண் டிருப்பதாகக் கண்டோம். ஆத்மா அபரிச்சின்னனாய் அசங்கனாய் நிருவிகாரியாய் நிரவயமா யிருக்கிறபடியால், அவ் வாத்மாவுக்குக் கர்த்ருத்வஞ் சொல்வது கூடாது. ஆத்மா அகர்த்தா வென்றே சொல்ல வேண்டும். ஆத்மாவுக்கு அத்விதிய ஞானத்தினால் அகர்த்ருத்வஞ் சித்தித்தது. அப்படி சித்தித்தாலும் நன்றாயறிய வேண்டி விசேஷமாகச், சொல்லுகிறோம். விவகாரத்தில் ஸ்நானாதிக்கிரியை யாசிரயத்வம், நானென்கிற வபிமான, கர்த்தவியம் தேகாதிகளுக்கே கண்டோம். வியாபகத்வ மாகிய வாகாசாதிகளுக்குக் காணோம். ஆதலால் அபரிச் சின்னமாகிய வாத்மாவுக்குக் கர்த்ருத்வ மில்லையென்பது சொல்லவேண்டுமா? பிராந்தியினால்வந்த தேகேந்திரியாதி யத்தியாசத்தினால் ஆத்மா கர்த்தாவைப்போற் றோற்றின போதிலும் விசாரிக்கிறபோதும் அனுபவத்திற்கும் அபரிச் சின்னனாயிருக்கிறபடியால் அகர்த்தாவென்பதிற் சந்தேக மில்லை.

ச-கை. ஆனா லாத்மாவுக்கு அபோக்த்ருத்வ மெப்படி யென்னில்,

உ-ம். போக்த்ருத்வம் பிரசித்தியான லல்லவோ அபோக்த்ருத்வம் விசாரிக்கவேண்டும்.

ச-கை. விசாரத்தினால் தள்ளப்பட்ட போக்த்ருத்வம் ஆத்மாவுக் குண்டோவென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். நான்போஜனம் பண்ணினேன், அனேக போகங்களனுபவித்துக்கொண்டிருக்கிறேனென் றுபிராந்தி

யினு லாத்மாவுக்குப் போக்த்ருத்வந் தோற்றப்படுகின்றது. விசாரிக்கும்போது சர்வாத்மனுயில்லை.

ச-கை. எப்படி யில்லையென்னில்,

உ-ம். அத்விதியனு யிருக்கிறபடியால் போக்த்ருத்வஞ் சொல்லக்கூடாது. ஆதலா லாத்மா அபோக்தாவென்பதிற் சந்தேகமில்லை. மேலும் உலகத்தில் தேவதத்தாதிகள் தங்களுக்கு வெதிருத்வமான அன்னுதிகள் புசிக்கிறதாய்க் கண்டோம். அந்தத் தேவதத்தாதிகள் தங்களுக்குத் தாங்களே போக்கியமாயிருப்பது எங்கேயுங் காணும். போக்கியவஸ்து வில்லாமற் போக்த்ருத்வ மெங்கேயுங் காணுதபடியினு லத்விதியனுகிய வாத்மாவுக்கு அபோக்த்ருத்வஞ் சித்தித்தது. இந்தப்படியருளே திருமேனியாகிய பரமாசாரியர் முன்னிலையில் ஐயந்திரிபின்றி விசாரித்தறிந்து அத்விதியனுப் அபரிச்சின்னனுய் அசங்கனுய் அகர்த்தாவாய் அபோக்தாவாகிய ஆத்மாவே நானென் றெவனறிகிறுனே, அவனே கிருதகிருத்தியனுகிய சீவன்முத்தனும் பரமுத்தனுமென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

ஞாஞஞ்ஞானசொரூப நிருபகம்
முற்றிற்று.

---

பதினறவது

## சரீரத்திரய நிரூபகம்.

ச-கை. பிராணிகளுக்குச் சரீரத்திரயம் விசாரிப்பதில் பிரசித்தியாவதேது? பிரயோசனமாவ தேதென்னில்,

உத்தரம். ஸ்தூலசரீர மெல்லாருக்கும் பிரத்தியட்சமாய்த் தோற்றப்படுகின்றது. பின்னை ஒன்றுந் தோற்றப்

படவில்லை. இதுவுமல்லாமல் வேதாந்தசாஸ்திரிகளுக் கன்னியரானவர்க ளெல்லாம் இந்திரியங்கள் தோற்றியபோதிலும் பிரத்தியட்சத்திற் காணுகிற சரீரமொன்று மாத்திரமேயன்றி வேறே யொருசரீரமில்லை யென்று சொல்லுகிறபடியினால், பிரசித்தியுண்டு. மேலும் இந்த விசாரத்தினாலேயே சமஸ்தமான தேகாதிகளும் அந்தத் தேகசுபாவமாகிய விகாரங்களும் காலத்திரயத்திலும் ஆத்மாவை ஸ்மரிக்கவில்லையென்று தோற்றப்படுகின்றது, இப்படி தோற்றப்படுகிறதே இந்த விசாரத்திற்குப் பலமாகிய பிரயோசனம்.

ச-கை. ஆனாலும் விசாரிப்போம். பிராணிகளுக் கெத்தனை சரீரமென்னில்,

உ-ம். தூல சூட்சும காரணமென்று மூன்றுசரீரம்.

ச-கை. தூலத்துக்குச் சரீரலட்சண மிருக்கிறபடியாயிருக்கலாம். சூட்சுமகாரண சரீரங்களுக்குச் சரீரத்வ மெப்படி கூடு மென்னில்,

உ-ம். அதுகளுக்குஞ் சீரணித்துப்போகிற லட்சண மிருக்கியபடியாற் சரீரத்வமுண்டு.

ச-கை. அதுகளுக்குச் சீரணத்வ மெங்கே காணப்படுற தென்னில்,

உ-ம். சுழுத்தியிலும் முமூட்சுக்களிடத்திலுங் காணப்படுகின்றது.

ச-கை. இந்தச் சூட்சுமகாரண சரீரங்க ளிரண்டுந் தூலத்ந்தைப்போற் பிரத்தியட்சமாய்க் காணாதபடியினால் இல்லையென்று சொல்லுவோமேயென்னில்,

உ-ம். அவ்விரண்டு சரீரமுஞ்சாஸ்திரங்களா லுண்டென்று சொல்லுகிறபடியினாலும், பெரியோர்களால் அங்கீகரிக்கப்பட்டபடியினாலு மில்லையென்பது கூடாது.

ச-கை. ஒரு பிராணிக்குத் தூலசரீர மெத்தனை? சூட்சுமகாரண சரீரமெத்தனையென்னில்,

உ-ம். தூலசரீரமோவென்றால் அனந்தம்; சூட்சுமமும் காரணமுமொவ்வொன்றேயாம்.

ச-கை. இம்மூன்றுக்குஞ் சரீரத்வந் துல்யமாயிருக்கத் தூலசரீரமனந்தமாகவும், சூட்சுமகாரண சரீர மொவ்வொன்றாகவு மிருக்கிறதென்னவென்னில்,

உ-ம். சூட்சுமகாரண சரீரங்கள் கர்மஜன்னியமல்லாதபடியினா லதுக ளொவ்வொன்றாயிற்று.

ச-கை. அதுகளுக்குப் பிரகாராந்தரத்தி லானாலுங் கர்ம ஜன்யத்வ மங்கிகரிக்கப்படுமேயென்னில்.

உ-ம். அப்படி கூடாது.

ச-கை. சூட்சுமகாரண சரீரங்களுக்குக் கர்மஜன்யத்வ மங்கீகரிக்காதபடியினாற் சரீரத்வமே யில்லாமற் போகின்றது. போனாற்போகட்டுமென் றெண்ணுவோ மானாற் பிராணிகளுக்கு மூன்று சரீரமென்று சொன்னதெடுபட்டுப் போயிற்றேயெனில்,

உ-ம். அப்படியல்ல. சூட்சுமசரீரத்திற்குப் பிரகாராந்தரத்தினா லுற்பத்தி யங்கீகரித்தோமானாற் சீவனுக்கு அனாதித்வ மெடுபட்டுப்போகின்றது.

ச-கை. எதினா லெடுபட்டுப் போகின்றதென்னில்.

உ-ம். ஆத்மாவுக்குச் சீவத்வம் சூட்சுமசரீரமென்கிற வுபாதியினாலல்லவா வந்ததென்று சொல்லுகிறார்கள்? ஆகையினால் சீவனுக்கு உபாதியாகிய சூட்சுமசரீரத்திற் குற்பத்தி சொல்லுமிடத்துச் சீவனுக்கு அனாதித்வ மெடுபடுகின்றது.

ச-கை. ஆனால் அவ்வனாதித்வஞ் சித்திக்கு நிமித்தம் உற்பத்தி யங்கீகரிக்காம லிருப்போமேயென்னில்,

உ-ம். அங்ஙனமானுற் சுருதிகளுக்கு விரோதமும் சூட்சுமசரீரத்திற்கு நித்யத்வமும் வருகின்றது. ஆத்மாவுக்கு அதவிதியத்வமு மெடுபட்டுப்போகின்றது. ஆதலால் சுருதிகளுக் கர்த்தஞ்சித்திக்குநிமித்தமும் ஆத்மாவுக்கு அத்விதிபத்வஞ் சித்திக்கு நிமித்தமும் சூட்சுமசரீரத்திற் குற்பத்தி யங்கீகரித்தோமானுல் சீவனுக் கனுதித்வ மெடுபட்டுப்போகின்றது. இதுவன்றியும் உலகத்திலெது ஜன்னிய மாயிருக்கின்றதோ வதுகளெல்லாங் கன்மத்தினு லுற்பத்தி யாச்சுதென்று கண்டோம். ஆகையால் சூட்சுமசரீரத்துக்கு ஜன்னியத்வ மங்கீகரிக்கிறபோது சூட்சுமசரீரங் கர்மஜன்னியமென்றே யங்கீகரிக்கவேண்டும். இல்லாவிட்டால் திருஷ்டாந்த விரோதம்வரும்.

ச-கை. வந்தால் வரட்டுமேயென்னில்,

உ-ம். அது யுக்தமல்ல. இந்த விரோதங்களைப் பரிகரிக்குநிமித்தம் சூட்சுமசரீரத்திற்குக் கர்மஜன்யத்வ மங்கிகரித்தோமானுற் கர்மஜன்னியமாகிய தூலசரீரங்களுக் கனேகத்வங் கண்டதுபோல, ஒருபிராணிக்குச் சூட்சுமசரீரமு மனேகத்வம் வரவேண்டுமென்று சங்கைவரும்.

ச-கை. வந்தால் வரட்டுமேயென்னில்,

உ-ம். அப்போது ஒவ்வொரு பிராணிக்கு ஒவ்வொரு சூட்சும சரீரமென்று சொன்ன தெடுபட்டுப் போகின்றது.

ச-கை. போனுற் போகட்டுமேயென்னில்,

உ-ம். பூர்வ மொன்றென்று சொல்லி இப்போ தனேகமென்று சொல்வதற்கும், பூர்வங் கர்மஜன்னிய மல்லவென்று சொல்லி இப்போது கர்மஜன்னிய மென்பதற்கும் விரோதமாய்த் தோற்றப்படுகின்றது. இப்படி ஒரு தோஷத்தைப் பரிகரிக்கப்போனுல் மற்ஞெருதோஷமும் வருகின்றது.

ச-கை. ஆனால் இந்த விசாரத்தை விட்டுவிட்டுப் பின்னெதுவாகிலுஞ் சொல்லுவோமேயென்னில்,

உ-ம். பின்னையொன்றுஞ் சொல்லுவதற் கிடமில்லை. ஆனபடியினால் இப்போது சூட்சுமசரீரங் கர்மஜன்னிய மென்று சொன்னதற்கும், சீவனுக் கனாதித்வத்திற்கும் சூட்சுமசரீர மொன்றென்றதற்கும், பூர்வம் சூட்சுமசரீரங் கர்மஜன்னியமல்லவென்றதற்கும் விரோதம்வராமற் பின்னுஞ் சொல்லுகிறோம். இப்போது காரணசரீரத்திற்கு ஜன்னியத்வஞ் சொல்லாமல் சரீரத்வலக்ஷணஞ் சொல்லுகின்றோம்.

ச-கை. அதேதெனன்னில்,

உ-ம். சூட்சுமசரீரத்திற்கு ஜன்னியத்வ மங்கீகரித்தல்லவா காரணசரீரத்வ மங்கீகரிக்கப்படவேண்டும்.

ச-கை. காரணசரீரத்திற்கு ஜன்னியத்வ மங்கீகரிக்காமல் எப்படி சூட்சுமசரீரத்வஞ் சொல்லக்கூடுமென்னில்,

உ-ம். அதற்குஞ் சீரியதேயென்ற சரீரலக்ஷண மிருக்கின்றது. ஆதலாற் சரீரத்வஞ் சொல்லக்கூடும்.

ச-கை. அனாதியான வஸ்துவுக்கு நாச முண்டாவென்னில்,

உ-ம். உண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். கடாதிப் பிராகபாவம் அனாதியாயிருந்தபோதிலும் அதற்குக் கடாதி யுற்பத்தியினால் நாச மெப்படியோ, பிரகிருதி புருஷசையோகம் அனாதியாயிருந்தபோதிலுமந்தப் பிரகிருதி புருஷாளுடைய விவேகத்தினால் அதற்கு நாசமெப்படியோ, அப்படிபோலவே அனாதி யஞ்ஞான மென்ற காரணசரீரத்திற்குப் பிரம்மாத்ம வயிக்ய ஞானத்

தினால் நாசம்வரலாம். அதற்குஞ் சரீரத்வ மங்கீகரிக்கிறது விருத்தமல்ல. இந்தப்படி சூட்சுமசரீரத்துக் குற்பத்தி யங்கீகரித்தோமானு லொரு விரோதமுமில்லை.

ச-கை. எப்படி யில்லையென்னில்,

உ-ம். சூட்சுமசரீரத்திற் குற்பத்தியங்கீகரித்தால்அதற் குற்பத்தி சொல்லுகிற சுருதிகளுக்கும் விரோதமில்லை. சூட்சுமசரீரம் ஆத்மகாரியமா யிருப்பதினாலும் காரண மான வாத்மாவையன்றி வெதிருத்தமா யில்லாதபடி யினாலுட ஆத்மாவுக்கும் அத்விதியத்திற்கும் ஆனியில்லை; சீவனுக்கு அனுதித்வபங்கமுமில்லை.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். பிரளயத்திலுஞ் சூட்சுமசரீரங் காரணுத்மகமா யிருக்கிறபடியினாலும் உபாதிக் கேதுவாகிய சீவசம்ஸ் காரமு மிருக்கிறபடியினாலுங் சீவனுக்கு அனுதித்வபங்க மில்லை.

ச-கை. இந்தப்படி சூட்சுமசரீரம் பிரளயத்திலிருந்தா லதற் குற்பத்தி சொல்லக்கூடாதேயென்னில்,

உ-ம். அப்படி சொல்வது யுக்தமல்ல.

ச-கை. உலகத்தில் மிருத்தாதிகளிடத்தில் இல்லாத கடத்துக்கே யுற்பத்தி கண்டோம்; இருக்கிற மிருத்தாதி களுக் குற்பத்திகாணுமே யென்னில்,

உ-ம். அப்படி சொல்லக்கூடாது.

ச-கை. ஏன் சொல்லக்கூடாதென்னில்,

உ-ம். இல்லாதவஸ்து அசத்து; அவ்வசத்துக் குற் பத்தி சொன்னுல் சசவிஷாணுதியும் பிறக்கவேண்டும். அங் ஙன மின்மையால் அசத்துக்குற்பத்தி சொல்லக்கூடாது.

ச-கை. பின்னை யெப்படி யென்னில்,

உ-ம். இருக்கிறவஸ்து சத்து. அதற்கே யுற்பத்தி சொல்லவேண்டுமென்பது உலகத்திற் கண்டோம்.

ச-கை. இஃதெப்படி யென்னில்,

உ-ம். கடம்பண்ணவேண்டிப் பிரவர்த்திக்கிற புருஷன் மிருத்திகை யெடுத்து வருகிறான். புடவைநெய்யவேண்டினவன் நூலைக்கொண்டுவருகிறான். தயிர் வெண்ணெய் வேண்டுமென்றவன் பால் சம்பாதிக்கிறான். எண்ணெய் வேண்டினவன் எள்ளு சம்பாதிக்கிறான். இந்த மிருத்தாதி ளிடத்திற் கடாதிக ளுண்டாகாமற்போனா லவனவன் அதுவதுகளை நியமமாயேன் சம்பாதிக்கிறான்? இல்லாமற் சம்பாதியான். சம்பாதிக்கிறபடியினால் இருக்கிற வஸ்துவுக் கு பத்தி சொல்லவேண்டும். இல்லாதவஸ்துவுக் குற்பத்திசொன்னா லிந்தக்காரியத்துக்கிதுவே காரணமென்கிற நியம மில்லையாகின்றது. அப்படியானால் நூலிற் கடமும், மண்ணிற் புடவையும், தண்ணீரிற் றயிரும் வெண்ணெய்யும், மணலில் எண்ணெய்யுமுண்டாக வேண்டும். அப்படி யுண்டாகாதபடியினால் அது அதுகளுக்கு நியமிதமான காரணத்தினாலேயே காரியமுண்டாகிறது கண்டோம். ஆதலா லிருக்கிறவஸ்துவே பிறக்கிறதென்று சொல்லவேண்டும். அந்தந்தக் காரியத்துக்குங் காரணமாயிருக்கிற வஸ்து விருக்கிறபடியினாலதுவு மிப்படியே பிறக்கிறதென்று சொல்லக்கூடாது.

ச-கை. ஏன் சொல்லக்கூடாதென்னில்,

உ-ம். அந்தக் காரணங்களுக்கு உற்பத்தி பிரத்தியட்சமாய்க் காணாதபடியினா லிந்தக்கடத்திற்கு உற்பத்தி சொன்னதுபோலிதற்குக் காரணமாகிய மிருத்துவாதிகளுக்குச் சொல்லப்படாது. இந்தக் காரணமான மிருத்துவாதிகளுக்கோ ரொருதிக்கி லுற்பத்தி கண்டபோதிலும், பிருதிவியாதிகளுக்குச் சுருதியாதிகளினா லுற்பத்தி கேட்ட

போதிலும் சர்வகாரணமாகிய வாத்மாவுக் குற்பத்தி யுண்டென்பதற்கு யாதொரு பிரமாணமு மில்லாதபடியினாலும், அனவஸ்தாதோஷம் வருகிறபடியினாலும் சர்வகாரணமான வாத்மாவுக் குற்பத்தி சொல்லக்கூடாது. ஆனாலும் இருக்கிற வஸ்துவுக்கே யுற்பத்தி சொல்லுகிறது யுக்தி யுக்தமல்லவென்று சொல்லக்கூடாது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். இப்போது சொன்ன யுக்தியால் அசத்துக் குற்பத்தி சொல்லக்கூடாமற் போனதினாற் சத்துக்கே யுற்பத்தி சொல்லவேண்டும். சத்தென்று விருக்கிற வஸ்துவே சத்து. அதற்கே யுற்பத்தி.

ச-கை. அசத்துக் கேன் சொல்லப்படாதென்னில்,

உ-ம். பிரபஞ்சத்துக்குப் பூர்வந் தோற்றமின்றிய நாமரூபாத்மகம், காரணாத்மகமாய் பீஜாதிகளிடத் திருக்கிற விருட்சாதிகளும் நாமரூபமாய்த் தோற்றுகிறதுபோலப் பிரளயத்திலுந் தோற்றாமலிருந்து நாமரூபாத்மகமாயிருக்கிற சூட்சும சரீரங்களுக்கு நாமரூபாத்மகமாய்த் தோற்றுகிறதே யுற்பத்தி.

ச-கை. ஆனாற் காரணகாரியங்களுக்குப் பேத மெப்படி யென்னில்,

உ-ம். அனபிவியக்த நாமரூபகமாயிருக்கிறது காரணம்; அபிவியக்த நாமரூபகமாயிருக்கிறது காரியம். இப்படியே காரியகாரணங்களுக்குப் பேதமுண்டு. காரியங் காரணாத்மகமா யுண்டென்பதிற் காலத்திரயத்திலுஞ் சந்தேகமில்லை. இதுபோ லுற்பத்திக்கும் அனபிவியக்த நாமரூபாத்மகமாயிருக்கிற காரணங் காரியமாய்த் தோற்றுகிறதற்குக் குலாலாதி வியாபாரத்தை யபேட்சிக்கிறதுயுக்தமே.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். அசத்தான காரியம் பிறக்கிறதென்னும், பட்சத்தில் குலாலாதி வியாபாரத்திற்கு அசத்து ஆசிரயமில்லாதபடியினாலும், அன்னியம் ஆசிரயமான வியாபாரத்தினால் அன்னியத்துக் குற்பத்தி சொல்லும்போது அதிகப் பிரசங்கம் வருகிறபடியினாலும் குலாலாதி வியாபாரம் வியர்த்தமாகின்றது. அந்தக் குலாலாதி வியாபாரத்திற்கு வியர்த்தஞ் சொல்லக்கூடாது. ஆனபடியினால் காரியங் காரணாத்மகமா யிருந்தபோதிலும் குலாலாதி வியாபாரத்தையபேட்சிக்கிறது யுக்தமே. ஆனால் பூர்வஞ்சொன்ன யுக்திகளினால் காலத்திரயத்திலுங் காரியம் காரணாத்மகமா யிருக்கிறபடியால், பிரளயத்திலும் ஆத்மாவுக்குச் சீவத்துவத்திலுபாதிபூதமாகிய சூட்சுமசரீரங் காரணாத்மகமா யிருக்கிறதினாலும், பிரளயத்திலும் ஆத்மாவுக்குச் சீவத்வம் சம்ஸ்காராத்மகமா யிருக்கின்றதினாலும் சீவனுக்கும் அனாதித்வபங்கமில்லை. சூட்சும சரீரத்துக்கு நாமரூபாத்மகமாய்த் தோற்றுகிறதே யுற்பத்தியென் றங்கீகரிக்கிறபடியினாற் சுருதிகளுக்கும் விரோதமில்லை.

ச-கை. இந்தத் தோஷ மிப்படி பரிகரித்தபோதிலும் உலகத்தில் ஜன்னியமான வஸ்துகளுக்குக் கர்மஜன்னியத்வமும் அனேகத்வமுங் கண்டோம். ஆதலால் சூட்சும சரீரமுஞ் ஜன்னியமாகிறபோது அதற்குக் கர்மஜன்னியத்வமு மனேகத்வமும் வரவேண்டுமென்கிற தோஷம் பரிகரிக்கப்படவில்லையே யென்னில்,

உ-ம். அதுவும் பரிகரிக்கிறோம்.

ச-கை. சூட்சும சரீரத்திற்குக் கர்மஜன்யத்துவமும் அனேகத்வமு மங்கீகரித்தாலல்லவா, அந்தத் தோஷங்கள் பரிகரிக்கவேண்டும்? அப்படி யங்கீகரித்தால் பூர்வஞ் சூட்சுமசரீரங் கர்மஜன்னியமல்லவென்று மொன்றென்றுஞ் சொன்னதற்கு விரோதம் வருகிறதேயென்னில்,

உ-ம். அந்த விரோதங்களு மில்லாமல் பரிகரிக்கிறோம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஜன்னியமெல்லாங் கர்மஜன்னியமென்றே யங்கீகரிக்க வேண்டும். ஆதலால் அது சாமானிய கர்மஜன்னியமென்றும், விசேஷ கர்மஜன்னியமென்று மிரண்டுவிதம். இப்படி யிருப்பதினால் சூட்சுமசரீரத்திற்குச் சாமானிய கர்மஜன்னிய மங்கீகரித்தபடியினால் ஜன்னியமாத்திரத்திற்குக் கர்மஜன்யத்வம் நியமபங்கமில்லை. சூட்சும சரீரத்திற்குச் சாமானியகர்மஜன்யத்வ மங்கிகரித்தபோதிலும் விசேஷ கர்ம ஜன்யத்வ மங்கிகரிக்காதபடியினால் பூர்வஞ் சூட்சுமசரீரங் கர்மஜன்யமல்லவென்று சொன்னதற்கும் விரோதமில்லை. மேலும் சாமானிய கர்மஜன்யமாகிய வஸ்துவுக்கு விவகாரத்தி லேகத்வமும், விசேஷகர்ம ஜன்யமாகிய வஸ்துவுக்கு அனேகத்வமும உலகத்திற் கண்டோம். ஆதலால் சூட்சுமசரீரஞ் சாமானிய கர்மஜன்யமாயிருந்தபோதிலும் விசேஷகர்ம ஜன்ய மல்லாதபடியினால், சூட்சும சரீர மொன்றென்று சொன்னதற்கும் விரோதமில்லை.

ச-கை. சாமானிய கர்மஜன்யமான வஸ்துவுக்கு ஏகத்வமும், விசேஷ கர்ம ஜன்யமான வஸ்துவுக்கு அனேகத்வமு மெங்கேயாகிலுங் கண்டதுண்டோ வென்னில்,

உ-ம். உலகத்திற் பிருதிவியாதிகளிடத்திற் கண்டோம்.

ச-கை. பிருதிவியாதிகளுக்குக் கர்மஜன்யத்துவங் காணோமே யெப்படி சொல்லுகிறதென்னில்,

உ-ம். ஜகத்தெல்லாஞ் ஜன்யமானபடியாலும் சீவர்களுக்குப் போக்கியமான படியினாலுஞ் ஜகத்து சாமானிய கர்மஜன்யமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. சீவர்களுக்குப் போக்கியமானல் ஜகத்து கர்ம ஜன்யமாகவேண்டுமோவென்னில்,

உ-ம். ஆம். கர்மங்களுக்கெல்லாஞ் சுகதுக்கம் பல மாகையினுல், அச்சுகதுக்கங்க ளனுகூலப் பிரதிகூலிய வஸ் துக்களை யவலம் பித்துக்கொண்டு வருகின்றது. அது களிற் சிலபதார்த்தஞ் சிலருக்கு அனுகூலமாயிருந்து சுக மாகவும், சிலருக்குப் பிரதிகூலமாயிருந்து துக்கமாகவு மிருக்கிறபடியினுலும், சீவர்களுடைய கர்மங்கள் தங்களுக் குப் பலமாகிய சுகதுக்கங்களுக்குச் சாதனங்களாகிய வாகா சாதிகளுக் குற்பத்திகளைச் சம்பாதித்துக்கொண்டே சீவர் களுக்குச் சுகதுக்கங்களைக் கொடுக்கிறபடியினுலும் ஜகத் தெல்லாங் கர்மஜன்யமென்றே சொல்லவேண்டும்.

ச-கை. திதிகாலத்திலல்லவா சீவர்களையு மவர்கள் கர்மங்களையுங் காணுகிறோம். பிரளயத்திற் சீவர்களையும் அவர்கள் கர்மங்களையும் காணேமே. இப்படி யிருக்கச் சீவர்களது கன்மதத்திலைாகாசாதி ஜகத்து பிறக்குமென் றெப்படி சொல்லலா மென்னில்,

உ-ம். பிரளயத்திலுஞ் சீவர்களெல்லாந் தங்கள் தங்க ளுபாதிகளுடன் கூடச் சுழுத்தியைப்போற் சம்ஸ்காராத் மகமா யிருக்கிறார்கள். அவர்களது கன்மங்களுஞ் சம்ஸ் காராத்மகமா யிருக்கின்றன. அப்படிப்பட்ட கர்மத்தினு லாகாசாதி ஜகத்து பிறக்குமென்பது கூடும். அங்ஙன மங்கீ கரிக்காவிட்டால், பூர்வகற்பத்திற் சீவர்களாற் செய்யப் பட்ட கன்மத்துக்கும், இந்தக் கற்பத்திற் பலமில்லாமற் போகவேண்டும். பூர்வகற்பத்திற் செய்யாத கன்மத்திற் கிந்தக்கற்பத்திற் பலமாகவேண்டும். ஆனல் சுருதியாதி களுக்கு வியர்த்தமும் வரும். அல்லாமலும் ஒரொரு காரண முமின்றி ஜகத் துற்பிக்குமென்று சொல்லுமிடத்து, முத்தி

புருஷாளும் உற்பத்தியாகவேண்டும். மேலும் ஜகத்தில் மனுஷர் தேவர் திரியக்காதிகள் பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்க ளென்கிற விவஸ்தைக ளில்லாமற் போகவேண்டும். இந்தத் தோஷங்கள் வந்தாலும் வரட்டுமென்கிற துசிதமல்ல. ஆதலாற் பிரளயத்திலுஞ் சம்ஸ்காராத்மக மாயிருக்கிற சீவர்களது கர்மத்தினாலேயே ஆகாசாதி ஜகத்து பிறக்குமென்பதிற் சந்தேகமில்லை. இப்படியாகாசாதிகள் கர்மத்தினாற் பிறந்த போதிலு முத்திபரியந்தமு மொன்றாகவே யிருக்கின்றது. அன்றியும் பிரளயத்தில் லயித்திருந்து சிருஷ்டியில் ஆகாசமாகாசமாகவும், வாய்வு வாய்வாகவும், தேய்வு தேய்வாகவும், அப்பு அப்புவாகவும், பிருதிவி பிருதிவியாகவும், பிறக்கிறது. அதுபோலச் சூட்சுமசரீரம் பிரளயத்தில் லயித்திருந்த போதிலு மந்தந்தச் சீவர்களது கர்மத்தினாற் பூர்வகற்பத்திலிருக்கிறதுபோற் பிரதிகற்பத்திலும் பிறக்கின்றது. இப்படி பிறந்தபோதிலுஞ் சுவகத விகாரமாயிருந்தபோதிலும் சூட்சுமசரீரம் ஒவ்வொரு பிராணிக்கு முத்திபரியந்தமு மொன்றென்பதிற் சந்தேகமில்லை.

ச-கை. இப்படி சொன்னால் முத்திக்குப் பிறகு சூட்சுமசரீரங்க ளனேகமா யிருக்குமென்று தோற்றுகின்றதே யென்னில்,

உ-ம். முத்திக்குப் பிறகு சூட்சுமசரீரம் இல்லவே யில்லை. ஆதலாலந்தச் சங்கைக் கவகாசமில்லை. இந்தப்படி சூட்சுமசரீரம் ஆகாசாதிகளைப்போல் சாமானிய கர்ம ஜன்னியத்தினாற் பிறந்திருக்கிறபடியினா லொவ்வொரு பிராணிகளுக் கொவ்வொரு சரீரமென்று சொன்னது யுக்தமே.

ச-கை. இப்படி சொல்லுகிறது விரோதமாகத் தோற்றுகின்றதே யென்னில்,

உ-ம். அதில் விரோதமேயில்லை.

ச-கை. ஆகாசாதிகள் சர்வப் பிராணிகளுடைய கர்மத்தினாற் பிறந்ததாகையால், அவ்வாகாசாதிகளுக்குச் சாமானிய கர்ம ஜன்யத்வமும், பிரளயபரியந்த மொன்றாயிருக்கின்றதும், பிரதிகற்பத்திலு மப்படியே பிறக்கிறதும் யுக்தமே. அந்தந்தப் பிராணிகளுடைய சூட்சுமசரீரம் சமஸ்த பிராணிகளது கர்மத்தினாற் பிறந்ததல்லவே. ஆகையால் அதற்குச் சாமானிய கர்மஜன்னியத்வமும், ஒவ்வொரு பிராணிகளுக் கொவ்வொன்றென்பதும், பிரதிகற்பத்தி லப்படி யப்படி பிறக்குமென்பது மெப்படி கூடுமென்னில்,

உ-ம். ஆகாசாதிகளைப்போ லந்தப் பிராணிகளுடைய சூட்சும சரீரங்கள் சமஸ்த பிராணிகளுடைய கர்மத்தினாற் பிறக்காமற் போனாலும் அந்தந்தப் பிராணிகளுக்குச் சிருஷ்டி முதற் பிரளயபரியந்தமும் தூலசரீரத்துவாரா சுக துக்கங்களைக் கொடுக்கிற கன்மங்களினாலேயே அந்தந்தப் பிராணிகளது சூட்சுமசரீரங்க ளப்படி யப்படியே பிறக்கின்றது. ஆதலாலந்தச் சூட்சுமசரீரத்திற்குச் சாமானிய கர்ம ஜன்னியத்வமும், ஒவ்வொரு பிராணிக் கொவ்வொரு சூட்சுமசரீரமென்பதும், பிரதிகற்பத்தி லப்படி யப்படியே பிறக்குமென்பதும், முத்திபரியந்தம் நித்தியமென்பதுங் கூடும்.

ச-கை. ஆனால் லீனமானவஸ்து கர்மத்தை யபேட்சித்துப் பிறக்குமென்பதற்கும், சாமானிய கர்மத்தினாற் பிறந்தவஸ்து ஒன்றாயிருக்குமென்பதற்கும், விசேஷ கன்மத்தினாற் பிறந்த வஸ்து நானாரூபமா யநேகமா யிருக்குமென்பதற்குந் திருஷ்டாந்த முண்டோவென்னில்,

உ-ம். உண்டு. காஷ்டபாஷாணாதிகளிடத்தில் லீனமாயிருக்கிற அக்கினிக்கு மர்த்தனாதிரூபமான கர்மத்தினா

லெப்படி யுற்பத்தியோ, அப்படியே காரணரூபமான சூட்சும சரீரத்திற்குக் காரியகாரணமாகத் தோற்றுகிற கர்மத்தினாலேயே யுற்பத்தி சொல்லப்பட்டது. இதனாற் காரியம் அசத்தென்பது கூடாது. மேலுங் குலாலனால் நானாவித பாண்டங்கள் பண்ணவேண்டுமென்று சம்பாதிக்கப்பட்ட மண்மொத்தை யொன்றே. அது அனேக கர்மத்தினாற் பண்ணப்பட்டாலும் அக் கருமங்களெல்லாம் அந்த மிருத்துபிண்டத்தினாற் பிறந்த வனேகம் பாண்டங்களுக்கெல்லாஞ் சமானமாயிருக்கிறபடியினால், அம்மண் மொத்தை சாமானிய கர்மமானதால் அந்த மிருத்துபிண்டம் ஒன்றேயாகும். மேலும் அம்மிருத்துபிண்டத்தினாற் பண்ணப்பட்ட பாண்டங்களில் ஒருபாண்டம் பண்ணப்பட்ட கர்மத்தினால் மற்றொருபாண்டம் பண்ணப்படவில்லை. ஆகையால் அந்தப்பாண்டங்களெல்லாம் விசேஷ கர்மஜன்னியமே. அந்தப்பாண்டங்கள் நானாரூபமாகவும் அனேகமாகவு மிருக்குமென்பதும் சர்வானுபவசித்தமே. இந்தப்படி சூட்சும சரீரஞ் சாமானிய கர்மஜன்னியமானபடியினா லொவ்வொரு பிராணிக் கொவ்வொரு சரீரமென்பதும், தூலசரீரம் விசேஷ கர்மஜன்னியமானபடியினா லொவ்வொரு பிராணிக் கனந்தமென்பதுங் கூடும்.

ச-கை. இன்னம் இதற்கு விசேஷமான திருஷ்டாந்தமுண்டோ வென்னில்,

உ-ம். உண்டு. உலகத்தில் ஒருதேவதத்தனுக்குக் கர்மவசத்தினால் நானாவித வஸ்திரங்கள் வருகின்றன. அதுகளொன்றுபோ லொன்றிருக்கவில்லை யப்படியே விசேஷ கன்மத்தினா லெப்படி யெப்படி வருகின்றதோ அதுபோலத் தூலசரீரங்களு மொவ்வொரு பிராணிக்கு விசித்திரமாய் அனந்தமாகவும் வருகின்றதால் அந்தத் தூல சரீரங்களும் விசேஷகர்ம ஜன்னியமென்றறியத்தக்கது. அந்தத்

தேவதத்தனுக்கு அந்தந்த விசேஷ கர்மத்தினால் வரப்பட்ட வஸ்திரங்கள் வந்து அவ் வஸ்திரங்களால் வருகிற சுகதுக்கங்களுக்குச் சாதனபூதமாகிய ஸ்தூல சரீரமு மொன்று யிருக்கிறபடியால், அவ்வஸ்திரங்களை யபேட்சித்து ஸ்தூல சரீரமெப்படி சாமானியகர்ம ஜன்னியமாச்சுதோ அப்படியே சூட்சுமசரீரமு மொவ்வொரு பிராணிக்கு மொவ்வொன்று யிருக்கிறபடியினால், அதுவும் சாமானியகர்ம ஜன்னியமென்றெ யறியவேண்டும்.

ச-கை. இதனாலென்ன சித்தித்ததென்னில்,

உ-ம். சூட்சுமசரீரத்திற்கே தூலசரீரத்தைத் தரிக்கிறதுங் களைகிறதுமென்று சித்தித்தது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் தூலசரீரங்களுக்கே வஸ்திரங்களைக் கிரகிக்கிறதும் களைகிறதும் பிரத்தியட்சமாய்க் கண்டதுபோலச் சூட்சும சரீரத்திற்கும் தூலசரீரங்களுடைய பரிக்கிரகமும் தியாகமுமென்று அறியத்தக்கது. இதனாற் சூட்சுமசரீரத்திற்குத் தூலசரீரத்தைத்தரிக்கிறதே ஜனனமென்றும், அத்துடன்கூடி யினிமேற் சம்பந்தமின்றி விட்டுவிடுகிறதே மரணமென்றும் பிரசித்தியாயிற்று. ஆதலாற் சூட்சுமசரீரத்திற்கே பிரத்தியட்சத்திற் ஜனனமரணங்க ளில்லையென்று தோற்றுகிறபடியால், ஆத்மாவுக்கும் ஜனனமரணாதிகளுக்கும் பிரசித்தியே யில்லையென்றறியத்தக்கது.

ச-கை. இப்படி சொல்லுமிடத்தில் இந்தச் சூட்சும சரீரத்திற்குத் தூலசரீர மனந்தமென்று தோற்றப்படுகின்றது. தோற்றினாற் றோற்றட்டுமென்று சொல்லுவீராகில், பூர்வம் பிராணிகளுக்குத் தூலசரீர மனந்தமென்று சொல்லி, இப்போது சூட்சும சரீரத்துக்குத் தூலசரீர

மனந்தமென்று சொன்னால், முன் சொன்னதற்கு மிப்போது சொல்வதற்கும் விருத்தமல்லவா? ஆசையாலிந்தச் சூட்சுமசரீரமே பிராணிசப்தத்திற் கர்த்தமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். அப்படி சொல்லக்கூடாது,

ச-கை. ஏன் சொல்லக்கூடாதென்னில்

உ-ம். பூர்வம் பிராணிகளுக்குச் சூட்சுமசரீரமொன்றென்று சொல்லி, இப்போது சூட்சுமசரீரமே பிராணிசப்தத்திற் கர்த்தமென் றெப்படிசொல்லலாம்.

ச-கை. ஆனு லிவ்விரண்டு விரோதமுந் தோற்றுகின்றதே யென்னில்,

உம். விரோதம் வராமற் சொல்லுகிறோம். பிராணிசப்தத்திற்கு ஆத்மாவே யர்த்தம். அவ்வாத்மாவுக்கே காரணசரீரமென்று பேருண்டாகிய வஞ்ஞானத்தினால்வந்த சூட்சுமசரீர வத்தியா சத்துவாரா அனந்தமான தூலசரீரங்கள் வருகிறதும் போகிறதுமாகவும் அந்தத் தூலசரீர சுபாவமாகிய ஜனனமரணங்கள் பிரசித்தமானதுபோலவுந் தோற்றப்படுகின்றது.

ச-கை. அஃதெப்படி தோற்றப்படுகிறதென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் தூலசரீரத்தினால் வஸ்திரங் கிரகிக்கிறதும், விடுகிறதும் பிரத்தியட்சமாய்க் கண்டபோதிலும், அந்த ஸ்தூலசரீர வெதிருத்தமாகிய வாத்மா அந்தத் தூலசரீரத்தின்வழியே வஸ்திரக் கிரகணத் தியாகாதிக ளெப்படி தோற்றுகிறதோ, அப்படியே யஞ்ஞானத்தினால் வரப்பட்ட சூட்சுமசரீரத்தின்வழியே ஆத்மாவுக்கு அனந்தமான தூலசரீரங்கள் வருகிறதுபோலும் போகிறதுபோலும் மோகத்தினால் தோற்றப்படுகின்றது. விசாரிக்குமிடத்து ஆத்மாவுக்குப் பிரசித்தியில்லாமல் தூலசரீரத்

துக்கே பிரத்தியட்சமாய்க் காணப்படுகிறபடியால், சூட்சும சரீரத்திற்குத் தூலசரீரத்துடனேகூட அத்தியாசம் வினுவாய் ஜனனமரணங்க ளில்லை. சூட்சுமசரீரத்திற்கே ஜனன மரணமில்லாமற் போனபடியா லாத்மாவுக்கு மோகமாத்திர மல்லாமற் ஜனனமரணங்க ளில்லையென்பதிற் சந்தேகமில்லை. இந்தப்படி பிராணிகளுக்குத் தூலசரீர மனந்தமென்றதும், சூட்சுமசரீரமும் காரணசரீரமும் ஒன்றென்று சொன்னதும் யுக்தமே.

ச-கை. இதனு லென்ன சித்தித்ததென்னில்,

உ-ம். சரீரத்திரயமும் பிராணிசப்தத்தினுற் சொல்லப்பட்ட வாத்மாவல்லவென்பது சித்தித்தது.

ச-கை. அஃதெப்படி சித்தித்ததென்னில்,

உ-ம் உலகத்தி லொருவன் மற்ருருவனைப்பார்த்து உனக்கு ருத்திராட்சத்தாழ்வட மெத்தனையென்ருல் மூன்றென்கிருன்; பூணூ லெத்தனையென்ருல் மூன்றேயென்கிருன்; தோவித்தி யெத்தனையென்ரு லதுவு மூன்றேயென்கிருன். இப்படியே பிராணிகளுக் கெத்தனை சரீரமென்று விசாரிக்குமிடத்து மூன்று சரீரமென்றே தோற்றுகின்றது.

ச-கை. இப்படி தோற்றுகிறதினு லென்ன சித்தித்ததென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் அந்த உருத்திராட்சத்தாழ்வட முதலான விதங்க ளத்தனையுந் தரித்துக்கொண்டிருக்கிறவர்க ளெப்படி யதுகளல்லவோ, அந்த ருத்திராட்சாதி சுபாவமான விகாரங்கள் அதைத் தரித்துக்கொண்டவர்களை யெப்படி பரிசிக்க வில்லையோ, அப்படியே தாஷ்டாந்தத்திலும், தூல சூட்சுமகாரண சரீரங்கள் பிராணி சப்தத்தினுற் சொல்லப்பட்ட வாத்மாவல்லவென்றும் சரீரத்திரய சுபாவமான விகாரங்கள் அந்தப் பிராணிசப்தவாச்சியனுகிய

வாத்மாவைப் பரிசிக்க வில்லையென்றுஞ் சித்தித்தது. உலகத்தில் அந்தத் தேவதத்தாதிகளுக்குக் கிரகியென்றும், க்ஷேத்திர னென்றும், புத்திரியென்றும், தனியென்றும், குண்டலியென்றும் விவகாரங்கள் கண்டோம். அதுபோல ஆத்மாவுக்குஞ் சரீரயென்றுந் தேகியென்றும் பிராணியென்றுஞ் சொல்லப்பட்ட விவகாரமும் லோகத்திலும் வேதங்களிலுந் தோற்றப்படுகின்றன. அப்படி தோற்றபட்ட தேவதத்தாதிக ளந்தக்கிரகாதிக ளெப்படியல்லவோ, அதுகளின் சுபாவமான விவகாரங்க ளவர்களை யெப்படி பரிசிக்க வில்லையோ, அப்படி போல் தேகி சரீரிபிராணியென்கிற வுபாதியினால் தோற்றுகிற வாத்மா அந்தத் தேகாதிகளல்லவென்றும், அந்தத் தேகாதி சுபாவ விவகாரங்களும் ஆத்மாவைத் காலத்திரயத்திலும் பரிசிக்கவில்லையென்றுந் தோற்றப்படுகின்றது.

ச-கை. இந்தப்படி சரீரத்திரயமு மாத்மா வல்லாததாய் சரீரத்திரய சுபாவமான விகாரங்க ளாத்மாவுக் கில்லாததா யிருந்தாலும் சாமானியமாய்த் தோற்றப்படுகிறபடியினாலும் விசேஷமாய் தூலசரீரம்போல் சூட்சுமகாரண சரீரந் தோற்றப்படாமையினாலும் நன்றாய்ப் பலபலவிதமாக விசாரித்தபோதிலும் இந்தச்சரீரங்க ளாத்மாவல்லவென்று தோற்றுகிறது கடினமா யிருக்கிறபடியினாலும் சரீர மூன்றே. இந்தச்சரீரங்க ளாத்மாவல்ல; இந்தச் சரீரத்திரய சுபாவமான விகாரங்களாத்மாவைப் பரிசிக்க வில்லையென்று திடமாகத் தோற்றும்படி விசேஷ யுத்தி யுண்டாவென்னில்,

உ-ம். உண்டு. தூலசரீரஞ் சமஸ்த பிராணிகளுக்கும் பிரத்தியட்சமாகையினா லிந்தத் தூலசரீர முண்டோ வில்லையோவென்னு மிடத்தில் யாருக்குஞ் சம்சயமில்லை. சாருவாக பாமராளுக் கன்னியரானபேர்கள் இந்தத் தூல

சரீர மாத்மா வல்லவென்னு மிடத்தில் சந்தேகமில்லை. அந்தச் சாருவாக பாமராளுக்கு இந்தத் தூலசரீரமே யாத்மாவென்று சொல்லுகிறது உசிதமல்ல.

ச-கை. அது எப்படி யுசிதமல்லவென்னில்,

உ-ம். சூட்சுமசரீரத்தி லத்தியாசத்தினல் சீவரூபனை வாத்மா சூட்சுமசரீரத்துவாரா தூலசரீர வத்தியாசத்தினல் வந்த புத்திராதி யபேட்சையினல் பிதுராதிசப்தஞ் சொல் லப்படுகிருன். இப்படி பிதுராதி சப்தத்திறை சொல்லப் பட்டவன் போற்ருேற்றுகிற வாத்மா தூலசரீரத்துக் கன் னியனே. அந்தப் பிதுராதி சப்தத்தி லிந்தத் தூல சரீரஞ் சொல்லப்பட்டதாளுல் அந்தப் பிதுராதிகள் செத்த பிறகும் அந்தப் பிதுராதி சப்தார்த்தமாய் சாருவாகபாம ராளுக்குத் தூலசரீர மாத்மா வென் றங்கீகரிக்கப்பட்டால் தூலசரீர மிருககவேண்டும். அவர்கள் செத்துப்போனர்க ளென்று சொல்லாதிருக்கவேண்டும். அங்ஙன மின்மை யால் இந்தத் தூலசரீர வெதிருத்தனே யாத்மா வென்று சாருவாக பாமராளுக்கு மங்கீகரிக்கவே வேண்டும். இது வல்லாமற் பின்னும் யுக்தியாந்தரத்திலும் தூலசரீர வெதிருத்தனே யாத்மாவென்று தோற்றப்படுகின்றது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். பிதுராதி சப்தங்களுக் கர்த்தம்போல் தோற்றப் பட்ட தூலசரீரஞ் செத்துக்கிடக்கும்போது அதைத் தழுவி யோலமிட்டழுகிற புத்திராதிகள், அப்பா எங்களை அவாந்தரத்தில் விட்டுவிட்டு கடன்கொடுத்தவிடமும், வாங் கினவிடமுஞ் சொல்லாமல், எங்கள் வாயில் மண்போட்டு விட்டுப் போகலாமா ஆதெய்வமே யென்று கதறுகிருர்கள். அல்லாமலும் பந்துஜனங்கள், சினேகர்கள், அறிந்தவர்கள் வந்து, ஐயோ இப்படியே யுன் தாயார் முதலானபேர்க

ளெல்லா மிறந்துபோனார்க ளல்லவா? உங்கள் சவரட்சணைக்கு ஒருவருமில்லாமற் போய்விட்டார்களே யென்று துக்கம் வினவினால், அவர்களைக் கண்டு, கூகாவென் றலறி வாயிலடித்துக்கொண்டு, இபபடியே எங்களை யனாதரவாய் விட்டுவிட்டு எல்லாரும் போய்விட்டார்க ளினி நாங்களெப்படி பிழைக்கப்போகிறோமென்று பூமியில் விழுந் தழுகிறார்கள். பின்னும் வேறொருவன் வந்து அவன் மனைவியை அம்மா! உன் புருஷ னிறந்துபோய்விட்டாரா வென்று துக்கம் வினவினால், ஆ தெய்வமே! கெட்டேனென்று தலையில் மோதிக்கொண்டு தரையில் விழுந்தழுகிறாள். பின்னும் ஒருவன்வந்து தகப்பனை ஐயா! உன் பிள்ளை போய்விட்டானா வெனத் துக்கம் வினவினால், ஐயா, என் வாயில் மண்ணைப்போட்டு இறந்துபோய்விட்டான். அடா மகனே, என்னையும் உன்கூட அழைத்துக்கொண்டு போடா, நீ பிறந்தநாள்முதற்றுக்கமே யனுபவித்தேன், உன்னுடன் ஏழுபிள்ளைகளைக் கொன்றேன், இன்னமுந் தெய்வ மெங்களையே சோதிக்கின்றது, நான் இந்தத் துக்கத்தைச் சகிக்கமாட்டேன், நானும் என்வீட்டி லுள்ளவர்களுமாய் விஷத்தைத்தின்று எல்லாருமொரு முகூர்த்தத்தி லிறந்துபோகிறோமென் றழுகிறான்.

ஒருவித்துவானை யுன்பெண்சாதி யிறந்துபோனாளா வென்று ஒருவன் துக்கம் வினவவந்தால், அப்போது அவன் கற்றிருக்கிற பல கல்விசாமர்த்திய யுக்திகளை யெல்லா மறந்து, துக்காக்கிராந்தனாய், ஐயா, என்பிராணனானவள், என்வாயில் மண்போட்டுவிட்டுப் போனாள். அவள் ஸ்ரீதேவியைப்பழித்த அழகும், பூதேவியைப் பழித்த பொறுமையும், அருந்ததியைப் பழித்த கற்புமுடையவள். அவளைப்பிறிந்து நானெப்படி யிருப்பேன்? ஆ என்பிராண நாயகியே! ஒருவார்த்தை சொல்லடி எனக்குத் திக்காரடி,

நானுன்கூட வருகிறேன், என்னையு மழைத்துக்கொண்டு போடி, எனக்குக் கஞ்சி தண்ணீர்வார்த்து இனி யுன்னைப்போ லுபசரிக்கிறவராரடி; தேவபூசை, அவுபாசனம் பண்ணவும், பந்துக்கள்வந்தா லுபசாரம்பண்ணவும் உரித்தானவர்க ளொருவரில்லையே. ஆயிரம்பேர்வந்தாலும் நீயாவார்களாவென் றிப்படி பலபலவிதமாகப் பிரலாபித்தழுகிறான்.

ச-கை. இப்படி யழுகிறவிதத்தினு லென்ன தோற்றுகிறதென்னில்,

உ-ம். ஊரிலிருநது வந்த வ்ன்மாமன்முதலானவர்களூருக்குப்போய் விட்டார்களாவென்று ஒருவனைக் கேட்டால் அவர்க ளெங்களுடன் செல்லாமற் கட்டியிருந்த தோவித்தி புடைவைகளையும் விட்டுவிட்டுச் செவ்வையாய்ப போய்விட்டார்களென்று சொல்வதுபோ லிருக்கின்றது. இந்தத் திருஷ்டாந்தத்தில் மாமன்முதலியோர்கள் கட்டியிருந்த தோவித்தி புடவைகளுடன் தோற்றப்பட்டாலும் அதுகளை விட்டுப்போனவர்களை மாமன் முதலானவர்கள் சப்தத்திற் கர்த்தமானதுபோல் இந்தத் தூலசரீரத்தை விட்டுவிட்டுக் கர்மானுசாரத்தினுல் லோகாந்தரத்திற்குப் போனவர்களை பிதுராதி சப்தத்திற்கர்த்தமென்றும், தூலசரீரம் பிதுராதிசப்தத்திற் கர்த்தமல்லவென்றுந் தோற்றப்படுகின்றது. ஆதலா லிந்தத் தூலசரீரத்திலிருந்து வெளிப்பட்டுபோனவர்களே பிதுராதிசப்தத்துக்கர்த்தமேயென்றி வெளிப்படாமுன்னு மிங்கிருந்த சரீரம் பிதுராதி சப்தத்துக் கர்த்தமென்றுஞ் சொல்லக்கூடாது.

ச-கை. அப்படி சொல்லலாமேயென்னில்,

உ-ம். ஆனுல் தோவித்தி புடவைகளை விட்டுப்போன மாமன்முதலியோர்கள் அதுகளை விட்டுப்போகாமுன்னும் தோவித்தி புடவைகளை மாமன்முதலியோராகவேண்டும்.

பின்னும் ஒரு வீட்டிலிருந்து வெளிப்பட்டுப்போன புருஷன் அந்தக் கிரகத்திலிருந்து வெளிப்படாமுன்னும் அந்தக்கிரகமே யாகவேண்டும். அப்படி சொல்லக்கூடாமையினால் தோவித்தி புடவைகளுடன் கூடிக்கொண்டிருந்த மாமன் முதலியோர் கூடியபோதும் விட்டபோதும் அந்தத் தோவித்தி புடவைக ளெப்படி யவர்களல்லவோ, கிரகத்திலிருந்து வெளிப்பட்ட புருஷன் கிரகத்திலிருநதபோதும் நீங்கினபோதும் அவன் அந்தக் கிரகசப்த மெப்படி யல்லவோ, அப்படியே பிதுராதி சப்தங்களுக் கர்த்தமாகிய பிதுராதிகள் தூலசரீரத் திருந்தபோதும் விட்டுப்போன போதும் அந்தப் பிதுராதி சப்தத்திற்கு ஸ்தூலசரீரத்தை விட்டுப்போனவர்களே யர்த்தமாகு மன்றித் தூலசரீர மர்த்தமல்ல. பின்னும் எந்தப் பிதுராதி சரீரமானாலென்ன, அதன் மரணத்திற்குமுன் பிதுராதி சப்தத்துக் கர்த்தமென்றெண்ணியிருந்த இந்தச் சரீரத்தைக் குறித்து ஒருவர் உதாசினஞ் சொன்னபோதிலும் அந்தச் சரீரத்திற் பிராணவதை செய்தபோதிலு மனேக நரகமுண்டாகுமென்று சாஸ்திரங்களிற் சொல்லக்கேட்டும் மரணமானபிறகு சரீரத்தைக் கொளுத்திவிடுகிறார்கள்.

அந்தப் பிதுராதி சப்தத்துக் கிந்தத் தூலசரீரமே யர்த்த மானால் இதைக்கொளுத்திய புத்திராதிகளுக்கும் பிதுராதிகளுக்கும் பிதுர்ஹத்தியாதி தோஷம் வரவேண்டும். அங்ஙனம் வந்தால் அப்புத்திராதிகளுக் கனந்தங் கோடி நரகம் வரவேண்டும். அன்றியும் உலகத்திலவர்களை மாதுரஹத்தி பிதுர்ஹத்தி யுடையவர்களென்று எல்லாருந் தூஷிககவேண்டும். அப்படி இல்லாமையினாலும் பிதுராதி சரீரங்களைக்கொளுத்தினவர்களுக்கு நரகமென்று சாஸ்திரஞ் சொல்லாமையினாலும் தூலசரீரம்பிதுராதி சப்தங்களுக்கர்த்த மல்ல. மேலும் எந்தச் சரீரத்தைப் பிது

ராதி சப்தத்துக் கர்த்தமாக வெண்ணிக்கொண்டு பூஜை நமஸ்கார வுபசாரங்கள் செய்து வந்தார்களோ, அந்தச் சம்பந்தமான சரீரத்தை மரணாந்தத்திற் றகித்துப்போடாவிட்டால், புத்திராதிகளுக்குப் பிரத்திவாயதோஷ முண்டென்று சாஸ்திரங்களிற் சொல்லுகின்றது.

புத்திராதிக ளந்தத் தேகத்திற்குத் தகனாதிக்கிரிகைகள் பண்ணினார்களானால் அதிலிருந்து வெளிப்பட்டு லோகாந்தரம்போன பிதுராதிகளுக்குப் பிரேதத்வ விமோசன ரூபமான வதிக சயமும் நற்கதியு முண்டு. அதைத் தகனாதிசெய்த புத்திராதிகளுக்கும் பிரத்திவாயதோஷ மில்லையென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். பாளயத்திலிருந்த ராஜன் வெளிப்பட்டுப் போனால் அவனுக்கு நல்ல பாளயம் வரவேண்டுமென்றும், மிகுந்த செல்வம் வரவேண்டுமென்றுங் கோருவார்கள். அப்படி கோராதவர்களை அவ்வரசனுக்குப் பாளயம் வந்தவுடனெப்படி சிக்ஷை பண்ணுவானோ, அப்படியே செத்து கிடக்கிற பிதுர்க்கள் சரீரங்களைப் புத்திராதிகள் சம்ஸ்காரஞ்செய்தால் அப் பிதுராதிகளுக் கதிக சயமும் நற்கதியு முண்டு; அப்படி செய்யாவிட்டால் புத்திராதிகளுக்குப் பிரத்திவாய தோஷமுண்டு. இன்னமும் உலகத்தில் செத்துக்கிடக்கும் பிதுராதி சரீரங்களைச் சம்ஸ்காராதிகள் பண்ணின புத்திராதிகளைப்பார்த்து, அப்பா, நீ நல்லகதியுண்டுபண்ணினாயென்று கொண்டாடுகிறார்கள்; அப்படி செய்யாதவர்களைத் தூஷிக்கிறார்கள். இதனாலும் பிதுராதி சப்தத்திற்குத் தூலசரீரத்திலிருந்து வெளிப்பட்டு லோகாந்தரம்போனவர்களே யர்த்தமெனத் தோற்றுகின்றது.

ச-கை. யுக்தியினா லிந்தப் பிதுராதி சப்தங்களுக்குத் தூலசரீர மர்த்தமல்லாமற்போனாலும், தூலசரீரத்தையே

பிதுராதிகளென்றெண்ணி ஏன் பணிவிடை பண்ணுகிறார்களென்னில்,

உ-ம். இந்தத் தூலசரீரத்தினு ளிருக்கிறவர்களுக்குப் பிரீதியாகப் பணிவிடை பண்ணுகிறார்களன்றித் தூலசரீரப் பிரீதிநிமித்தம் பணிவிடை பண்ணவில்லை.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஒருபட்டணத்தில் ராஜனிருக்கும்போது அந்த ராஜப்பிரிய நிமித்தம் அவ்வரமனை மேற்கட்டுமுதலிய வலங்காரங்களெப்படி செய்கிறார்களோ, அவ்வரமனை முதலானதின் பிரிய நிமித்த மெப்படி செய்யவில்லையோ, அப்படியே தூலசரீரத்திருக்கிறவர்கள் பிரியநிமித்தமல்லது தூலசரீர பிரியநிமித்தஞ் சிசுருஷை பண்ணவில்லை. மோகத்தினால் தூலசரீரம் பிதுராதி சப்தத்துக் கர்த்தம்போற் காணப்பட்டாலும் தூலசரீரத்திலிருக்கிறவனே பிதுராதி சப்தத்துக் கர்த்தம்.

உலகத்தில் கிராமாந்தரம்போன பிதா முதலியோர்களின் வஸ்திரத்தைத், திருடன் பறித்துக்கொண்டு போனானென்று கேள்விப்பட்ட புத்திராதிகள் மறுவஸ்திர மனுப்புவதுபோல, இறந்து லோகாந்தரம்போன பிதுராதிகள் அம்மணத்துடன் போனார்களென்று சாஸ்திரஞ் சொல்லக் கேட்டு அவர்களைக்குறித்து இவ்விடத்தில் பிராமணர்களுக்கு வஸ்திரங்கொடுத்தால், அவர்களுக்குப் போய்ச் சேருமென்று புத்திராதிகள் இப்போதும் பிராமணர்களுக்கு வஸ்திரங்கொடுத்து வருகிறார்கள். இதனாலும் இந்தத் தூலசரீரம் பிதுராதி சப்தத்துக் கர்த்தமல்லவென்று தோற்றுகின்றது.

மேலும் கழனியில் வேலைசெய்கிறவன் வெய்யிலிலடிபட்டுத் தாபத்தினால் வாதைப்படுகிறானென்று கேட்டுக்

கிரகத்தி லிருக்கின்றவர்க ளன்னந்தண்ணீ ரனுப்புவது போலச் செத்து லோகாந் தரம்போன பிதுராதிகளுக்குப் பசிதாக நிமித்தம் பிண்டதிலோதகங் கொடுக்கவேண்டு மென்று சாஸ்திரஞ் சொல்லக்கேட்டு, புத்திராதிகள் அவர்களைக் குறித்துப் பிண்டதிலோதகங் கொடுக்கிறார்கள். பின்னுந் தேசாந்தரம் போகவேண்டுமென்று பரஸ்தானம் பண்ணியிருக்கிறவர்களுக்கு கட்டுச்சாதங்கொடுத்தனுப்புவதுபோற் செத்து லோகாந்தரம்போன பிதுராதிகளுக்கு இவிடத்தில் சொர்க்க பாத்தியங் கொடுத்தா லவர்களுக்குத் திருப்தியாகுமென்று சாஸ்திரங்களிற் சொல்லுகிறபடி சொர்க்கபாத்தியங் கொடுக்கிறார்கள் மேலும் அடுத்த வூருக்குப் போகவேண்டிச் செலவுபெற்றுக்கொண்டு போனவர்கள் ஆறுதாண்டிப்போக வசமின்றி யாற்றங்கரையி லிருப்பதாய்க் கேள்விப்பட்டு, வீட்டிலிருக்கிறவர்கள் கட்டுமரந் தெப்பங் கட்டிக்கொடுத்து அனுப்பிவைப்பதுபோல, செத்து லோகாந்தரம்போன பிதுராதிகளுக்குச் சொர்க்கப் பிராப்தியைக் குறித்து விகாதமான வைதரணிநதி யிருக்கிறதென்று சாஸ்திரஞ் சொல்லக்கேட்டு, அதை யவர்கள் தாண்டிப்போகிற நிமித்தம் இவ்விடத்தில் புத்திராதிகள் வைதரணி கோதானங் கொடுக்கிறார்கள்.

மேலும் இறந்துபோன பிதுராதிகளைக்குறித்து அவர்களிறந்தநாள் முதல் வருஷாப்திகவரைக்கு மாதமாதம் மாசியமும் புத்திராளிருக்கிறபரியந்தம் வருஷாந்தர திவசமும் மத்தியமத்தியத்தில் அட்டகாதி சிரார்த்தங்களும் புண்ணிய க்ஷேத்திரங்களிற் சிரார்த்தங்களுஞ் செய்கிறார்கள். இப்போது சொல்லிவந்த ஸ்தூலசரீரங்கள் பிதுராதி சப்தத்துக் கர்த்தமல்ல. இதுகளிலிருந்து வெளிப்பட்டு லோகாந்தரம் போனவர்களே பிதுராதி சப்தத்துக் கர்த்தமென்று சந்தேகமின்றி யறியத்தக்கது.

ச-கை. இந்த யுக்திகளினுல் தூலசரீரம் பிதுராதி சப்தத்துக் கர்த்த மாகாமற்போனுற் போகட்டும். இதனுற் சூட்சும சரீரசித்தி உமக் கெதினுற் சித்தித்த தென்னில்,

உ-ம். தூலசரீரத்தை விட்டுப்போட்டு எது லோகாந் தரம்போகிறதோ, அதுவே சூட்சுமசரீரமென்று நமக்குச் சித்தித்தது.

ச-கை. ஆனுல் பிதுராதி சப்தததுக் கிந்தச் சூட்சம சரீரமே யர்த்தமென்று சொல்லலாமே யென்னில்,

உ-ம். பிதுராதிசப்தம் சேதனம்; சூட்சுமசரீரம் அசே தனம். இவ்வசேதனமான சூட்சும சரீரம் பிதுராதி சப் தத்துக் கெப்படி யர்த்தமாகும்.

ச-கை. அப்படியேன் சொல்லவேண்டுமென்னில்,

உ-ம். சேதனம் ஆத்மா. அவ்வாத்மா ஆகாசத்தைப் போல வியாபகமாகையா லதற்கு லோகாந்தர கமனுக மனங் கூடாது; நிரவயவனுனபடியால், கர்மாதி சம்ஸ்கா ராதி யாசிரயத்வங்கூடாது. கர்மாதி சம்ஸ்காரத்துக் காசி ரயமாயிருந்து ஒன்றை யங்கீகரிக்காமற்போனுல் கிருதனு சாகிருதாப்பியா சமாதிதோஷம்வரும். ஆதலா லாத்மா வுக்குக் கர்மாதி சம்ஸ்காரத்துக் காசிரயமான சூட்சும சரீரமே லோகாந்தரத்திற்குப் போகிறதும் வருகிறதுமென் றங்கீகரிக்கவேண்டும்.

ச-கை. ஆனுல் சாகிறதும் பிறக்கிறதும் லோகாந்தரங் களுக்குப் போகிறதும் புண்ணிய பாவங்கள் செய்கிறதுஞ் சேதன தர்மமா யெப்படி தோற்றுகிறதென்னில்,

உ-ம். வியாபகமான வாத்மாவுக்குச் சூட்சுமசரீரப் பிரதான வவயவமான அந்தக்கரண பிரதிபிம்பத்துவாரா சூட்சும சரீரத்துடன் அத்தியாசம் வந்தபடியினுல், அக்

கினியுடன் கூடிய தாதாத்மியத்தினால் அயப்பிண்டம் எப்படி யக்கினிபோற்றோற்றுகின்றதோ, அப்படியே அந்தச் சூட்சும சரீரமுஞ் சேதனம்போற் றோற்றுகின்றது. இந்தச் சூட்சுமசரீர தாதான்மியத்தினால் தூலசரீரமு மோகத்தினாற் சேதனம்போற் றோற்றுகின்றது. ஆதலால் ஜனன மரணமுதலிய கர்மங்களும் தூலசூட்சும காரண சரீரங்களும் அந்தக்கரணத்தி லாத்மப்பிரதிபிம்பமும் அதிஷ்டான பூத சைதன்னியமுமாகிய விதுகளெல்லாங் கூடி மோகத்திற் பிதுராதி சப்தத்துக்குத் தூலசரீரமே யர்த்தமாகத் தோற்றுகின்றது. விசாரிக்கு மிடத்தில் இதுகளெல்லாம் அதற்கு வாசகமான சப்தத்தினாற் சொல்லப்பட்டது.

ஆகையால் இந்தப் பிதுராதிசப்தத்துக்கு இதற்கு ளொன்றாகிலு மர்த்தமாய்த் தோற்றப்படவில்லை. ஜனன மரணங்களு மிந்தத் தூல சரீரத்திற்கே பிரத்தியட்சமாய்க் காணப்படுகிறபடியினாலும், கமனாகமனாதிக் கிரியா ஆசிரயத்வம் பரிச்சின்னமாகிய வஸ்துவுக்கே பிரத்தியட்சமாய்க் காணப்படுகிறபடியினாலும், புண்ணியபாவக் கிரியையாதிகளென்கிற விகாராசிரயத்வமும் விகாரமாகிய வஸ்துவுக்கே சித்தித்திருக்கிறபடியினாலும் நிஷ்டுவென்பதே நித்தியனாய் வியாபகனாய் சைதன்னிய சொரூபனாகிய வாத்மாவுக்கு இப்படி சொன்ன தர்மங்களுள் ஒன்றாகிலு மில்லையென்று தோற்றுகின்றது. இப்படி சொச்சொரூபமாகிய வாத்மாவுக்கு மோகத்தினால்வந்த சீவத்வமும் லோகாந்தர கமனாகமனங்களும் பிதுராதி சப்த வாச்சியத்வமு மெதினிடத்தி லத்தியாசத்துவாரா வந்ததோ, அதுவே ஸ்தூல சரீர வெதிருத்தமான சூட்சுமசரீரமென் றறியப்பட்டது. மேலும் யுக்தியினாலுந் தூலசரீரத்திற்குச் சூட்சும சரீரம் அன்னியமென்றே தோற்றுகின்றது.

ச-கை. அந்தயுக்தியாவதேதென்னில்,

உ-ம். விசித்திராதிகளான நாலுவித வியாபாரங்களெதினுற் செய்யப்படுகின்றதோ, அதுவே சூட்சுமசரீரமென்று யூகித்தறிய வேண்டியது.

ச-கை. இவ்வியாபாரங்கள் தூலசரீரத்தினுற் செய்யப்படுகிறதென்று சொல்லலாமேயென்னில்,

உ-ம். அப்படியானுல் பிரேத சரீரத்தினுலுஞ் செய்ய வேண்டும். அங்ஙன மின்மையால் தூலத்துக் கன்னியமான சூட்சுமசரீரத்தினுலேயே செய்யப்படுகின்றது.

ச-கை. அப்படியேன் சொல்லவேண்டும்? ஆத்மாவே சகல காரியங்களுஞ் செய்கின்றதென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். ஆத்மா வியாபகனுயிருக்கிறபடியால் அது கூடாது. ஆகாசாதிகளிடத்தி லிருக்கப்பட்ட ஆத்மாவுங் கர்மங்கள் செய்ய வேண்டும்; அப்படி செய்யாதபடியினுல் அங்ஙனஞ் சொல்லப்படாது.

ச-கை. ஆகாசாதிகளிடத்திலிருக்கிற வாத்மா கர்மங்கள் செய்யாமற்போனுல் போகட்டும்; தூலசரீரத்துடன் கூடியிருக்கிற வாத்மா, கர்மங்கள் செய்கிறுனென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். பிரேதசரீரத்துடன் கூடியிருக்கிற வாத்மாவும் கர்மம் பண்ணவேண்டும். அங்ஙன மின்மையால் அப்படி சொல்லுவது கூடாது.

ச-கை. ஆத்மாவுடன் கூடியிருக்கிற தூலசரீரங் கர்மம் பண்ணுகிற தென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். வியாபகனுன வாத்மாவுடன் கூடியிருக்கிற பிரேதசரீரத்தினுலுங் கர்மம் பண்ணவேண்டும். அப்படி

இல்லாமையாலதுவுங் கூடாது. இந்தப் பிரகாரத்திற் கேவலந் தூலசரீரமுங் கர்மம் பண்ணுகிறது காணோம்; கேவலஞ் சத்ரூபனான வாத்மாவினாலுங் கர்மம் பண்ணுகிறது காணோம்; தூலசரீரத்துடன் கூடியிருக்கிற வாத்மாவினாலுங் கர்மம் பண்ணுகிறது காணோம்; மேலும் ஆத்மாவுடன் கூடியிருக்கிற தூலசரீரமுங் கர்மம் பண்ணுகிறது காணோம். இப்படி யிருந்தபோதிலும் விசித்திரமாய் நானாவிதமான கர்மங்கள் செய்கிறதாய்க் காணப்படுகின்றபடியால், இந்தக் கர்மங்க ளெதினாற் செய்யப்படுகின்றதோ அதுவே சூட்சுமசரீரம்.

சத்ரூபனாகிய வாத்மா வியாபகனும் நிரவயவனும் நிர்விகாரியும் அத்விதியனுமா யிருக்கிறபடியால், அவ்வாத்மா வொன்றுடனுங் கூடவுமில்லை; அவ்வாத்மாவுக்கு வெதிருத்தமாக வொருவஸ்துவு மில்லாதபடியினால் அவ்வாத்மாவுடன் ஒருவஸ்துவுங் கூடவில்லை. இதனாற் கர்மங்களெல்லாங் கர்த்துருசாபேட்சையா யிருக்கிற படியினால், ஆத்மா வொருகர்மமாகிலும் பண்ணாதபோதிலும் இந்த ஆத்மாவினிடத்தி லனாதிகற்பிதமான அவித்தையென்னு மஞ்ஞானத்தினாலேயே கற்பிக்கப்பட்ட அபஞ்சீகிருத பஞ்சமகா பூதத்துவாரா கற்பிதப்பட்டு ஆத்மாவினுடைய சத்தினாலேயே சத்துப்போற் றோற்றப்பட்ட சூட்சுமசரீரம் தூலசரீரத்துடன் கூடிக்கொண்டு சமஸ்தகர்மங்களையும் பண்ணுகின்றது.

ச-கை. ஆனால் இந்தச் சூட்சுமசரீரம் தூலசரீரத்தைப்போலேன் தோற்றவில்லை? மேலும் சூட்சுமசரீரந் தூலசரீரத்துடன் கூடிக்கொண்டு ஏன் கர்மம் பண்ணவேண்டும்? தூலசரீரத்துடன் கூடிச் சூட்சுமசரீரங் கர்மம் பண்ணாபோதிலும் அக் கர்மம் சூட்சும சரீரத்தினாலேயே செய்யப்படுகிறதென் றறிகிற தெப்படியென்னில்,

உ-ம். சூட்சுமசரீரஞ் சூட்சுமமானபடியினல் தூல சரீரம்போற் றோற்றவில்லை. உலகத்திலெங்கெந்தவஸ்துக்கள் கர்மத்துக்குக் கர்த்தாவாயிருக்கின்றதோ, அந்தந்த வஸ்துக்கள் ஒன்றை யாசிரயித்துக் கர்மத்தைச் செய்கிற தாகவும் அப்படி கர்மத்தைச் செய்தபோதிலும் எங்கெந்த வஸ்துவை யாசிரயித்துக்கொண்டு கர்மஞ்செய்கின்றதோ, அந்தக் கர்மமும் ஆசிரயத்தினலேயே செய்யப்பட்டதாகவு மக்கினியாதிகளிடத்திற் றோற்றப்படுகின்றது. அப்படியே சூட்சுமசரீரமுந் தூலசரீரத்தை யாசிரயித்துக்கொண்டு சகல கர்மங்களையும் பண்ணினபோதிலும் அவ் வாசிரய மான சூட்சுமசரீரத்தினுடைய கர்மமே சமஸ்தகர்மங்களு மாதலால் இந்தக் கர்மத்தின் வழியே தூலசரீரம்போற் சூட்சுமசரீரமென்றும், அஃது இந்தத் தூல சரீரத்துக் கன்னியமென்றும் விசாரிக்கப்பட்ட புருஷனுக்குத் தோற் றப்படுகின்றது. இதுவல்லாமலும் ;

என்கண், என்சுரோத்திரம், என்வாக்கு, என் பிரா ணன், என் அந்தக்கரணம், என்புத்தியென்கிற வனுபவத்தி னல், தூலசரீரத்துக் கன்னியமா யொரு சூட்சுமசரீர முந் தோற்றப்படுகின்றது. இப்படி காரியமான ஸ்தூல சூட்சுமசரீரத்தினல், இதுகளுக்குக் காரணமாய் ஆத்மா வுக்குச் சீவத்துவத்தினலும் ஈசுவரத்வத்தினலும் ஜகத் காரணத்தினலு முபாதியான வவயவர்களினல் அனிர்வ சன்னிய மென்றும் சுருதியாதிகளினற பிரகிருதியென்றும் மாயையென்றும் அவித்தை யென்றும் சொல்லப்படுகிற காரணசரீர மொன் றுண்டென்று சொல்லப்படுகின்றது. மேலும்,

நான் அஞ்ஞானி, நான் சடன், ஒன்றுமறியேனென் கிற வனுபவத்தினலுங் காரணசரீர மொன் றுன்டென்றுந் தோற்றப்படுகின்றது. இந்தப் பிரகாரத்தில் சமஸ்த பிராணி

களுக்கு மூன்று சரீர முண்டென்று நிச்சயிக்கப்படு கின்றது. இப்படியே யாத்மாவும் இம்மூன்று சரீரத்தையறி கிறவராகியும் இம் மூன்றுடன் கூடியிருந்த போதிலும் ஆகாசத்தைப்போல ஒன்றிலுங் கூடாமலுங் காலத்திரயத் திலு மிருக்கிறபடியால் சத்ரூபனாகவும் சமஷ்டி வியஷ்டி ரூபமாகிய சரீரத்திரய வாத்மகமான பிரபஞ்ச சுபாவ பதார்த்தங்களுக்குள் ஒரு பதார்த்தத்தினாலுந் தன்னை யறி யப்படாமல் சமஸ்த பதார்த்தங்களையுந் தானே யறியப்படு கிறபடியினால் சித்ரூபனாகவும் பரமப்பிரியம் ஆஸ்பதன்ன படியினால் ஆனந்தரூபனாகவுந் தோற்றுகின்றது. இப்படிப் பட்ட ஆத்மசொரூபமே நானென்று முமுட்சுக்களா லறி யத்தக்கது.

ச-கை. காரியமான சரீரத்திரயமுங் காரணமான பிருதிவியாதியும் பிரத்தியக்ஷமாய்த் தோற்றிக்கொண்டி ருக்கச் சுருதியாதிகளாற் சொல்லப்பட்ட அத்விதியத் வமும் பரிபூரணத்வமும் ஆத்மாவுக்கெப்படி கூடுமென் னில்,

உ-ம். சமஷ்டி வியஷ்டி யாத்மகமாகிய சரீரத்திரய மென்கிற பிரபஞ்சம் அவ் வாத்மாவினிடத்தி லாரோபிதமா யிருக்கிறபடியால், ரச்சுவினிடத்தி லாரோபிக்கப்பட்ட சர்ப்பாதிகளுக்கு ரச்சுமாத்திரமெப்படி சுவரூபமோ, அப் படிபோலவே ஆத்மாவினிடத்தி லாரோபிக்கப்பட்ட பிர பஞ்சத்திற்கு மாத்மாவே சுவரூபமன்றி வஸ்துவாதிகள் வேறில்லை. ஆதலா லாத்மாவினுடைய சத்தைப்போல வெதிருத்தமான சத்து பதார்த்த மிருந்து பிரதிபத்திய மில்லாதபடியினால், ஆத்மா அத்விதிய னென்பதிற் சந்தேக மில்லை. எப்போது ஆத்மாவுக்கு அத்விதியத்வஞ் சித்தித் ததோ, அப்போதே பரிபூரணத்வமுஞ் சித்தித்தது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஆத்மாவுக்குப் பிராந்தியினுற் பரிச்சேதம்போற் கண்டிதம்போற் ருேற்றப்பட்ட தேசகாலவஸ்துக்கள் ஆத்மாவுக் கன்னியமாயில்லாதபடியினுல் திரிவித பரிச்சேத சூனியத்வசொரூபமான பரிபூரணத்வஞ் சித்தித்தது. இப்படியே யாத்மா நானென் றெவ னறிகிருனே வவனுக்குக் காலத்திரயத்திலும் பிரபஞ்சமில்லை. ஆனுலும் பிராரத்த முள்ளமட்டு மிந்தத் தேகேந்திரியாதி பிரபஞ்ச மித்தையாபூதமாய்த் தோற்றலாம். அப்படி தோற்றினதினுல் சீவன் முத்திக்கு மித்தையாபூதமாய் ஆபாசரூபமாகிய சுக துக்கப் பிரீதிகளேதாவது விவேகித்தபிறகு தோற்றினுலும் வாதையில்லை.

ச-ங்கை மித்தையாவ தேதென்னில்,

உ-ம். ரச்சுசர்ப்பம்போல அதிஷ்டானஞ் ஞானத்தினுல் வாதிக்கப்படுகிறதும், சொப்பன மனோராச்சியம்போற் பார்த்துக் கொண்டிருக்கும்போதே நசித்துப்போகிறதும், கானற்சலத்தைப்போல் அனிர்வஜன்னியமும், கடாதிகளைப்போற் சத்தாரஹிதமுமாய்த் தோற்றுகிறதே மித்தையென்று சொல்லப்படும். இந்த மித்தையாத்மக லட்சணம் சமஷ்டி வியஷ்டியாத்மகமான தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்தி லிருக்கின்றது. ஆதலால் பரமார்த்த ஸ்வரூபரான வாத்மாவே பரதத்துவம். அன்றியும்,

ஆத்மாவையன்றிப் பேதம்போற் பிராந்தியினுல் தோற்றப்படுகிற ஜகத்து மித்தையென்கிறதிற் சந்தேகமில்லை. ஆதலா லெந்த வர்ணுசிரம தர்மங்களை யுடையவனுயிருந்தாலும் சாஸ்திரோக்தசாதன சம்பன்னனுகிப் பரமார்த்த அத்வைத பரிபூரண சச்சிதானந்த ஸ்வரூபமாகிய ஆத்மாவே நான்; என்னைவிட ஜகத்தில்லை; அதாவ ஜகத்து வெதிருத்தமாய்த் தோற்றினபோதிலும், சச விஷாணம்

போல மித்தையாபூதமான ஜகத்தினு லெனக்குப் பரிசமே யில்லையென்று சம்சயபாவனை விபரீத பாவனையின்றி அருளே திருமேனியாகிய ஆசாரியர் முன்னிலையி லெவனறி கிறானோ, அவனே சீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

சரீரத்திரய நிரூபகம்
முற்றிற்று.

---

பதினேழாவது
# தாபத்திரய நிரூபகம்.

சங்கை. தாபத்திரய சொரூபத்தை விசாரிக்கவேண்டு மென்று சுருதி யாதிகள் சொல்லுகின்றபடியினால் தாபத் திரயமாவ தேதென்னில்,

உத்தரம். ஆதியாத்மீகம், ஆதிபௌதீகம், ஆதிதெய் வீகமென மூன்றுவிதம்.

ச-கை. ஆதியாத்மீகமாவ தேதென்னில்,

உ-ம். சரீரத்தை யதிஷ்டித்துக்கொண்டு வரப்பட்ட க்ஷயரோகம், சீதசுரம், தாபசுரம், குன்மம், தலைநோய், அதிசாரம், வெப்பம், சூலை முதலான வியாதிகளும்; மக் கள், மிருகங்கள், பேய்கள், திருடர்கள், இராக்ஷதர்கள் முதலானவர்களா லுண்டாகின்ற துக்கங்களும் ஆதியாத் மீகமென்று சொல்லப்படும்.

ச-கை. ஆதிபௌதீகமாவ தேதென்னில்,

உ-ம். ஜலம், வெய்யில், மழை, காற்று, இடி, மின் னல், பனி, கோவில், கோபுரங்கள், பிரகாரங்கள், மண்ட

பங்கள், சுவர்கள் இது முதலிய வசேதனங்களா லுண்டா கப்பட்ட துக்கங்கள் ஆதிபௌதிகமென்று சொல்லப் படும்.

ச-கை, ஆதிதெய்வீகமாவ தேதென்னில்,

உ-ம். கருப்பந்தரித்தல், உண்டாதல், வளர்தல், நரை, திரை, அஞ்ஞானம், துர்மரணம், நாசம், ஜனனமுதலிய துக்கங்களை ஆதிதெய்வீகமென்று.சொல்லப்படும். இந்தத் தாபத்திரய துக்கஞ் சரீரத்திரயத்துக்கேயன்றிச் சாட்சி யாகிய வாத்மாவுக்கில்லை. இந்தப்படி தாபத்திரயங்க ளுடையசொரூபத்தை அருளே திருமேனியாகிய ஆசாரியர் முன்னிலையில் விசாரித்தறிந்து இந்தத் தாபத்திரயங்கள் தேகேந்திரியாதிகளுக் கல்லாமல் சாட்சியாகிய வெனக் கில்லையென்று சந்தேக விபரீதமறவெவ னறிகிறானோ வவனே சீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது.

ச-கை. ஆனால் சுருதியாதிகளில் தாபத்திரய காரணத் தையும் விசாரித் தறியவேண்டுமென்று சொல்லுகிறபடி யால் தாபத்திரய காரணமாவ தேதென்னில்,

உ-ம். ஆனா லதுவும் சொல்லுகிறோம் சுரோத்திரம் ஆதியாத்மீகம், சத்தம் ஆதிபூதம், ஆகாசம் ஆதிதெய் வீகம்; தொக்கு ஆதியாத்மீகம், பரிசம் ஆதிபூதம், வாயு ஆதிதெய்வீகம்; சட்சு ஆதியாத்மீகம், ரூபம் ஆதிபூதம், ஆதித்தன் ஆதிதெய்வீகம்; நாக்கு ஆதியாத்மீகம், ரசம் ஆதிபூதம், வருணன் ஆதிதெய்வீகம்; ஆக்கிராணம் ஆதி யாத்மீகம், கந்தம் ஆதிபூதம், அசுவனி ஆதிதெய்வீகம்; வாக்கு ஆதியாத்மீகம், வசனம் ஆதிபூதம், அக்கினி ஆதி தெய்வீகம்; பாணி ஆதியாத்மீகம், தானம் ஆதிபூதம், இந்திரன் ஆதிதெய்வீகம்; பாதம் ஆதியாத்மீகம், கமனம்

ஆதிபூதம், உபேந்திரன் ஆதிதெய்வீகம்; பாயுரு ஆதியாத்மீகம், விசர்க்கம் ஆதிபூதம், பிரசாபதி ஆதிதெய்வீகம்; மனம் ஆதியாத்மீகம், சங்கற்பம் ஆதிபூதம், சந்திரன் ஆதிதெய்வீகம்; புத்தி ஆதியாத்மீகம், நிச்சயம் ஆதிபூதம், சதுர்முகன் ஆதிதெய்வீகம்; அகங்காரம் ஆதியாத்மீகம், அபிமானம் ஆதிபூதம், உருத்திரன் ஆதிதெய்வீகம்; சித்தம் ஆதியாத்மீகம், தாரணை ஆதிபூதம், க்ஷேத்திரக்ஞன் ஆதிதெய்வீகம்; தமசு ஆதியாத்மீகம், விகாரம் ஆதிபூதம், ஈஸ்வரன் ஆதிதெய்வீகம். இதுகளெல்லாங்கூடிச் சாக்கிர சொப்பன சுழுத்தியாகிப் அவஸ்தாத்திரயங்க ளாயிற்று. இந்த அவஸ்தாத்திரயங்களுக்குச் சாட்சியாய் நித்தியனாய் நிர்விகாரனாய் ஆனந்த சுவரூபனாகிய வாத்மாவே நானென்று ஸ்ரீசற்குரு முன்னிலையில் விசாரித்து எவனறிகிறானோ வவனே கிருதார்த்தனென்று சுருதிஸ்மிருதி யிதிகாச புராணங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

தாபத்திரய நிரூபகம்.
முற்றிற்று.

---

பதினெட்டாவது

# பிரதிபந்தத்திரய நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளிற் பிரதிபந்தத்திரயமும் அதனிவர்த்தியும் விசாரித் தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியினால் பிரதிபந்தத் திரயமாவ தேதென்னில்,

உத்தரம். பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப் பிரதிபந்தம், ஆகாமியப் பிரதிபந்தமென மூன்றுவிதமாயிருக்கும்.

ச-கை. ஆனால் பூதப்பிரதிபந்தமாவ தேதென்னில்,

உ-ம். பெரிய குடும்பியாகிய வொரு பிராமணன் சீவனார்த்தமாய் ஒரு எருமையைச் சம்பாதித்து அவ் வெருமையினுடைய் பால், தயிர், நெய் முதலானதுகளை விற்பனைசெய்து, அதனால் அவன் புத்திரபாரியாதிகளை யிரட்சித்துக்கொண்டு அவ்வெருமைக்கும் வைக்கோல், தவிடு முதலானதுகளுங் கொடுத்துவருகிற வுபசாரங்களிற் குறைவில்லாமல் நடத்திக்கொண்டு வெகுநாள் தேகநிஷ்டனாய் சீவனம் பண்ணிக்கொண்டிருந்தான். இப்படி யிருக்குங் காலத்தில் கர்மவசத்தினால் அவன் புத்திரபாரியாதிகளும் எருமையும் இறந்துபோய், அந்தப் பிராமணனொருவனுமே யிறவாமல் தனித்திருந்து துக்காக்கிராந்தனாய் விசனப்பட்டு, ஐயோ! இந்தக் குடும்பம் சத்தியமென்றிருந்தோமே, சொப்பனம்போல் அசத்தியமாய் விட்டதே யென்று மகா வருத்தமடைந்து நாம் இனி யிந்தச் சமுசாரத்தி லிருக்கப்போகாதென்கிற விரக்தியுடன் சந்நியாசியாய் ஓர் ஆசிரியரிடத்திற்போய் சேர்ந்து, வேதாந்த சாஸ்திர சிரவணாதிகளைச் செய்தான்.

அவ்வாசிரியரும் இவனுக்குச் சொல்லவேண்டிய சாஸ்திரார்த்தங்களையெல்லா முபதேசித்து, அந்தச் சீடனை மாறாமல் ஒரு லட்சியத்தைச் சிந்தித்திருக்கும்படி வைத்திருந்தார். அவனும் அந்த லட்சியத்தை யிடைவிடாமலனுஷ்டித்துக்கொண்டே யிருந்தான்.

அங்ஙனமிருக்க ஒருநாள் அவ்வாசிரியர் அந்தச் சீடனை யழைத்து அப்பா, நீ இத்தனைநாளாய் சிந்தனையிற் பழகிவருகிறாயே; உன்னுடைய சித்தம் நிருமலமாச்சுதா? கிருதகிருத்தியனாய் விளங்குகின்றாயா? சுவானுபவத்தில் இன்னங் கர்த்தவிய முண்டாயிருப்பதாய்த் தோற்றப்படு

கிறதாவென்று வினவ, அந்தச்சீடன் அவ்வாசிரியருக்கு நமஸ்காராதிகள்செய்து, சுவாமீ, எனக்கு வேறொன்றுந் தோற்றப்படவில்லை, பூர்வ ஆசிரமத்தி லெனக்கொரு எருமைஉண்டு; அவ்வெருமை அப்போதே யிறந்துவிட்டது. அவ்வெருமைமாத்திரந்தான் சார்வதா முன்னிட்டுச் சாட்சாத்காரமாய் நிற்கின்றதேயன்றி வேறொன்றுங் காணே னென்று தன்னுடைய நிசானுபவத்தை மறைக்காமல் யதார்த்தமாகச் சொன்னான். அதுகேட்ட வாசிரியர் இது பூதப்பிரதிபந்தமென்று மவுனமாயிருந்தார்.

ச-கை. ஆனா லந்தப் பிரதிபந்தத்திற்கு நிவிர்த்தி யெப்படி யென்னில்,

உ-ம். பிற்பாடு அவ் வாசிரியர் அந்தப் பிரதிபந்த நிவிர்த்தி யாகும்பொருட்டு, அவ்வெருமையினிடத் திருக்கப்பட்ட பிரிய வாஞ்சையை யனுசரித்து, அந்தச் சீடனுக்குத் தத்துவ வுபதேசஞ்செய்து அம் மோகத்தைக் கெடுத்து கிருதகிருத்தியனாகச் செய்தருளினார்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். அந்தச் சாக்ஷாத்காரமான வெருமையே அஸ்திபாதிப்பிரிய நாமரூபமாகிய வைந்தவயங்களுடன் கூடியிருக்கிற தென்றும், அவற்றுள் நாமரூப மிரண்டையுந் தள்ளி, அஸ்திபாதிப் பிரியமாத்திரமே உனது சொரூபமென்று சிந்தித்திருவென்றும், கிருபையினால் அனுக்கிரகஞ் செய்தருளினார். அதுமுதல் அவனு மப்படியே யிடைவிடாமற் சிந்தித்துச் சிலநாளில் நாமரூபமாகிய அந்தப் பூதப்பிரதிபந்தநீங்கிச் சச்சிதானந்த ஸ்வரூபமாகிய ஆத்மாவே தானென்று சாக்ஷாத்கார சுவானுபவம் பெற்றுக் கிருதார்த்த னாயினனென்று இந்தக் கதை யுலகத்தில் வழங்கிவருகின்றது. அல்லாமலும் வித்தியாரண்ய

சுவாமிகளும் பஞ்சதசப்பிரகரணத்தில் நிருபித்திருக்கின்ற படியினாலும் இதுவே பூதப்பிரதிபந்த விவகாரமும் அதனிவிர்த்தியுமென் றறியத்தக்கது.

ச-கை. ஆனு லினி வர்த்தமானப் பிரதிபந்தமாவ தேதென்னில்,

உ-ம். விஷயாசத்தி, பிரக்ஞாமாந்தம், குதர்க்கம், விபரீத துராகிருதம் என்று நான்குவிதமாயிருக்கும்.

ச-கை. விஷயாசத்தி லட்சண மேதென்னில்,

உ-ம். சமஸ்த விஷயங்களிலும் ரூடமான ஆசத்தி யுண்டாயிருக்கிறது.

ச-கை. பிரக்ஞாமாந்தமாவ தேதென்னில்,

உ-ம். ஒருவர்சொன்ன அர்த்தம் புத்தியிற் பதியாமலிருக்கிறது.

ச-கை. குதர்க்கமாவ தேதென்னில்,

உ-ம். ஆசிரியர்சொன்ன அர்த்தத்திற்கு விபரீத அர்த்தஞ் சொல்வது.

ச-கை. விபரீத துராகிருதமாவ தேதென்னில்,

உ-ம். நான் பண்டிதன், நான் வித்துவான், நான் விரத்தன், நான் சந்நியாசி, நான் சடையையுடையவன், நான் காஷாயந்தரித்தவன், நான் தபசியென்று தேகேந்திரியாதிகளிடத்தில் ஆத்மபுத்தி பண்ணுகிறது. இதுவே வர்த்தமானப் பிரதிபந்தமென்று சொல்லப்படும்.

ச-கை. இதுகளுக்கு நிவிர்த்தி யெப்படியென்னில்,

உ-ம். சமை, தமை, யுபரதி, திதீட்சைகளினால் விஷயாசத்தியும், சிரவணத்தினால் பிரக்ஞாமாந்தமும், மனனத்தினால் குதர்க்கமும், நிதித்தியாசனத்தினால் துராகிருத விப

ரீதமும் நீங்கிவிடும். இந்தப்படி பிரதிபந்தம் நாசப்படு மானல் முமூட்சுக்களுக்குத் தானே யாத்மசொரூபமென் கிற திடபுத்தி யெளிதில்வரும்.

ச-கை. ஆகாமியப் பிரதிபந்தமாவ தேதென்னில்,

உ-ம். எந்தவேளையி லெந்தக்கன்மம்வருமோ வென் பது தெரியாது. அது புண்ணியபாவ மிசிரகன்மத்தினுலேயே வருகின்றது. அங்ஙன மிருக்க இந்தவேளையி லிது வர வேண்டுமென்றும், இது வருமல்லவாவென்றும், இது வர லாகாதென்றும் ரூடமனதாய்ச் சிந்தித்துக்கொண்டிருப் பதே யாகாமியப் பிரதிபந்தமென் றறியத்தக்கது.

ச-கை. இதற்கு நிவிர்த்தி யெப்படியென்னில்,

உ-ம். உபஸ்திதமான பாவகர்மமும், முமூட்சுக் களுக்கு விஷயத்தினிடத்தில் ரூடமாய் தயாரூபமாகிய ஆசத்திபிறப்பிக்கு மென்றும், தேகத்திற்கு நடக்கவேண் டிய பொசிப்பு ஏற்றக்குறைச்ச லில்லாமற் சுதசித்தமாய் நடக்குமென்றுங் குருவாக்கியத்தினுற் றெளிந்திருக்கிறபடி மேல்வருங் காரியத்தை நாடவேண்டியதேயில்லை. ரூடமான மனதாய்நாட்டம் வைத்தாலதுவே பாகியப் பிரதிபந்த மென்று சொல்லப்படும். முமூட்சுவானவர்கள் அந்த ஆசத் தியை யாகாமியப் பிரதிபந்தமென்றறியாமல், அகர்த்தா வாய் அசங்கனுகிய வென்னை இந்த வாசத்தி யென்ன செய்யப்போகிறதென்று சட்டை பண்ணு மலிருந்தார் களேயானல், அது அவர்களுக்குச் சிறிது ஜன்மங்களைக் கொடாமற்போகாது

ச-கை. ஆகாமியப்பிரதிபந்தஞ் ஜனனங்கொடுக்கு மென் றெங்கே சொல்லப்படுகிறதென்னில்,

உ-ம். சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணங்களிற் சொல்லப்படுகின்றது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். வாமதேவருக்கொரு ஜன்மங்கொடுத்ததென்றும், ஜடபரதருக்கு மூன்றுஜன்மங் கொடுத்ததென்றும், இன்னஞ்சிறிதுபேர்களுக் கனேகஞ் ஜன்மங்களைக் கொடுத்ததென்றுஞ் சொல்லப்படுகின்றது. ஆதலால் ஸ்ரீசற்குருவானவர்கள் சிஷனுக்குப் பாகியத்திலும் அந்தக்கரணத்திலு மிருக்கிற பூர்வ பழக்கமாகிய அஞ்ஞானங்களை நன்றாய் விமரிசையாய் நினைவிலிருக்கவொட்டாமல் அதின் மலினங்களையும் சொரூபத்தையும் பல திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களினால் போதமாகும்படி யெடுத்தறிவித்து, அவனைப் பிரதிபந்தத்திலொட்டாமற் பண்ணுவார்கள். ஆதலாலிந்தப்படி முமூட்சுக்களானவர்கள் ஸ்ரீசற்குருமுகமாய்ப் பிரதிபந்தங்களை நன்றாய் விசாரித்து அதுகள் தங்களையனுசரிக்கவொட்டாமற் றள்ளவேண்டும் அப்படி தள்ளாவிட்டால் அவர்களுக்குச் சிறிது ஜன்மங்கள் வருமென்பதிற் சந்தேகமில்லை. இந்தப பிரதிபந்தத்திரயம் எந்தச் சென்மத்தி லெவனுக்கு நசித்துப்போகின்றதோ அவனுக்கே அந்த ஜன்மத்தில் முத்தி. இந்தப்பிரதிபந்தங்களிலொன்றாகிலு மிருந்தா லந்தச் சென்மத்தில் முத்தியில்லையென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சமசயமில்லை சித்தம்.

பிரதிபந்தத்திரய நிரூபகம்.
முற்றிற்று.

---

பத்தொன்பதாவது

# நவவிதசமுசார நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளில் நவவித சமுசாரங்களை விசாரித்தறிய வேண்டுமென்று சொல்லுகிறபடியால் நவவித சமுசாரமாவ தேதென்னில்,

உத்தரம். ஞாதுரு, ஞான, ஞேயம், போக்தா, போக்கிய, போகம், கர்த்தா, கர்ம, கிரியையென்றொரு பக்ஷஞ் சொல்லுவார்கள்.

ச-கை. ஆனால் பட்சாந்தரமாவ தேதென்னில்,

உ-ம். பஞ்சமகா பூதங்கள், ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள், பிராணாதிபஞ்சகம், அந்தக்கரணசதுஷ்டயம், தூலசரீரம், அவஸ்தாத்திரயம், இதுகளுக்குக் காரணமாகிய அஞ்ஞானம் இதுகளையே நவவித சமுசாரமென்றும், நவவிதப் பிரபஞ்சமென்றுஞ் சொல்லுவார்கள். இந்த நவவிதசமுசாரமும் பிராந்தியினால் வந்தது. இவை அகங்காரத்திற்கே யன்றிச் சாட்சியாகிய வெனக் கில்லை யென்றும்; ஞானேந்திரியம், கன்மேந்திரியம், மனாதிசதுஷ்டயம், பிராணாதிபஞ்சகம், விஷயாதி பஞ்சகம், காமம், கர்மம், அஞ்ஞானம் இதுகளே புரியட்டக சரீரமென்றும் ஸ்ரீசற்குரு முன்னிலையி லெவன் சம்சய விபரீத மில்லாமல் விசாரித் தறிகிறானோ, அவனே சீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

நவவிதசமுசார நிருபகம்
முற்றிற்று.

---

இருபதாவது

## வயிராக்கியாதி நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளில் வயிராக்கிய வுபரதிஞானங்களையும் அவற்றின் தன்மைகளையும் விசாரித்தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியினால் அந்த வயிராக்கியாதிகள் எவர்களிடத்தி லிருக்குமென்னில்,

உத்தரம். இம்மூன்றும் விவேகிகளிடத்திற் கூடியிருக்கும்; கன்மவசனத்தினு லில்லாதிருந்தாலு மிருக்கும்.

ச-கை. அவற்றின் தன்மைகளாவ தேதென்னில்,

உ-ம். ஏது, சொரூபம், காரியம், அவதி, பலம் இவ்வைந்தும் அவற்றின் தன்மைகளென்று சொல்லப்படும்.

ச-கை. ஆனல் வயிராக்கியத்திற்கு ஏதுவாவ தேதென்னில்,

உ-ம். சமஸ்த விஷயத்திலுந் தோஷதிருஷ்டி யுண்டாகின்றது.

ச-கை. சொரூபமாவ தேதென்னில்,

உ-ம். தேககாரண வெதிருத்தமான விஷயங்கள் வந்தாலும் அந்த விஷயத்தில் தோஷம் பிறந்து கக்கினசாதத்தைப்போற் காண்பது.

ச-கை. காரியமாவ தேதென்னில்,

உ-ம். அந்த விஷயங்களைப் புசிக்காம லேன் தள்ளிவிட்டோமென்று திரும்பவும் நினையாதிருக்கின்றது.

ச-கை. அவதியாவ தேதென்னில்,

உ-ம். பிரமலோகாதி பரியந்தந் திரணீகரிக்கப்படுவது.

ச-கை. பலமாவ தேதென்னில்,

உ-ம். பிரமலோகம்.

ச-கை. ஆனு லுபரதிக்கேதுவாவ தேதென்னில்,

உ-ம். இயம நியமாதி யஷ்டாங்க யோகங்கள்.

ச-கை. சொரூபமாவ தேதென்னில்,

உ-ம். சித்த நிரோத முண்டாவது.

ச-கை. காரியமாவ தேதென்னில்,

உ-ம். சர்வவிகாரங்களுமற் றிருப்பது.

ச-கை. அவதியாவ தேதென்னில்,

உ-ம். சுழுத்தியைப்போற் சாக்கிரத்திலுஞ் சமஸ்த விஷயங்களையு மறந்திருப்பது.

ச-கை. பலமாவ தேதென்னில்,

உ-ம். பிரமலோகம்.

ச-கை. ஞானத்திற்கு ஏதுவாவ தேதென்னில்,

உ-ம். சிரவணமனன நிதித்தியாசனம்.

ச-கை. சொரூபமாவ தேதென்னில்,

உ-ம். அந்தச் சிரவணாதிகளினால் தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்தினிடத்தி லாத்மசொரூபத்தைப் பிறித்து அந்த அத்விதியவாத்ம சொரூபமே தானென்றும், இந்தத் தேகாதிப் பிரபஞ்சம் நானல்லவென்றும், இந்தப் பிரபஞ்சங்கள் தோற்றினபோதிலும் காலத்திரயத்திலு மில்லையென்றும் புத்தியிற் றிடநிச்சயம் வருவதற்குச் சற்குருமுகமாய் அனாதியிற் பிராந்தி விவேகத்தினிடமாய் தோற்றின விதமும் எப்போதும் பிரபஞ்சமில்லாத விதத்துக்குப் பிராந்தி நிவிர்த்தியு மறிந்ததே சொரூபமென்று சொல்லப்படும்.

ச-கை. காரியமாவ தேதென்னில்,

உ-ம். இவ் வனாத்ம சொரூபமான வகங்காரக் கிரந்தி முதல் காரிய தேகேந்திரியாதிகளும் மறுபடியும் நினைவில் வராதிருப்பது.

ச-கை. அவதியாவ தேதென்னில்,

உ-ம். அஞ்ஞானகாலத்தில் தேகம் நானென்று உரப்பு வந்ததுபோல் பிரமசொரூபமே நானென்று திடநிச்சயம் வருகிறது.

ச-கை. பலமாவ தேதென்னில்,

உ-ம். உபாதி ரகிதமான மோட்சமே பலம். இந்தப்படி ஒவ்வொன்றுக் கைந்து தன்மைகளும் அன்னியோன்னிய சகங் காரியமில்லாத பிரகாரஞ் சொல்லப்படும்.

ச-கை. இந்த வயிராக்கியாதிகள் மூன்றும் மோட்சத்திற் கேதுவோ? அல்லது இரண்டு ஏதுவோ? அல்லது ஒன்றேதுவோ வென்னில்,

உ-ம். சாதனாந்தரத்தை யபேட்சியாமல் பிரத்தியட்ச மோட்சம் வருகிறபடியால் ஞானமொன்றுமே பிரதானம். வயிராக்கிய வுபரதியிரண்டும் ஞானத்திற்குச் சாதனம். இந்த மூன்று மொரு புருடனிடத்தி லிருந்தால் மகா தபோபலமாகும். அல்லது ஒருவனிடத்திற் கன்மத்துக் கீடாயொன் றிருந்தாலு மிருக்கும்; இரண்டிருந்தாலு மிருக்கும். சுத்தமா யிரண்டுமில்லாமற் போனாலும் போம். ஒருவனுக்கு வயிராக்கிய வுபரதி யிரண்டும் பூரணமா யிருந்து ஞானமொன் றில்லாமற் போனாலவனுக்கு மோக்ஷ மில்லை.

ச-கை. ஆனால் வயிராக்கியவுரபதி வியர்த்தமாய்ப் போமோ எனில்,

உ-ம். போகாது.

ச-கை. பின்னை யெப்படியென்னில்,

உ-ம். வயிராக்கிய வுபரதிகள் தபசாகியபடியினால் அதனாற் புண்ணியலோகங்கள் கிடைக்கும். ஒருவனுக்கு ஞானம் பூரணமாயிருந்து வயிராக்கிய வுபரதிக ளில்லாமற் போனாலும் அவனுக்கு மோக்ஷம்வருமென்பதிற் சந்தேக மில்லை.

ச-கை. இவ் வயிராக்கியவுபரதிகளாற் பிரயோசன மென்னவெனில்,

உ-ம். அதுக ளில்லாவிட்டாற் பிரத்தியட்சதுக்கம் போகாது. இதுவே ஞானவயிராக்கிய வுபரதிகளின் தாரதன்மியமென்றறியத்தக்கது. பிராரத்த நானாவிதமான படியினால் ஞானிகளுடைய விவகாரமும் நானாவிதமாயிருக்கும். விவேகிகள் ஞானிகளது விவகாரத்தைப்பார்த்துச் சாஸ்திர மொருவிதமாய்ச் சொல்லியிருக்க இவர்கள் நடை பேதப்படலாமாவென்று பிரமிக்கவேண்டியதில்லை. அவரவர்கள் கன்மத்தினாலவரவர்கள் நானாவித வியாபாரத்துடன் கூடியிருந்தபோதிலும் ஞானமும் ஞானபலமான மோக்ஷமும் பேதமே யில்லை யென்று ஸ்ரீசற்குருவினாற் றெளிந்து நானே சுயம்பிரகாசப் பிரமசொரூபமென் றெவனறிகிறானோ வவனே சீவன்முத்தனும், அதிவர்ணாசிரமியுமென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

வயிராக்கியாதி நிரூபகம்
முற்றிற்று.

---

இருபத்தோராவது

## வாசனாத்திரய நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளில் ஞானத்திற்குப் பிரதிபந்தமான வாசனாத்திரயங்களை விசாரித் தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியினால் வாசனாத்திரயமாவ தேதென்னில்,

உத்தரம். லோகவாசனை, தேகவாசனை, சாஸ்திர வாசனை என் மூன்று விதம்.

ச-கை. லோகவாசனையாவ தேதென்னில்,

உ-ம். உலகத்தில் சமஸ்தமானபேர்களுந் தன்னை நிந்திக்காமலிருக்கவேண்டும்; சார்வதா தன்னையே தோத்திரம்

பண்ணவேண்டும் என்று அபிமான பூர்வகமாய்த் தோற்று கின்றதே யுலகவாசனையென்று சொல்லப்படும்.

ச-கை. ஆனா லிந்தப் பிரதிபந்தத்திற்கு நிவிர்த்தி யெப்படி யெனில்,

உ-ம். தன்னை ஒருவராலும் நிந்திக்கப்படாம லிருக்க வேண்டும்; தன்னை யெல்லாரும் புகழவேண்டும் என்கிறது ஈஸ்வராதிகளுக்கும் அசாத்தியமான பிரயத்தினமா யிருக் கிறபடியினால், அஞ்ஞானிகளானவர்கள் ஒருபோது நிந்திப் பார்கள்; ஒருபோது ஸ்தோத்திரமும் பண்ணுவார்கள். அத னால் தனக்கு ஹானியேது? லாபமேது? என்று விசாரித் தறிவதே அந்தப் பிரதிபந்தத்துக்கு நிவிர்த்தியாகும்.

ச-கை. ஆனா லீஸ்வரனை நிந்திக்கிறவர்க ளுண்டா வென்னில்,

உ-ம். உண்டு. சர்வலோகேஸ்வரனான சதுர்முகப் பிரமா சிவனாலுங் குமாரசுவாமியினாலுந் தண்டிக்கப்பட்டா னென்றும் நமது சிவன் நமது குமாரசுவாமியென் றபிமான முடையவர்களாய்ப் பிரமதேவன் மகிமையறியாமல் சிவ பாஷாண்டிகளும் வைணவ வைஷாண்டிகளும் நிந்திக்கிறார் கள்; இதுவல்லாமல் சமஸ்தமானபேர்களும் ஞானசற் குருவாய் ஸ்தோத்திரஞ்செய்யப்பட்ட மகாதேவரும் தட்சப் பிரஜாபதி முதலானவர்களால் நிந்திக்கப்பட்டாரென் றெண்ணி அவர் மகிமை யறியாமல் வைணவ வைஷாண்டி கள் முதலியோர்களும் நிந்திக்கின்றார்கள். நிரீஸ்வர சாங்கி யருஞ் சில மீமாம்சரும் அந்தரியாமி யில்லையென்று நிந் திக்கிறார்கள். இராமகிருஷ்ணாதிகளும் சிசுபால தந்தவக் திராதிகளால் நிந்திக்கப்பட்டார்களென்று புராணாதிகளிற் சொல்லப்படுகின்றது. ஆதலால் பாமரராகிய பகிர்முக மான பிரஜைகள் நம்மை நிந்திப்பார்களென்பதிற் சந்தேக மில்லை.

ச-கை. ஆனால் அந்த நிந்தையாருக்கென்னில்,

உ-ம். அத்விதியப் பிரமசொரூப பரிபூரண வாத்மாவை யெவர்களாலும் நிந்தைபண்ணக்கூடாது.

ச-கை. ஏன் கூடாதென்னில்,

உ-ம். அவ்வாத்மா சர்வப்பிராணிகளுக்குஞ் சொரூபமான படியினால் தன்னைத்தானே நிந்தித்துக்கொண்டதாகும்.

ச-கை. ஆனு லாகட்டுமேயென்னில்.

உம். உலகத்தில் அன்னியன் அன்னியனை நிந்திக்கக் கண்டோமன்றி ஒருவன் தன்சொரூபத்தைத் தானே நிந்திக்கவில்லை. அப்படி நிந்தித்தால் தனக்கு லாபமேயன்றி ஆனியில்லை.

ச-கை. ஆனால் தேகத்தை நிந்தித்தானென்று சொல்லுவோமே எனில்,

உ-ம். அந்தத்தேகம் முமூட்சுக்களால் பூர்வமே நிந்திக்கப்பட்டபடியினால், அதைப் பிறர் நிந்திப்பார்களாகில், அந்த நிந்தை முமூட்சுக்களுக்கு லாபமேயன்றி அஃதும் ஆனியல்ல.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஒருவனுடைய சத்துருவை அன்னியர் நிந்தித்தால் அப்படி நிந்தித்தவன் அவனுக்கெப்படி பிரியனோ, அப்படியே விவேகியானவர்கள் தன்தேகத்தை நிந்தித்தவர்களைத் தனக்குப் பிரியனென்றே காண்பார்கள். மேலும் இம் மூன்று சரீரத்தினுள் தூலசரீரமே நிந்திக்கப்படுகின்றது. மற்ற இரண்டும் திரிசிய மல்லாதபடியினால் நிந்தைக்கு விஷயமல்ல. இந்தச்சரீரமே நிந்தைக்கு விஷயமல்லாமற் போனபடியினால் சர்வாதீதமாய் சமஸ்தமான பேர்களுக்கு மாத்ம சொரூபமாய் சாட்சிசொப்பிரகாச

சொரூபனாகிய நம்மை எந்த நிந்தையும் பரிசிக்கவில்லை யென்பது சொல்லவேண்டுமோ வென்று விசாரித்தறிகிற விவேகிகளுக்கு லோகவாசனையாகிய பிரதிபந்தம் நசித்துப் போம். பிரபஞ்சாதீதமாய்ப் பரமானந்த சொரூபமா யிருக் கப்பட்ட நமக்கு உலகத்தில் வரும் நிந்தாஸ்துதிகளால் பிரயோசனமில்லையென்று அபிமான ரகிதமாயிருக்கிற விவேகிகளுக்குச் சந்தோஷதுக்கமான விகாரங்களும் நசித் துப்போமென்பதிற் சந்தேகமில்லை.

ச-கை. ஆனால் தேகவாசனையாவ தேதென்னில்,

உ-ம். ஆயசு, ஆரோக்கியம், அழகு சம்பாதிக்க வேண்டுமென்று வருகிற வபிமானமே தேகவாசனையென்று சொல்லப்படும்.

ச-கை. ஆயசாவ தேதென்னில்,

உ-ம். சீவித்திருக்கிற சரீரந் திரமாகவிருக்கவேண்டு மென்று கோருகிறது. அந்தத் தேகஸ்திதியுங் கர்மாதீன மாகையினால் புருஷயத்தினத்தினாற் சம்பாதிக்கக்கூடாது.

ச-கை. அப்படி சொன்னால் சிலர் யோகாப்பியாசம் பண்ணித் தீர்க்ககாலமாகிய ஆயசு சம்பாதிக்கிறார்களென்று புராணாதிகளிற் சொல்லுகின்றதே யென்னில்,

உ-ம். அந்த யோகாப்பியாசம் அனாத்மவிஷயமான படியினால் ஞானம் வராமற்பண்ணும். ஆதலால் தேகம் வெகுகாலமிருக்க வேண்டு மென்பதில் பிரயத்தினஞ் செய்ய வேண்டியதில்லை யென்று முமூட்சுக்களுபேட்சிக் கத்தக்கது. இந்தக் கருத்தே சுருதி ஸ்மிருதி புராணாதி களிற் சொல்லப்படுகின்றது. இப்படியே புருஷரா லாரோக் கியமுஞ் சம்பாதிக்கக்கூடாது.

ச-கை. அதெப்படி யென்னில்,

உ-ம். ஆரோக்கியமுங் கர்மாதீனமாகையால் அது புருஷயத்தினத்திறைற் சித்திக்காது. சித்தித்தபோதிலும் முமுட்சுவுக்கு அதனால் இலாபமேது? ஆனியேது? அவ்வாரோக்கியசித்தியினு லுண்டான சந்தோஷவிகாரமும், சித்திக்காமையினாலுண்டான துக்க விகாரமும் அந்தக்கரணத்திற்கே, அதற்குச் சாட்சியாகிய நமக்கு இவ் விகாரங்களில்லையென்று விசாரித்தறிந்து, அவ்வாரோக்கியசித்தியிலபிமானிக்காமல் விட்டுவிடவேண்டியது. மேலும் அழகாயிருக்கப்பட்ட புருஷருங் காலாந்தரத்திற் குரூபியாகக் கண்டோம்; ஆதலா லழகுவரவேண்டுமென்று நாம் பிரயத்தினம் பண்ணுபோதிலும் வியர்த்தமாய்ப்போனதுங் கண்டோம். அழகு சம்பாதிக்கவேண்டுமென்று வருகிற அபிமானமும் சமஸ்தமான பரமார்த்தத்துக்கும் லௌகிக பிரவிர்த்தி விகாதமாயிருந்து அனர்த்த பரம்பரை யுண்டாக்குமாகையினால் அழகு சம்பாதிக்கவேண்டுமென்னு மபிமானமும் முமூட்சுக்கள் வர்ச்சிக்கத்தக்கது.

ச-கை. ஆனால் சாஸ்திரவாசனையாவ தேதென்னில்,

உ-ம். சாஸ்திரபாடத்திலும், சாஸ்திரார்த்த ஞானத்திலும், சாஸ்திரானுஷ்டானத்திலும் விதனமுண்டாயிருப்பதே சாஸ்திரவாசனை. இதனால் தன் னுண்மையாகிய வாத்மவிகாரஞ் சம்பாதிக்கக்கூடாது. அந்த விதனம் சாஸ்திர விஷயமான வாசனுசொரூபப் பிரதிபந்தமென்றே சொல்லப்படும்.

ச-கை. மோக்ஷசாதன வேதுவாகப்பட்டதைப் பிரதிபந்தமென்று சொல்லுவ தெப்படியென்னில்,

உ-ம். பரத்துவாசர், நாரதர் முதலானவர்கள் வேத சாஸ்திரங்களை யாதிபந்தமாயறிந்து அப்பியாசிக்க வாரம்பித்து- வெகு துக்கங்களை யடைந்து அசாத்தியமென்று விட்டுவிட்டார்களென்று சுருதியாதிகளிற் கண்டிருப்ப

தாலும் வேதாந்த விருத்தமான அன்னியசாஸ்திராப் பியாசம் ஆத்மவிசாரத்திற்கு விரோதமாகையினாலும் பிரதிபந்தமென்று சொல்லப்படும். ஆதலால் சாஸ்திரபாடமுஞ் சாஸ்திரார்த்தஞானமும் சாஸ்திரானுஷ்டானமும், ஆதியந்தமாகச் சம்பாதிக்கக்கூடாது. ஆகையால் முமூட்சுக்கள் சாஸ்திரார்த்தங்களை ஆதியந்தமாய் விசாரிக்க வேண்டுமென்கிற அபிமானத்தை விடத்தக்கது.

உலகத்தில் சாஸ்திராப்பியாசம் பண்ணினவனுக்குப் பூர்வங் கற்றுப் பிற்பாடு மறந்துபோகிறபடியினால் துக்கமே தோற்றுகின்றது. தான் பிறருடனே வாதுசெய்து செயித்தபோதுந் துக்கமே தோற்றுகின்றது. ஆதலால் அன்னிய சாஸ்திராப்பியாசம் சார்வதா அனர்த்த ஏதுவானபடியினால் முமூட்சுக்கள் விடத்தக்கது. இந்தப்படி வேதாந்த சாஸ்திராப்பியாசம்பண்ணி யனுபவஞ் சம்பாதித்தபிறகு வேதாந்த சாஸ்திரத்திலு முபரதி வருமானால் அந்தச் சாஸ்திரவிஷய வாசனைப் பிரதிபந்தமும் நசித்துப் போமென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

வாசனாத்திரய நிரூபகம்
முற்றிற்று.

---

இருபத்திரண்டாவது

# ஆசுரவாசனைப்பிரதிபந்த நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளில் ஆசுரவாசனைப் பிரதிபந்தம் விசாரித்தறிய வேண்டுமென்று சொல்லுகிறபடியினால்; அஃதேதென்னில்,

உத்தரம். அது தன்னிடத்தில் இல்லாததாய்த் தோற்றினபோதிலும் ஒவ்வொரு சமயத்திற் பிறருடைய ஆசாரத்தைப் பார்த்தபிறகு ஆட்சேபாதிகளா லுண்டாகும். அதுவே யாசுரவாசனைப் பிரதிபந்தமென்று சொல்லப்படும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். அடா பிரஷ்டா! ஆசாரமிப்படியா பண்ணுகிறது? நீ பிரஷ்டனாய்ப்போனாய், சந்தேகமில்லை. அடா வுனக்குபதேசம் பண்ணி யாசாரஞ் சொன்ன குருவாரோ? அவனும் பிரஷ்டனென்பதிற் சந்தேகமில்லை. அடா நாளை முதல் நீ நம்மிடத்துக்கு வரவேண்டாம். நீ எழுந்து போடா. இல்லாவிட்டால் நமது பாததீர்த்தம் வாங்கிக் கொண்டு பிழைத்துப் போடாவென்று சொல்லிப் பின்னையுந் தன்னின்பத்தைக் குறித்து அடா நீ நமக்குச் சிசுருஷை செய்வதைப் பார்க்கிலும் வேதாந்த விசாரத்திலென்னபலனிருக்கின்றது? நம்மை யுபாசனை பண்ணினாலுனக்குத் தர்மார்த்தகாமிய மோட்சமும் சகல அயிஸ்வரியாபீஷ்டமுஞ் சித்திக்கும் ஆதலால் நீ இதுமுதனம்மையன்றி யாருக்குஞ் சிசுருஷை பண்ணவேண்டாம்; ஒருவரிடத்திலும் போகவேண்டாம்; போனாலவர்களை நீ நமஸ்கரிக்கவேண்டாம். அவர்களே உன்னை முன்பாக நமஸ்கரித்தால் பிறகு நீ நமஸ்காரஞ் செய்யென்று பலவாகச் சொல்லிப் பின்னும் ஒருவரிடத்திற் போனால், தனது மர்மம் வெளியாய் விடுமென்று நினைத்து, அப்பா, நீ மற்றொரு பெரியவாளிடத்திற்போய் பேசினாலும் அவர்களை வணங்கினாலும் பிறகு நீ நம்முடைய சந்நிதானத்தில் வரக்கூடாது. இப்படியே ஒருவன் வெகுநாளாய் நம்மையடுத்தவனாயிருந்து பின்பு சட்டைபண்ணாமல் நம்மைக் கண்டெழுந்திராதிருந்தான்; நாம் அதுகண்டு, உனக்காயசு இந்தமட்டுந் தானென்று சபித்தோம். அவனப்படியே யிறந்துபோனான்.

பின்னும் நம்மையறிந்த ஒருவன் ஐசுவரிய கர்வத்தி ஞல் நம்மைப் பராமரிக்காமற் போனன். அவனுக்கும் ஐசுவரிய மிந்தமட்டுந்தானென்று சபித்தோம். அவனுந் தரித்திரனுகியிருக்கிறுன். ஒருவனை நீ நம்மிடத்தில் உப தேசம் பெற்றுக்கொண்டும் நம்மை மதியாமலிருக்கிற படியினல் நீ பஸ்பமாய்ப் போவென்று சபித்தோம். அவனு மப்படியே போனன். நீ நமது மகிமை நன்று யறிந்தவ னுகையாலும், நல்லவனுகையாலும் உன்னைப்போலொத்த வர்க ளறியவேண்டு மல்லது பின்னை யார்தான் அறியப் போகிறுர்கள்.

நாம் பூதபவுஷிய வர்த்தமானங்க ளெல்லா மறிவோம். பூர்வம் அனேகம் பேர்களுக்கு உபதேசம்பண்ணி ரட்சித் தோம்; இப்போது மனேகருக் குபதேசம்பண்ணி ரட்சித் துக் கொண்டிருக்கிறோம்; இனிமேலு மனேகம் பேரைச் சீஷராக்கி யிரட்சிக்கப் போகிறோம். இதுவரையில் நமது கையினல் அனேக திரவியங்களைச் சம்பாதித்து பெரிய வாளுக்கும், அதிதிகளுக்குங் கோயில்களுக்குங் கொடுத்து ஈஸ்வரப் பிரதிஷ்டை செய்வித்தோம். நமது மனது எதைக் கோருகின்றதோ, அதுகளெல்லாம் உடனே வந்து முன்னிற்கும். நமக்கு இன்னம் இவ்வளவு திரவியம் வரப் போகின்றது. சகல சித்திமுத்திகளுக்கும் நாமே பாத்திர மன்றி மற்றொருவர்கள் பாத்திரமாவார்களா? ஆதலால் நீ செய்யத்தக்க தான தர்மங்களெல்லாம் நமக்கே சேரும்படி பண்ணு; நீ நமக்கு உடல் பொருளாவி மூன்றுந் தத்தம் பண்ணி உபதேசம் பெற்றுக்கொண்ட பிறகு நீ வேறு மூலமாய்ச் சிலவு பண்ணினு லுனக்கு நரகமுண்டாகும்.

மேலும் அவன் தலைகீழாய் விழுகிறுன்; இவன் தலை கீழாய் விழுகிறுன். இன்னஞ் சிலபேர்கள் தலைகீழாய் விழுகிறுர்கள். இவர்களையெல்லாம் பார்த்து நாம் சற்றே

விகற்பமாய் நினைத்தா லவர்கள் கெட்டுப் போவார்கள், அதுவும் நீயே யின்னஞ் சிலநாளில் தெரியப்போகிறாய். நாமே ஈஸ்வரன்; நாமே யோகி; நாமே சித்தபுருஷன்; நமது பாதத்திற் சரணம்பண்ணு; நமது சந்நிதானத்தில் மனங் கரையாமற் சும்மாவிருக்கிற நீ மற்றெவர்களைத்தான் சார்வதா சரணமடைந்து மோட்சமடையப்போகிறாய்.

மேலும் இந்த மானிட சரீரங் கிடைப்பதே யருமை. இது கிடைத்ததற்குப் பெரியவர்களைக் கண்டமாத்திரம் அவர்களுக்குப் பணிவிடைசெய்து ஜனனமரண வுபாதியை நீக்கிக்கொள்ளவேண்டும். நாமே மகாஞானி; நம்மைப்போலிகள் உலகத்தில் யாருமில்லை. நமக்கே சகல கலைகளுந் தெரியும்; நாமே யெக்கியங்களும், பிராமண போஜனமும், மயேஸ்வரபூசையும் தானங்களுஞ் செய்யத்தக்க யோக்கிதை வகித்திருக்கிறோம். நமது சாமார்த்திய வல்லபமும், புத்தியுக்திகளும், மந்திரசித்தியும், யோகசித்தியும், தியான சித்தியும், வாதசித்தியும்போல் எவரிடத்திலாகிலும் நீ கண்டதுண்டானாற் சொல்லு. உனக் கென்னவேண்டினாலும் அதுகளையெல்லாம் உபதேசித்து ஒருநிமிஷ மாத்திரத்தில் உனக்கு மனோலயம் வரப்பண்ணுகிறோம். நமக்குப் பகையாளிபேரில் ஒரு மந்திரத்தை யுச்சாடனம் பண்ணினால் அவ னுடனே மரணமடைவான். நாம் ஒரு சீஷனுக் குபதேசஞ் செய்திருந்தோம். அவன் அதுமுதல் மகாபாக்கியவந்தனாயிருக்கிறான். மற்றொருவன் சாகவேண்டுமென்று ஒரு மந்திரத்தை யுபதேசித்தோம். அவன் அதைச் செபித்த மூன்றுநா ளிறந்துபோய் விட்டான். முன்பு நம்மையடுத்திருந்த ஒருசீஷன் திரும்பி வேறொருவனிடத்திற் போய்ச் சேர்ந்து உபதேசம் பெற்றுக்கொண்டான். அது நமக்குத்தெரிந்து அவனுக்கு நாவெழாமற் செய்து விட்டோம். பூர்வம் அநேகம் பெரியவாளிருந்தார்கள்

அவர்களி லொருவரும் நம்மைப்போற் பிரதிஷ்டையான வர்களில்லை.

ஆதலால் மனவஞ்சகமற நமக்குப் பணிவிடைசெய்கிற வனே கிருதார்த்தன். கொடுக்கப்பட்ட தானங்களெல்லாம் நமக்கே கொடுக்கவேண்டும்; நம்மையே பூசிக்கவேண்டும்; நம்மையே சேவிக்கவேண்டும்; நம்முடைய பாததூள் விழுந்த கிரகமே மோட்சவீடாகும். நமது பாதோதகத்தைச் சிரசில் பிரோட்சித்துக் கொள்ளுகின்றவர்களே கிருதகிருத்தியர்கள். நமக் கிவ்வளவு மகிமையில்லாவிட்டால் ஒருவரும் நம்மை யுபாசிக்கமாட்டார்கள். நாம் இன்னமும் வெகு சிஷவர்க்கங்களைச் சம்பாதிக்கவேண்டுமென் றிப்படி பிரதாபமாகச் சொல்லி யனர்த்த ரூபமாக வரப்பட்ட சித்த விருத்திக்கு ஆசுரவாசனுப் பிரதிபந்தமென்று சொல்லப்படும். இது மகா அனர்த்தத்திற்கே யேதுவானபடியினுலும், அனுத்மவிஷயமானபடியினுலும், ஆத்மஞான விரோதமான படியினுலும் விவேகிக ளிதை விசாரித்து விட்டுவிடத்தக்கது. இந்தப் பிரதிபந்தத்துடன் சிரவணம் பண்ணின லவர்களுக்கு அந்த ஜன்மத்தில் ஞானம் வராது.

ச-கை. ஆனல் சிரவணம் வீணுய்ப்போகுமாவென்னில்,

உ-ம். போகாது. அசுவமேதயாகம் பண்ணினவர்கள் போ:படைகிற லோகத்திற் போயடைந்து அங்குள்ள போகங்களை யனுபவித்துப் பிறகு பிரமநிஷ்டாகுலத்திற் பிறந்து சம்சார வசத்தனுயிருந்து பூர்வ ஜன்மவாசனுவசத்தினுல் சிரவணத்தில்வந்து நிற்பான். அப்படி நின்றபின் தனக்குப் பிரதிபந்தமுண்டென்று தெரிந்து ஸ்ரீசற்குரு முன்னிலையிற் போக்கடித்து அந்தச் சற்குரு கடாட்ச வீட்சணியப் பிரபாவத்தினுல் பரஞானம்பெற்று முத்தனுவான்.

இந்தப் பிரகாரத்தில் பிரதிபந்தத்தைப் போக்கடித்துச் சிரவணாதிகள்செய்து ஞானம்பெற்றவனே சீவன் முத்த னென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

ஆசுரவாசனாப்பிரதிபந்த நிரூபகம் முற்றிற்று.

---

இருபத்துமூன்றாவது

# சிரவணாதித்திரய நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளிற் சிரவணாதிகள் செய்ய வேண்டுமென்று சொல்லுகிறபடியால் சிரவணமாவ தேதென்னில்,

உத்தரம். சமஸ்தமான வேதாந்தங்களுக்குஞ் சட்வித லிங்க தாற்பரியத்தினால் பிரமசுவரூபமாகிய வாத்மாவி னிடத்திற் றாற்பரியமென்று புத்தியில் நிச்சயிப்பதே சிரவணம்.

ச-கை. மனனமாவ தேதென்னில்,

உ-ம். சுருதியர்த்தங்களை விசாரித்துக் கேட்கப்பட்ட அர்த்தத்திற்கு யுக்தியினா லேகவாக்கியம் பண்ணிச் சிந்திக்கிறதே மனனம்.

ச-கை. நிதித்தியாசனமாவ தேதென்னில்,

உ-ம். விசாதிகமான காமக்குரோதாஞ்ஞானங்களை விட்டுவிட்டுச் சுசாதிகமான அகம்பிரமாஸ்மி யென்கிற நிரந்தர சிந்தையைப் பெறுவதே நிதித்தியாசனம்.

ச-கை. இதுகளாற் பிரயோசன மேதென்னில்,

உ-ம். சார்வதா சிரவணம் பண்ணினுல் சகல சம்சய பாவனைகளையும், சார்வதா மனனம்பண்ணினுல் அசம் பாவனைகளையும், சார்வதா நிதித்தியாசனம் பண்ணினுல் விபரீதபாவனைகளையும்போக்கடிக்கும். பிரதிபந்த அழுத்த முள்ளவர்கள் சார்வதா இந்தமூன்றுஞ் செய்யவேண் டும். அஃதில்லாத சூட்சுமபுத்தி யுடையவர்களுக்குச் சிர வணகாலத்திற்றுனே மனன நிதித்தியாசனங்களுஞ் சித் திக்கும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். புத்திசாலியானவன் ஸ்ரீசற்குருவினிடத்தில் பாடங்கேட்டுப் படித்தபோதே யுக்தியினுல் வாக்கியார்த்த ஆலோசனைபண்ணி அவ்வர்த்தத்திற் கேகவாக்கியம் பண்ணு வான். அதுவே மனனமும் அவனது சித்தம் விஷயாகார மாகச் செல்லாது, சிரவண மனனத்திஞற் சம்சய ரகிதமான சுவரூபத்தில் ஏகாக்கிரமாய்நிற்கும். அதுவே நிதித்தியா சனமுமென்று சொல்லப்படும். எந்த மூடனுனவன் பிரதி பந்தத்துடன் கூடியிருக்கிறுனே, அவன் சிரவணமனன நிதித்தியாசனங்களைத் திரும்பவும் திரும்பவும் பண்ண வேண்டும். பிரதிபந்தமின்றிச் சூட்சுமபுத்தி யுடையவனு யிருக்கிற விவேகிக்குச் சிரவணகாலத்திற்றுனே மனனமும் நிதித்தியாசனமுஞ் சித்திக்கும். இந்த அர்த்தத்தை ஸ்ரீசற் குருமுன்னிலையில் சங்கையற விசாரித்துணர்ந்தவனேசீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

## சிரவணுதித்திரய நிருபகம்

முற்றிற்று.

---

இருபத்துநான்காவது

# பாவனாத்திரய நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளிற் பாவனாத்திரயங்களை விசாரித்துநீக்கவேண்டுமென்று சொல்லுகிறபடியால் பாவனாத்திரயமாவ தேதென்னில்,

உத்தரம். சம்சயபாவனை, அசம்பாவனை, விபரீத பாவனை யென்று மூன்றுவிதம்.

ச-கை. அவற்றுள் சம்சயபாவனையாவ தேதென்னில்,

உ-ம். வஸ்து த்வயத்தைப் பற்றிக்கொண்டுவருவதே சம்சயபாவனை.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் மார்க்கத்திற்போகிற வொரு புருஷனுக்கு ஊர்த்தாகாரமாயிருக்கிற ஸ்தாணுவைப் பார்த்து, இது ஸ்தாணுவோ, புருஷனோவென்று வருகிற சித்தவிருத்திக்குச் சம்சயபாவனையென்று பெயர்.

ச-கை. அசம்பாவனையாவ தேதென்னில்,

உ-ம். இங்கே ஸ்தாணுவரக் காரணமில்லையே; ஸ்தாணு வராதே யென்று வருகிற சித்தவிருத்திக்கு அசம் பாவனையென்று பெயர்.

ச-கை. விபரீதபாவனையாவ தேதென்னில்,

உ-ம். இது சர்வாத்மனாய் ஸ்தாணுவல்ல, புருடனே யென்று நிச்சயரூபமாய் வருகிற சித்தவிருத்திக்கு விபரீத பாவனையென்று பெயர். இப்படியே தாஷ்டாந்தத்திலும் பிரமாணகத சம்சயம், பிரமாணகத அசம்பாவனை, பிரமாண கத விபரீதம், பிரமேயகத சம்சயம், பிரமேயகத அசம்

பாவனை, பிரமேயகத விபரீதம் என ஒவ்வொன் றிரண்டு விதமாயிருக்கும்.

ச-கை. ஆனால் பிரமாணகத சம்சயமாவ தேதென்னில்,

உ-ம். சுருதிப்பிரமாணமானது கன்மத்தைப் பிரதிபாதிக்கின்றதோ, அல்லது சுதசித்தமாகிய பிரத்தியேகாத்ம பிரமத்தைப் பிரதிபாதிக்கின்றதோவென்று வருகிற சித்தவிருத்திக்குப் பிரமாணகத சம்சயமென்று பெயர்.

ச-கை. பிரமாணகத அசம்பாவனையாவ தேதென்னில்,

உ-ம். பிரமம் சித்தவஸ்துவான்படியினாலும் பிரமாணாந்தரங்களினால் பிருதிவியாதிகளைப்போ லறியப்படுகிறபடியினாலும் சுருதியாதிகளாந்தச் சித்தப்பிரமத்தையெப்படி பிரதிபாதிக்கும்? அப்படி பிரதிபாதிக்கமாட்டாது என்று வருகிற சித்த விருத்திக்குப் பிரமாணகத அசம்பாவனையென்று பெயர்.

ச-கை. பிரமாணகத விபரீதமாவ தேதென்னில்,

உ-ம். பிரமம் சித்தவஸ்துவானபடியினால் சுருதிகளுக்குச் சித்தப் பிரமத்தைப் பிரதிபாதிக்குமிடத்தில் தாற்பரியமில்லை. மேலும் சுருதிகள் சித்தப்பிரமத்தைப் பிரதிபாதிக்குமேயானால் புருஷனுக்குப் பிரவிர்த்திநிவிர்த்தி போக்குவரவு காணாமலிருக்கவேண்டும். ஆதலாற் பிரயோசனமில்லாமற்போகும். உலகத்திற் பிரவிர்த்தி பூர்வகமாய்ப் புருஷார்த்தங்கண்டோம். ஆகையினால் சமஸ்த வேதார்த்தங்களுங் கர்மம் பிரமமேயென்று வருகிற சித்தவிருத்திக்குப் பிரமாணகத விபரீதமென்றுபெயர்.

ச-கை. பிரமேயகத சம்சயமாவ தேதென்னில்,

உ-ம். பிரமமே ஜகத்காரணமோ, அல்லது பிரதானாதிகள் ஜகத்காரணமோவென்று வருகிற சித்தவிருத்திக்குப் பிரமேயகத சம்சயமென்றுபெயர்.

ச-கை. பிரமேயகத அசம்பாவனையாவ தேதென்னில்,

உ-ம்- ஜகத்துக்குப் பிரமம் அன்னியமாய் விலக்ஷணமா யிருக்கிறபடியினால் ஜகத்திற்குப் பிரமங் காரணமாகமாட்டாது. ஆதலால் பிரதானாதிகளே ஜகத்காரணமென்று வருகிற சித்த விருத்திக்குப் பிரமேயகத அசம்பாவனையென்று பெயர்.

ச-கை. பிரமேயகத விபரீதமாவ தேதென்னில்,

உ-ம் உலகத்திற் புடவை நூலினிடத்தில் காரியகாரணங்களுக்கு ஏகரூபங் கண்டோம். அதுபோல அசுத்தியாதி விகாரங்களுடன் கூடியிருக்கப்பட்ட ஜகத்திற்குக் காரணமான பிரமமு மசுத்தியாதிகளுடன் கூடிக்கொண்டிருக்கவேண்டும். அங்ஙன மின்மையால் பிரதானாதிகளே ஜகத்காரணமென்று திடமாய் வருகிற சித்தவிருத்திக்குப் பிரமேயகத விபரீதமென்று பெயர். இப்படியே பிரத்தியேகாத்ம விஷயசம்சயம், பிரத்தியேகாத்மவிஷய அசம்பாவனை, பிரத்தியேகாத்மவிஷய விபரீதமென மூன்றாண்டு.

ச-கை. ஆனாற் பிரத்தியேகாத்மவிஷய சம்சயமாவதேதென்னில்,

உ-ம். யந்திரத்திற் சீவனாகவும் ஜகத்தி லொருவனாகவும் தோற்றிக்கொண்டிருக்கப்பட்ட தான் ஜகத்விலக்ஷணமான பிரமமானவனோ, ஆகானோவென்று வருகிற சித்த விருத்திக்குப் பிரத்தியேகாத்மவிஷய சம்சயமென்று பெயர்.

ச-கை. பிரத்தியேகாத்மவிஷய அசம்பாவனையாவதேதென்னில்,

உ-ம். கர்த்ருத்வாதி அனேக தர்மயுக்தனாய் பரிச்சின்னனாய் ஜனனமரணங்களிற் கூடிக்கொண்டிருக்கிற தனக்கு இத்தியாதி விபரீத லட்சணங்களுண்டானதற்குப்

பிரமசொரூபத்வ மெப்படி கூடும். அதுகூடாதென்று வருகிற சித்தவிருத்திக்குப் பிரத்தியோகாத்மவிஷய அசம்பாவனையென்று பெயர்.

ச-கை. பிரத்தியோகாத்மவிஷய விபரீதமாவதேதென்னில்,

உ-ம். தான் அகர்த்தாவானால், தன்னைக்குறித்து இந்தக் கர்மத்தைப்பண்ணு, இந்தக்கர்மத்தைப்பண்ணாதே, இதைப்பார், இதைப்பாராதே, இதைக்கிரகி, இதைக்கிரகியாதே, இதைப்பட்சி, இதைப்பட்சிக்காதே யென்று விதிரூபமாக வேதஞ் சொல்லவேமாட்டாது. சொல்லுகிறபடியால், நான் கர்த்தாவென்பதிற் சந்தேகமேயில்லையென்று கர்த்ருத்வ யுபயோக்கியமான வபிமானாதிகளுக்குச் சுதர்மப் பிரீதிலட்சணமாய் வருகிற சித்தவிருத்திக்குப் பிரத்தியோகாத்மவிஷய விபரீதமென்றுபெயர். இந்தப் பாவனைகளின் தாரதன்மியங்களை ஸ்ரீசற்குருமுன்னிலையில் நன்றாய் விசாரித்துத்தள்ளிப் பரஞானத்தையடைந்தவனே சீவன்முத்தனென்று சொல்லப்படும். இந்த விபரீத பாவனையைமாத்திரம் இன்னம் விசேஷமாய் விசாரித்தறியவேண்டும்.

ஏனென்றால் உலகத்தில் சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமாதி யுக்த வசனங்களெல்லாம் நீயே யாத்மா, நீயே பிரமமென்று சொல்லப்பட்டும். ஸ்ரீசற்குருவும் நீயே யாத்மா, நீயே பிரமமென்று சுருதி யுத்தி யனுபவங்கள் முதலிய வெகுபிரகாரங்களால் உபதேசஞ்செய்வித்தும் ஈஸ்வரகடாக்ஷமும் பெரியோர்களுடைய கடாக்ஷ வீக்ஷண்ணியமு மில்லாத பாவாத்மாக்களுடைய மலசகித சித்தமானது துன்மார்க்கத்வ சங்கத்தினால் சச்சிதானந்த சொரூபமாகிய வாத்மாவே நானென்று கிரகிக்க வல்லமையில்லாமல் சடமாகிய தேகேந்திரியாதிகளையே நானென்று

கிரகிக்கும். ஆதலால் அந்த விபரீதத்தை நானுவித திருஷ்டாந்தத்தினுல் விசாரித்தறிந்து யூகபுத்தியினுற் றள்ளிவிடவேண்டியது.

ச-கை. ஆனுலந்தத் திருஷ்டாந்தமெப்படி யென்னில்,

உ-ம். தர்மகுத்தனென்ருெரு அரசனுண்டு. அவன் தனது தர்மத்தினுலேயே பிரதானிமுதலிய பரிசனங்களுக்கும் நன்ருய் சவரட்சணைசெய்து துஷ்டநிக்கிரகஞ் சிஷ்டபரிபாலனம் பண்ணிக்கொண்டுவந்தான். அப்படியிருக்குங் காலத்தில் பரிசினியென்னும் பெயரையுடைய ஒரு பரமார்த்தவஞ்சகன் அந்த ராஜனிடத்தில் பிரதானியாக வந்துசேர்ந்தான்.

அவன் அவ்வரசனுக்கு அதர்மங்களையே போதித்து ஓய் மகாராஜாவே! இந்த வித்துவான் முதலானபேர்களுக்கு என் விருதாவிற் சம்பளங்கொடுத்து வருகிறீர்கள்? இவர்களாலும் ஸ்தானுதிபதி, வாயில்காப்போர், கொல்லர் முதலான இவ்வளவு ஜனங்களாலும், மாதமொன்றுக்கு எவ்வளவுபொருள் வீணுகச் செலவாகின்றது? இந்தப் பிரதிஷ்டையினுல் நமக்கென்ன பிரயோசனமென்று நாள்தோறுஞ் சொல்லிச்சொல்லி அவர்களுக்கெல்லாஞ் சீவனமில்லாமற் பண்ணுவித்து, அவர்களையெல்லாந் துவேஷம் பண்ணிக்கொண்டு, ராஜாவும் நாமும் ஒருமையாயிருந்தால், இவர்கள் துவேஷம் நம்மை யென்னசெய்யுமென்று அசட்டையாய் அவர்களையெல்லாம் அவமதித்திருந்தான்.

இப்படியிருக்க ஒருநாள் சமஸ்தமானபேரு மொன்ருகக்கூடி யாலோசித்து, இந்தப் பரிசினியென்பவனை ராஜசமுகத்திற்கு வரவொட்டாமற் செய்விக்கிறதே யுக்தமென்று தீர்மானித்துக்கொண்டு அவன்வருஞ் சமயம் பார்த்துப் பலபேருமாய் அவன்மேல் விழுந்து அடித்துத்

துரத்திவிட்டார்கள். இந்தச்சேதியை தெரியாத அரசன் பரிசினி யேன் வரவில்லையென்று கேட்டால் அவனுக்கு மகாசுர வியாதிவந்து சம்பவித்திருக்கிறதென்று சொன்னூர்கள். அதைக்கேட்ட வரசன் அவனிடத்தில் வைத்திருக்கு மிஷ்டத்தினுல் அரமனை வயித்தியர்களை யனுப்பிப் பார்க்கும்படி செய்வித்தான். அவர்களுட மேற்படியார் கூட்டத்திற் சேர்ந்தவர்களாதலால் ஓய் மகாராஜாவே! நாங்களென்ன அவுஷதங்கள் கொடுப்பித்தபோதிலும் அவன் பிழைக்கிறது அருமையாயிருக்கிறதென்று சொன்னூர்கள்.

அதைக்கேட்ட அரசனும் மகாவிசனங்கொண்டு நான் அவனைப்போய் பார்த்து வரவேண்டுமென்று பிரயாணப் பட்டுப் போகும்போது அந்தச்சேதி தெரிந்து சில பேர் அரசனுக்கெதிரேவந்து, சுவாமி! பரிசினி யிறந்து போனுன், அந்தப்பிணத்தை நீங்கள்போய்ப் பார்க்கலாகாதென்று சில சாஸ்திர திருஷ்டாந்தங்க ளெடுத்துக்காட்டி யரசனைப் பரிசினிவீட்டுக்குப் போகவொட்டாமற் றடுத்து ஓய் மகாராஜாவே! உமக்கு இந்தலோகத்தில் எவ்வளவு சிநேகர்க ளிருக்கிருர்கள்? அனேகரா யிருந்தாலும் உங்களுக்கு எவர்கள்பேரில் கிருபையோ, அவர்கள்தான் உங்கள் சிநேகத்திற்குப் பாத்திரராவார்களென்று பலவிதமான இதவார்த்தைகளைச் சொல்லி அரசனது துக்கத்தைப் போக்கி யரமனைக்குத் திரும்பும்படி செய்துவிட்டார்கள்.

பிற்பாடு இதுகளெல்லாம் பரிசினியென்பவ னறிந்து நாம் எப்போதும்போல ராஜசமுகம்போய்ச் சேர்ந்தல்லவா இவர்களுக்கெல்லாம் பிராயச்சித்தம் பண்ணுவிக்கவேண்டும். இவர்களைப் பிராயச்சித்தம் பண்ணுவிக்காமல் நாம் க்ஷவரகர்மம் பண்ணக்கூடாதென்று பிரதிக்கினை பண்ணிக்

கொண்டு, நமக்கு ராஜசேவை யெப்போது கிடைக்கப் போகிறதென்று வெகுநாள் காத்துக்கொண்டிருந்தான்.

இப்படியிருக்கப் பரிசினியும் ஒருநாள் அவ்வரசன் சவாரிபுறப்படுகிற சமாசாரங் கேள்விப்பட்டு, வழியிலொரு அரசமரத்தி லேறிகொண்டு, ஒருவருக்குந் தெரியாமற் பதுங்கியிருந்தான். அப்படியிருக்க, அவ்வரசன் சதுரங்க சேனைகளுடன் தாம்தாமென்று சகல வாத்தியங்களும் முழங்கும்படி அம்மரத்திற்குச் சமீபமாய் சவாரி வரும்போது, இந்தப் பரிசினியென்பவன் பிரத்தியட்சமாய்க் கண்டு, விஜைபவாவென்றுகூவி, நான்தான் பரிசினி, என்னை யுங்கள் சமுகத்திற்கு வரவொட்டாம லெல்லாருங் கூடிச் சங்கேதம் பண்ணிக்கொண்டு, என்னைக் கண்ட விடத்தி லடித்துத் துரத்தித் துராகிருதம் பண்ணுகிறார்களென் றரத்தசத்தமாகச்சொல்ல, அதுகேட்டு அரசனுந் திரும்பி மரத்தின்மேலிருக்கும் பரிசினியைப் பிரத்தியட்சமாகப் பார்த்தான்.

அந்தச் சமயத்தி லங்கிருந்த பரிசனங்களெல்லாம் ஓ! ஓ!! ஏது மோசம்வந்ததே; இனி யெப்படியென்று சீக்கிரத்தில் விபூதியை அபிமந்திரித்து, அரசன்மேல் தெளித்து, துப்பட்டாவால் ராஜனை மூடிமறைத்து, அகோ மகாராஜாவே! தேவரீர் பீதிகொள்ளவேண்டாம், முன் செத்துப்போன பரிசினி இந்தமரத்தில் பிரமராட்சதனாயிருந்து, உம்மைக் கூப்பிட்டினாகிறானென்று சகல வாத்தியங்களையும் நன்றாய் கோஷ்டிக்கும்படி செய்வித்து, அதிசீக்கிரத்தில்தானே ராஜாவை யரமனைக்கு அழைத்துக் கொண்டு வந்துவிட்டார்கள்.

பிற்பாடு சிலபேரைவிட்டு அந்தப்பரிசினியை நன்றாயடித்துப் பட்டணத்திற்குப் புறம்பே துரத்திவிட்டார்கள். இப்படி ராஜன், தனது தோஷரகிதமான கண்களால் பரி

சினியை நன்றாய்ப்பார்த்தும் அவன் குரல்வசனங்களைக் கேட்டும் அவர்கள்செய்த ஜாலத்தினால் விவேகம் விளங்காமல் உள்ளபடி பிரமராட்சதனென் றெப்படி நிச்சயிக்கப் பட்டானோ, அப்படியே சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிக ளனேகவிதங்களினால், நீயே பிரமமென்று சொன்னாலும், ஸ்ரீசற்குருநாதனும் சுருதியுக்தி யனுபவங்களாற் பிரத்தியட்சப் பிரமாணத்துடன் நீயே பிரமமென்று உபதேசித்தாலும், சுருதிப் பிரமாணத்தினால் ஞானோதயமுண்டாயிருந்தாலும் பிரதிபந்தமுடையவர்கள் தேகேந்திரியாதி விபரீதங்களையே நானென்று விவேகவிளக்கமில்லாமற் கிரகித்துக்கொள்வார்கள்.

ஆதலா லுண்மையாகிய வேதாந்த சாஸ்திர யுக்த சொரூபமே திருமேனியாகிய ஸ்ரீசற்குருகடாட்சத்தினாற் சம்சயமறக்கேட்டுத் தெளிந்து, கேட்டபடி யுக்திபண்ணி, யுக்திபண்ணினபடி யனுபவத்திற்கண்டு, கண்டபடி பிரதிபந்தங்களை நீக்கிச் சாட்சாத்காரமடைந்தவ னெவனோ, அவனே சீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

பாவனாத்திரய நிரூபகம்.
முற்றிற்று.

---

இருபத்தைந்தாவது.

# ஷட்விதலிங்க தாற்பரிய நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளில் ஷட்விதலிங்கதாற்பரியங்களைக் குருமுகமாய் விசாரித்தறியவேண்டுமென்றுசொல்லுகிறபடியால் ஷட்விதலிங்கமாவ தேதென்னில்,

உ-த்தரம். உபக்கிரமம், உபசங்காரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அர்த்தவாதம், உற்பத்தியென்று சொல்லப்படும்.

ச-கை. உபக்கிரமமாவ தேதென்னில்,

உ-ம். அகண்டபரிபூரண சச்சிதானந்த பிரமத்தினிடத்தில் ரச்சுவிற் சர்ப்பந் தோன்றினதுபோல சகல பிரமாண்டங்களாகிய ஜகத்துண்டாயிற்று; சிருஷ்டிக்கு முன்னமே இந்த ஜகத்து நாமரூபரகிதமாய் சத்தாமாத்திரமா யிருந்ததென்று பிரதிபாதிக்கப் படுகிறதே உபக்கிரமம்.

ச-கை. உபசங்காரமாவ தேதென்னில்,

உ-ம். இப்படி தோற்றப்படுகிற சர்வ ஜகத்தும் அந்தச் சத்தினுடைய சொரூபம்; அதுவே சத்தியம்; அதுவே யாத்மசொரூபமென்று பிரதிபாதிக்கப்படுவதே யுபசங்காரம். இவ்விரண்டும் அத்விதிய வாத்மசொரூபத்தைப் பிரதிபாதிக்கிறபடியா லிவ்விரண்டு மொருலிங்கமாம்.

ச-கை. அப்பியாசமாவ தேதென்னில்,

உ-ம். பிரத்தியேகாத்மாவாகிய நீயே பிரமமென்று ஒன்பது பிரகாரமாக வுபதேசிப்பது. அவ் வுபதேசம் சேதனனைக்குறித்துச் சொல்வதினாலும், சேதனனுக்கே அத்துவைத வாத்மதத்துவம் போதிப்பதினாலும் அஃதே யப்பியாசம்.

ச-கை. அபூர்வதையாவ தேதென்னில்,

உ-ம். அஷ்டப்பிரமாணங்களுள் உபநிஷத் பிரமாணத்தினாற் பிரத்தியேகாத்ம லக்ஷணத்தை யறியப்படுவதன்றி, மற்றைப் பிரமாணங்களா லறியப்படாதென்று பிரதிபாதிக்கப்படுகிறதே யபூர்வதை.

ச-கை. பலமாவ தேதென்னில்,

உ-ம். ஆத்மஞானிக்கு இந்தத் தேகேந்திரியாதி சகல ஜகத்தும் பிராரத்தமுள்ளமட்டும் மித்தையாய்த் தோற்றப் படுகின்றது. பிராரத்தநாசத்தில் சர்வாத்மனுய்த் தோற் ருமல் அத்துவைத சொரூபமாத்திரமாய்ப் பிரகாசிக்கு மென்று பிரதிபாதிக்கப்படுகிறதே பலம்.

ச-கை. அர்த்தவாதமாவ தேதென்னில்,

உ-ம். எந்தவஸ்துவைக் கேட்டமாத்திரத்தில் கேட்கப் படாதவஸ்து கேட்கப்படுகின்றது, எந்த வஸ்துவை மனனம் பண்ணினமாத்திரத்தில் மனனம் பண்ணப்படாத வஸ்து மனனம் பண்ணப்படுகின்றது. எந்த வஸ்துவை யறிந்தமாத்திரத்தில் அறியப்படாதவஸ்து அறியப்படு கின்றதோ, அதுவே பஞ்சகிர்த்தியங்கட் காதாரபூதமான கர்த்தவ்வியமாய் விளங்குகிறதென்று பிரதிபாதிக்கப்படு கிறதே யர்த்தவாதம்.

ச-கை. உற்பத்தியாவ தேதென்னில்,

உ-ம். மிருத்திகையிற் பிறந்த கட கலசாதிகளும், சொர்ணத்திற் பிறந்த கடக மகுடாதிகளும், இரும்பிற் பிறந்த கட்க முதலானதுகளும் காரணத்தையன்றிப் பிரதக்காய்த்தோற்றினபோதிலும் இந்தக்காரியாதிகளுக்கு உச்சாடன மாத்திரமன்றி, வேறே யர்த்தமில்லாதபடி யினுல் காரண வெதிருத்தமாய்க காரியமில்லையென்று பிரதி பாதிக்கப்படுகிறதே யுற்பத்தி. இப்படியே பிரசித்தமாய்த் தோற்றப்பட்ட ஜகத்தும் பிரத்தியேகாத்ம சொரூபமான பிரமவிகாரமானபடியினுல் பிரத்தி யேகாத்மாவையன்றி வெதிருத்தமா யில்லையென் றறியவேண்டியது.

இந்தப்பிரகாரம் அனுபவமே திருமேனியாகிய வாசி ரியர்முன்னிலையில் ஷட்விதலிங்கத்தினுற் சுருதிகளுக்குத் தாற்பரியங்களைக் களங்கரகிதமாய் விசாரித்தறிந்து நிச்ச

யிக்கின்றவன் சிரவணமாத்திரத்தில் அத்விதிய வாத்ம ஞானியாவன். அவனுக்கு மனன நிதித்தியாசனம் வேண்டுவ தில்லை. ஆசிரியர் சம்சய ரகிதமாய்ப் பிரத்தியக்ஷமாய்ப் போதித்தும் சிஷன்மந்தனுய் விபரீத புத்தியுடையவனு யிருந்தால் அவனுக்கே மனன நிதித்தியாசன முதலிய வுபாதிகாரியமெல்லாம் வேண்டும். ஆதலால் எவன் ஷட்வித லிங்கதாற்பரியத்தினுல் ஸ்ரீசற்குருமுன்னிலையில் சாக்ஷாத் கரிக்கிருனே, அவனே சீவன்முத்தனும் பரமுத்தனு முபாதிரகிதனுமென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

ஷட்விதலிங்கதாற்பரிய நிருபகம்

முற்றிற்று.

---

இருபத்தாறவது

# தத்துவ நிருபகம்.

---

சங்கை. சுருதியாதிகளில் தத்துவவிசாரம் பண்ண வேண்டுமென்று சொல்லுகிறபடியால் தத்துவமாவ தே தென்னில்,

உத்தரம். ஞானேந்திரிய பஞ்சகமும், கன்மேந்திரிய பஞ்சகமும், பிராணுதிபஞ்சகமும், சத்தாதிபஞ்சகமும், அந்தக்கரண சதுஷ்டயமுங்கூடி 24-தத்துவங்களென்றும்; இப்படி சொன்ன 24-தத்துவங்களும், அபஞ்சீகிருதபூத மும், சரீரத்திரயமும், அவஸ்தாத்திரயமும், அஞ்ஞான முங்கூடி 36- தத்துவங்களென்றுஞ் சொல்லப்படும். இது களைச் சற்குருமுன்னிலையில் சந்தேகவிபரீதமின்றி விசாரித்

தறிந்து, இதுகளுக்கு விலக்ஷணமாகிய அத்விதிய ஆத்ம சொரூபமே நானென்றெவனறிகிறானோ, அவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதியாதிகளிற் சொல்லப்படு கின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

தத்துவ நிரூபகம்
முற்றிற்று.

---

இருபத்தேழாவது
# பிரமசரியத்வ நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளிற் சொல்லப்படுகிற பிரமசரி யத்வமாவதேதென்னில்,

உத்தரம். தரிசனம், பரிசனம், கேளி, கீர்த்தனம், குய்யபாஷணம், சங்கற்பம், அத்தியாவசாயம், கிரியாநிவிர்த்தி என்கிற எண்வகையிலும் நிராசையாயிருப்பதே பிரம சரியத்வ மென்னப்படும்.

ச-கை. தரிசனமாவதேதென்னில்,

உ-ம். ஒரு ஸ்திரீயை ஆசையாகப் பார்க்கிறது.

ச-கை. பரிசனமாவதேதென்னில்,

உ-ம். ஒரு ஸ்திரீயை ஆசையாகத் தீண்டுவது.

ச-கை. கேளியாவதேதென்னில்.

உ-ம். ஒருஸ்திரீயோடு ஆசையாகச் சரசமாய் விளை யாடுகிறது.

ச-கை. கீர்த்தனமாவதேதென்னில்.

உ-ம். ஒரு ஸ்திரீயை அப்படிப்பட்டவ ளிப்படிப் பட்டவளென்று ஆசையாக வர்ணிக்கிறது.

ச-கை. குய்யபாஷணமாவதேதென்னில்,

உ-ம். ஒரு ஸ்திரீயோடு ஆசையாய் ஏகாந்தத்தில் வசனிக்கிறது.

ச-கை. சங்கற்பமாவ தேதென்னில்,

உ-ம். ஒரு ஸ்திரீயை யாசையாய் மனதில் நினைக்கிறது.

ச-கை. அத்தியாவசாயமாவ தேதென்னில்,

உ-ம். ஒரு ஸ்திரீயைச் சேரவேண்டுமென்று மனதிலாசையாய்த் தீர்மானிக்கிறது.

ச-கை. கிரியாநிவிர்த்தியாவ தேதென்னில்,

உ-ம். ஒரு ஸ்திரீயை ஆசையாய்க் கூடி யனுபவிக்கிறது. இவ்வெண்வகைகளும் ஒன்றுக்கொன்று தாரதன்மியமா யிருந்தாலும் சமஸ்தத்துக்கும் இச்சையே காரணமாகையால், சாமானியமாய் மைதுனங்களென்றே பெரியோர்கள் சொல்லுவார்கள். அன்றியும் இந்தப் பிரமசரியத்வமுடையவர்களுக்குச் சிரவணமாத்திரத்தில் தானே ஞானம்வருமென்பதிற் சந்தேகமில்லை. மேலும் அப்படிப்பட்ட ஆத்மஞானிகளை அஜிம்மன், சண்டகன், பங்குரன், அந்தகன், பதிரன், மூகதனென்று சுருதியாதிகள் கோஷிக்கின்றது.

ச-கை. அஜிம்மன் யாரென்னில்,

உ-ம். நாவில்லாதவனல்ல; இது வெனக்குப்பிரியம், அது வெனக்கு அப்பிரியமென்று சொல்லாமல் கர்த்ருத்வாபிமான ரகிதமாய் இட்டதைப்பொசித்து அசத்தியம் பேசாமலும் மிகுந்து பேசாமலு மிருக்கிறவனே அஜிம்மன்.

ச-கை. சண்டகன் யாரென்னில்,

உ-ம். பேடியல்ல; சத்தியாய்ப் பிறக்கப்பட்ட சிசுவையும் பதினாறு வயதுள்ள ஸ்திரீயையும் நூறுவயதுள்ள ஸ்திரீயையும் சமமாகக்கண்டு நிருவிகாரியாயிருக்கிறவனே சண்டகன்.

ச-கை. பங்குரன் யாரென்னில்,

உ-ம். முடவனல்ல; பிச்சைநிமித்தம், மலசல நிமித்தமாய் ஓரிடத்திற்குப்போகிறதும், அதவா கிராமாந்தரங்களுக்குப் போகவேண்டுமென்கிற விச்சையுண்டானாலும் யோசனை தூரத்திற்குப் போகிறதேயன்றி அதிகமாய்ப் போகாமலு மிருக்கிறவனே பங்குரன்.

ச-கை. அந்தகன் யாரென்னில்,

உ-ம். குருடனல்ல; கண்ணிருந்தபோதும் சஞ்சரித்தபோதும் நாலு நுகத்தடியளவு பூமியைவிட்டு அப்பால் பார்க்காமலிருக்கிறவனே அந்தகன்.

ச-கை. பதிரன் யாரென்னில்,

உ-ம். காது கேளாதவனல்ல: இதமாகிய வசனமும் அகிதமாகிய வசனமுஞ் சுரோத்திரத்திற்குக் கேட்கப்படுகிறதா யிருந்தாலும் அதுகளி லிதாகிதங்க ளில்லாமலிருக்கிறவனே பதிரன்.

ச-கை. முகதன் யாரென்னில்,

உ-ம். மூடனும் சவுந்தரியவானுமல்ல; சமஸ்தவிஷயமுந் தன் சந்நி தானத்தின்முன் வந்திருந்தபோதிலும் இந்திரியபடுத்துவ முண்டானவனுப், அவ்விஷயங்களை யனுபவித்தற்குத் திடகாத்திரனு யிருந்தாலும் நித்திரைபோகிறவன்போல் புத்தியில் நழுவியிருக்கிறவனே முகதன் என்று சொல்லப்படும். இவ்வாறு தன்மையு முண்டானவனே விவகாரதசையிலிருந்து விடுபட்ட விரக்தனென்றும், சந்நியாசியென்றும், முக்தனென்றும், அதிவர்ணாசிரமி யென்றும் சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

## பிரமசரியத்வ நிரூபகம்
## முற்றிற்று.

---

இருபத்தெட்டாவது

# சத்தவித சைதன்ய நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளிற் சொல்லப்படுகிற சத்த வித சைதன்னியமாவ தேதென்னில்,

உத்தரம். சுத்த சைதன்யம், ஈஸ்வர சைதன்யம், சீவ சைதன்யம், பிரமாத்துரு சைதன்யம், பிரமாணசைதன்யம், பிரமேய சைதன்யம், பல சைதன்னியமென்று ஒருசை தன்னியமே விவகாரத்தி லேழுவிதமாகச் சொல்லப்படும்.

ச்-கை. இவ் வேழுக்கும் பேத மெப்படியென்னில்,

உ-ம். மாயாரகித சைதன்னியத்திற்குச் சுத்தசை தன்னிய மென்றும், மாயாசகித சைதன்யத்திற்கு ஈஸ்வர னென்றும், அவித்தியாசகித சைதன்னியத்திற்குச் சீவ னென்றும், அந்தக்கரணசகித சைதன்னியத்திற்குப் பிர மாதாவென்றும், அந்தக்கரண விருத்திசகித சைதன்னி யத்திற்குப் பிரமாணமென்றும், அப்பிரத்தியக்ஷ விஷய சகித சைதன்னியத்திற்குப் பிரமேயமென்றும் பிரத்தி யக்ஷ விஷயசகித சைதன்னியத்திற்குப் பலமென்றுஞ் சொல்லப்படும். இந்தப் பிரகாரத்தில் அத்விதியமாகிய ப்ரிபூரணவாத்மாவே யுபாதிபேதத்தினால் அனேகவித மாகத்தோற்றப்படுகின்றது. ஆதலால் இந்த வுபாதி பேதங்களை ஸ்ரீசற்குருவினாற் றெளிந்து சொரூபமுதற் பலம் வரையிலு முண்டான வுபாதிமுறைமையையறிந்து தள்ளி னன்றினாலுந் தள்ளப்படாத அத்விதிய பரிபூரணமாகிய வாத்மாவே நானென்றறி எவனறிகிறானோ, அவனே உபாதி ரகிதனான சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

சத்தவித சைதன்ய நிரூபகம்
முற்றிற்று.

இருபத்தோன்பதாவது

# பஞ்சப்பிரமை நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளில் பஞ்சப்பிரமைகளையும் அதனதன் நிவிர்த்திகளையும் விசாரித் தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியால் பஞ்சப்பிரமையாவ தேதெதென்னில்,

உத்தரம். பிரமமும், பரமேஸ்வரனும் வேறென்பது பேதப் பிரமை; பிரமத்துக்கே கர்த்ருத்வாதீகம் வாஸ்தவமென்பது கர்த்தவியப் பிரமை; சரீரத்திரய வவிச்சின்னனாகிய வாத்மாவைச் சங்கனாய்க் காணப்படுகின்றது சங்கப்பிரமை; ஜகத்துக்குக் காரணமான பிரமத்தை விகாரியென்பது விகாரப்பிரமை; காரணமான பிரமமன்றி இந்த ஜகத்து சத்தியமென்பது ஜகத் பிரமை. இவைகளையே பஞ்சப்பிரமையென்று சொல்லுவார்கள்.

ச-கை. இவைகளுக்கு நிவிர்த்தியெப்படி யென்னில்,

உ-ம். பிம்பப் பிரதிவிம்ப திருஷ்டாந்தத்தினாற் பேதப் பிரமையும், படிகரோகிதத்தினாற் கர்த்தவியப் பிரமையும், கடாகாச படாகாச திருஷ்டாந்தத்தினாற் சங்கப்பிரமையும், ரச்சுசர்ப்ப திருஷ்டாந்தத்தினால்ஜகத்காரணமான பிரமத்தினிடத்திற்றோற்றின விகாரப்பிரமையும் சொர்ணலோக மிருத்திகா திருஷ்டாந்தத்தினால் காரணத்திற் கன்னியமான ஜகத்பிரமையும் நிவிர்த்திக்கப்படும்.

இந்தப் பஞ்சப்பிரமைகளும் அஞ்ஞானத்தினால் வரும். ஆகையால் ஸ்ரீ சற்குரு முன்னிலையில் இவற்றிற்குக் காரணமான அஞ்ஞானப் பிரமை யுண்டான விதத்தை விசாரித்தறிந்து தன்னை யுள்ளபடிகண்டு மேற்சொன்ன பிரமைக ளணுகாத பரஞானத்தை யெவன் சம்பாதிக்

கிறானே, அவனே கிருதகிருத்தியனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

பஞ்சப்பிரமை நிரூபகம் முற்றிற்று.

---

முப்பதாவது

# பிராரத்தத்திரய நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளில் பிராரத்தத்திரயங்களை விசாரித் தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியால் பிராரத்தத்திரயமாவ தேதென்னில்,

உத்தரம். இச்சா பிராரத்தம், அனிச்சா பிராரத்தம், பரவிச்சா பிராரத்தமென மூன்றுவிதம். இம்மூன்று பிராரத்தமும் அவிவேகிகளுக்கும், விவேகிகளுக்குஞ் சமானமா யிருக்கும். இருந்தபோதிலும் அவிவேகிகளது பிராரத்தத்துக்கும் விவேகிகளது பிராரத்தத்திற்கும் பேதமுண்டு.

ச-கை. ஆனால் அவிவேகிகளி னிச்சாபிராரத்த மெப்படிப்பட்ட தென்னில்,

உ-ம். ஐப்பசிமாதத்தின் மேகத்தைப்போ லொத்தது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஐப்பசிமாதத்தின் மேகஞ் சுலபமாய்க் காண்பித்து சர்வத்திரா வியாபித்துக் கும்பத் துரோணமாய் வருஷித்துச் சகலபயிர்க ளழுகிப்போகவும்; வீடுகள், சுவர்கள் விழவும் பண்ணிப் பிராணிகளுக் கனேக துக்கங்கள்

செய்விக்கிறதுபோல, அஞ்ஞானிக்குச் சுலபமான விச்சை பிறந்து அந்த மேகத்தைப்போல் சர்வத்திரா வியாபித்துப் பிறருக் கனேக துக்கங்களைச்செய்து, தன் சாமார்த்திய வேதுவினுலேயே கூடிவந்ததென்றும், தன் சாமர்த்திய மில்லாமையினுற் கூடிவரவில்லையென்றுமெண்ணி இகபரங் களிற் சுகமில்லாமல் நரகமுஞ் சம்பாதிக்கும்.

ச-கை. விவேகிகளது இச்சாபிராரத்த மெவ்வகைப் பட்டதென்னில்,

உ-ம். தைமாதத்தின் மேகத்தைப்போ லொத்தது.

ச-கை. அஃதெப்படியென்னில்,

உ-ம். தைமாதத்தின் மேகஞ் சர்வத்திரா வியாபித்துக் கொண்டே பிறக்கும். அப்படி பிறந்தாலுஞ் சுலபமாய் வருஷித்துப் பயிர்களுக்கும் பிரஜைகளுக்கும் துன்பத் தைக் கொடாமல் தானுங் கெட்டுப்போம். அதுபோல விவேகிகளது இச்சையானது கர்மவசத்தினுல் வெகுவாய் வருகிறதுபோலிருக்கும். வந்தபோதிலும் புஷ்களமான விவேகத்தினுலேயே பிறருக்கு உபத்திரவங் கொடாமல் வருகிறதும் வராததும் பூர்வ ஜன்ம சம்ஸ்கார கர்மப்படியே யென்றெண்ணித் தனக்குப் பரலோகத்துக் கானிசம்பாதிக் காமல் தேகதாரணைமாத்திரமே வரும்.

மேலும் விவேகிகளானவர்கள் உலகத்தில் அவபத்தி யங்கள் செய்து இறந்துபோனவர்களையும், திருடித் தலை வெட்டுண்டவர்களையும், ராஜஸ்திரீயைக் கைப்பிடித்து ஆக்கினை பட்டவர்களையும் பார்த்து நாம் இந்தக்காரியங் களைச் செய்யப்போகாது; செய்தோமானுல் நமக்கும் இவ வனர்த்தங்கள் நேரிடுமென்று ப்யந்து நிற்பார்கள்.

அவிவேகிகளோ வென்ருல் சுபாவ அனர்த்தமறிந் திருந்தும் அது நமக் கெம்மாத்திரம், அந்தக்காரியஞ்

செய்கிறதற்கு அவர்களுக்குச் சமர்த்தில்லாமற் போச்சுது. நமது சமர்த்தினுற் செய்யலாமென்றெண்ணி அந்த வியாபாரத்திற் பிரவிர்த்தித்து தலைவெட்டுண்டு நிற்பார்கள். இந்தப்படி அவிவேகிகளது இச்சாபிராரத்தத்துக்கும் விவேகிகளது இச்சாபிராரத்தத்துக்கும் பேதமுண்டு.

மேலும் விவேகியானவர்கள் பிரீதியெல்லாம் அனர்த்தமென்றெண்ணி உலகத்தில் அர்த்த வாசத்தியுடைய சமுசாரிகள் அர்த்தஞ் சம்பாதிக்கிறதிலும் அதைச் சவரட்சணை செய்கிறதிலும் செலவழிந்து நஷ்டம்வருவதிலுந் துக்கப்படுவதைக்கண்டு, நாமும் இந்த அர்த்தத்திலாசத்தி வைக்கலாகாது, வைத்தோமேயானுல் அவர்கள் துக்கப்படுவதுபோல நாமுந் துக்கப்படவேண்டுமென்று விசாரித்து, சமஸ்த பதார்த்தங்களிலும் ஆசத்தி விட்டுவிட்டு, லபிக்கப்பட்ட லாபத்தை யனுபவித்துச் சந்தோஷகரமாயிருப்பார்கள். அவர்களது சரீர தாரணைமாத்திரமாகிய கிரியைகளிடத்திலும் சவுசாதிக் கிரியைகளிடத்திலும் இச்சை வருமேயன்றி அன்னிய வஸ்துவி லிச்சையுண்டாக மாட்டாது.

ச-கை. இனி யனிச்சாபிராரத்த மெப்படி யிருக்குமென்னில்,

உ-ம். விவேகிகளுக்கும் அவிவேகிகளுக்குஞ் சமானமாயிருக்கும்.

ச-கை. அஃதெப்படியென்னில்,

உ-ம். தலையிற் ருங்குதல், காலிற் படுதல், தண்ணீரிலடித்துக்கொண்டுபோதல், மழையி னனைதல், வெய்யிலிலடிபடுதல், க்ஷயரோகமுதலிய வியாதிக ளுண்டாதல், இடிவிழுதல், கோயிற் கோபுரம் பிரகார மண்டபம் விழுதல் ஆகிய இதுகளால்வருந்துக்கமும், வெய்யில் காற்று

மழை யக்கினி இது முதலியவைகளால் வருஞ் சுகமும் விவேகிகளுக்கும் அவிவேகிகளுக்குஞ் சமமாயிருக்கும்.

ச-கை. பர விச்சா பிராரத்த மெப்படி யிருக்குமென்னில்,

உ-ம். அதுவுஞ் சமானமாகவே யிருக்கும்.

ச-கை. அஃதெப்படியென்னில்,

உ-ம். ஒருபுருஷன் மவுனமா யுட்கார்ந்திருக்கும்போது அன்னிய னொருவன்வந்து, அவனை நமஸ்காரஞ் செய்து, நீ ஒருகாரியம் பண்ணவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அந்தத் தாட்சணியத்தினால் அந்தக் காரியத்தை செய்து, அதனால்வருஞ் சுகதுக்கத்தை அவனனுபவிக்கிறான். இந்த வனுபவம் விவேகிகளுக்கும் அவிவேகிகளுக்குஞ் சமமாயிருக்கும்.

இந்தப்படி பிராரத்தத்திரயத்தை விசாரித்த பின்பு இச்சையிலாவது, அனிச்சையிலாவது, பரவிச்சையிலாவது ஆசைவந்தாலும் வரட்டும்; அவ் வாசையான இந்தப் பிராரத்தத்திரய வனுபவம் அகங்காரத்துக்கேயன்றி, அகங்காரசாட்சியாகிய நமக் கில்லையென்று ஸ்ரீசற்குருமுன்னிலையில் அகங்காரத்தையுந் தன்னையும் பகுத்தறிந்து அகங்காரத்திற் கூடாம லெவனிருக்கிறானோ, அவனே சுவரூப முக்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

## பிராரத்தத்திரய நிரூபகம்

முற்றிற்று.

---

முப்பத்தோராவது

# சஞ்சிதாதிகன்மத்திரய நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளில் சஞ்சிதாதி கன்மத்திரயங்களை விசாரித்தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியால் அஃதேதெதென்னில்,

உத்தரம். திருஷ்டாந்த பூர்வகமாய் நிரூபிக்கிறோம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஒரு பிராமணனுக்குப் பத்துக்ஷேத்திரமுண்டு. அதிலொவ்வொன்றிக்கு வருஷத்திலாயிரக்கல தானியம் விழுக்காடு பதினாயிரக்கல தானியம் விளையும். அதில் ஆயிரக்கல தானியம் வீட்டுச்சாப்பாட்டுக்கும், ஆயிரக்கல தானியம் விரைமுதலுக்கும், இரண்டாயிரக்கல தானியம் தர்மத்துக்கும், ஆயிரக்கல தானியம் பயிரிடுமாள்களுக்கும், ஆயிரக்கல தானியம் தீவாணத்தாருக்குமாகச் செலவுபண்ணதுபோக, மீந்த தானியத்தைப் பத்திரப்படுத்தி வைப்பான். இப்படியே வருஷா வருஷம் மீந்ததானியங்களைப் பத்திரப்படுத்திக் குறைந்த காலத்தில் விற்போமென்றெண்ணிக்கொண்டிருந்தான்.

இந்தத் தானியத்திற்குச் சஞ்சிதமென்று பெயர். வீட்டுச் சாப்பாட்டுக்கு நிறுத்திய சிலவுமுதலிய தானியத்திற்குப் பிராரத்தமென்று பெயர். முளைபயிர், பெரியபயிர், கதிர்ப்பயிர்களாகிய நன்செய், புன்செய்களுக்கு ஆகாமியமென்று பெயர். இப்படியிருக்க ஒருசமயத்தில் கலகம் வந்து பிறதேசத்தார்கள் மேலிட்டுச் சஞ்சித தானியங்களை

யெல்லாங் கொள்ளையிட்டு நெருப்புவைத்தார்கள். வரப் போகிற ஆகாமியவிளைவு முதலானதுகளெல்லாம் இடைக் கொள்ளைக்காரர்கள் கொள்ளையிட்டுப் பயிர்களையெல்லாங் குதிரைகளுக்கு மாடுகளுக்குமா யறுத்துப்போட் டழித்து விட்டார்கள்.

அதைக்கேட்டு அந்தப்பிராமணன் மிகுந்த விசன மடைந்து கிரகத்திற் சாப்பாட்டுக்கிருந்த பிராரத்ததானி யத்தைப் பூமிக்குள் பத்திரம்பண்ணி நித்தியங் கொஞ்சங் கொஞ்சமா யெடுத்துச் சாப்பிட்டுக்கொண்டு வந்தான். அப்படியிருக்க அவன் பந்துக்கள்வந்து நீ யுன்தேகபோஷ ணைக் கென்னசெய்கிறாயென்று கேட்க, நான் சஞ்சிதமாய் வைத்திருந்த களஞ்சியதானியமெல்லாங் கொள்ளைபோய் விட்டது. வரப்போகிற வாகாமியதானியத்தை இடைக் கொள்ளைக்காரர் கொள்ளையிட்டுப்போனார்கள். வீட்டிற் கொஞ்சம் பிராரத்த தானியங் கட்டுக்கிடையாயிருந்தது. அதில் கொஞ்சங்கொஞ்சம் எடுத்துச் சீவனம் பண்ணிக் கொண்டு வருகிறேனென்று சொன்னான்.

ச-கை. இதினால் என்ன சித்தித்ததென்னில்,

உ-ம். சஞ்சிதாகாமியங்களுக்கு நாசமுண்டாகுமென் றும் பிராரத்தமாத்திரம் புசித்துத் தீரவேண்டுமென்றுஞ் சித்தித்தது. இந்தப்படி தாஷ்டாந்தத்திலும் நிரூபிக் கிறோம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். உலகத்தில் அநாதியான சீவன் புண்ணியபாப கர்மங்களைச்செய்து வருகையில் ஒருநாள்செய்கிற பாவ புண்ணிய கர்மமே வெகு ஜன்மங்களுக்குக் காரணமாயிருக் கும். இப்படியே ஜன்ம ஜன்மங்களிலுஞ் செய்துவருகிற போது அந்தக் கர்மமெல்லாம் ராசிராசியாகக் கூடும். இது களுக்கே சஞ்சிதமென்று பெயர்.

மரணமடைந்தபிறகு உடனே ஜன்மமெடுக்கிற நிமித்தம் அந்தக் கர்மசஞ்சிதத்திற் கொஞ்சங் கிரகித்து அதையனுபவிப்பதற்குக் காரணமான சரீரமேதுவாகிய பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களைச் சரீராகாரமாகப் பரிணமிக்கப் பண்ணி அந்தச் சரீரத்தினாற் சில கர்மங்களைச்செய்து அந்தக் கர்மத்துவாரா சுகதுக்க மனுபவிப்பன். இப்படியனுபவிக்கிறதற்கே பிராரத்தமென்று பெயர். இந்தப் பிராரத்தங்களை யனுபவிக்குமிடத்து மரணபரியந்தஞ் செய்துவருகிற இதாகிதங்களுக்கே ஆகாமியமென்று பெயர். இதுவே மேற் சஞ்சிதத்துக்குக் கட்டுப்படும்.

இப்படியே சீவன் கர்மங்களை யனாதியாய்ச்செய்து வரவர அந்தச் சஞ்சிதம் விருத்தியாகிவரும். ஆதலால் சீவர்களது ஜன்மங்களுக்கு நாசமேயில்லை.

ச-கை. ஆனாலந்த ஜன்மங்களுக்கு அவதி யெப்போது வருமெனில்,

உ-ம். இப்படி கர்மங்களைச்செய்து வருகிறபோது ஒரு ஜன்மத்தில் ஓர் அதிகபுண்ணிய கர்ம பரிபாகபலத்தினால் சீவனுக்குச் சம்சாரபந்தம் வரவொட்டாமற் செய்து கொள்ளவேண்டுமென்கிற விவேகமுண்டாகும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். நான் காமியகன்மங்களையே பண்ணுவேனாகில் சித்தசுத்தி வாராது, சம்சாரபந்தமும் போகாது என்கிற விசாரம்பிறந்து விகிதமான நிஷ்காமிய கன்மங்களையே யீசுவரார்ப்பணமாகச் செய்துவருவான். அந்த நிஷ்காமபுண்ணியபலத்தினால் பக்தியும் அதனாற் சற்குருலாபமும், அதனாற் சிரவணமனன நிதித்தியாசனங்களுஞ் சித்தித்து ஞானத்தைச் சம்பாதித்துக்கொள்ளுவான். அப்படி ஞானம்வந்தபோதே அந்த ஞானாக்கினியினால் சஞ்சிதா

காமிய வஞ்ஞானமெரிந்து பஸ்பமாகிப்போம். அந்த ஞானம் வந்தபின் செய்யப்பட்ட புண்ணியபாவ கர்மங்களெல்லாம் அகர்த்தாவாகிய விவனைப் பரிசிக்கமாட்டாது.

ச-கை. ஆனு லந்தப் புண்ணியபாவங்களுக்குக் கதியேதென்னில்,

உ-ம். அந்த ஞானியைப் பூசித்தவர்களுக்குப் புண்ணியமும், தூஷித்தவர்களுக்குப் பாவமும் போகும். பிராரத்தமாத்திர மனுபவித்துத் தீரவேண்டும். அதற்கு வேறே நாசஞ் சொல்லக்கூடாது. இந்தப்படியே சஞ்சிதாகாமிய பிராரத்தங்களி னுதி யந்தமும் கர்த்தா போக்தாவின் அகமமதைகளும் நன்ருய் விசாரித்து இதுகளெல்லா மகங்காரத்திற்கேயல்லது சாட்சியாகிய நமக்கில்லையென்று ஸ்ரீசற்குரு முன்னிலையில் விசாரித்திருக்கிறவ னெவனே, அவனே கிருதார்த்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

சஞ்சிதாதிகன்மத்திரய நிரூபகம்.
முற்றிற்று.

---

முப்பத்திரண்டாவது

# தார்க்கிகாதிபேத நிரூபகம்.

சங்கை. உலகத்தில் வேதாந்த சாஸ்திரத்துக்கு விருத்தமான காவிய நாடக தர்க்க சப்த மீமாம்சைகளைப் படித்தவர்களுங் கேவலமான கர்மிகளும் முமூட்சுக்களை நானுவித வுபாயத்தினுற் பேதப்படுத்திக் கெடுப்பார்களென்று பெரியோர்கள் சொல்லுகின்ருர்களே ; அஃதெப்படி யென்னில்,

உத்தரம். திருஷ்டாந்தத்தில் ஒரு மகாராஜனானவன் தனது புரோகிதனை யழைத்து எக்கியம் பண்ணுமென் றுக்கியார்பித்துச் சகல பதார்த்தங்களுங் கொடுத்து, அதற் குத் தகுந்த பசு வகப்படாமலிருக்க, அதுதெரிந்து அவ் வரசனானவன், பசுலட்சணமறிந்த வொரு பிராமணனை யழைத்து, அவன்கையிற் சில திரவியங்களைக் கொடுத்துப் பசுவைக் கொண்டுவரும்படி யனுப்பினான்.

அப்படியே நல்லதென்றுபோய் அந்தப் பிராமணன் பசுவுண்டாயிருக்கிற திக்கில் விசாரித்து சகல லட்சணமு நிறைந்த ஒரு பசுவைப்பேசி அதற்கு அவர்கள் கேட்ட திரவியத்தைக் கொடுத்துப் பசுவை யோட்டிக்கொண்டு வரும்போது வழியில், சுங்கக்காரர்கள் கண்டு மறிக்க, அரண்மனைக்குப் போகிறதென்று சொன்னமாத்திரத்தில் ராஜாக்கினைக்குப்பயந்து விட்டுவிட்டார்கள். அதுகண் டிருந்த வொருவன் அந்தச் சுங்கக்காரருக்குப் போதித்து, இது நல்லலட்சணமுள்ள பசுவாயிருக்கின்றது, இதை நாமுபாயத்தினாற் கிரகிக்கலாமென்று சொல்ல, அவர்க ளவ்வுபாய மென்னவென்று கேட்க, ஐயா, நாம் நாலு பேரும் அவன்போகிற மார்க்கத்தில் நாலு நாழிகைவழிக் கொருவராயிருந்து அந்தப்பசுவைப் பேய்நாய் என்று சொல்லுவோம்; அப்படியே நாலுபேருஞ் சொல்லுகிற தினால் அந்தப் பிராமணன் பிரமித்து அந்தப்பசுவை விட்டு விடுவானென்றான். அதுகேட்ட சுங்கக்காரரும் அதற்குச் சம்மதித்துப் பிராமணன் போகிறவழியில் நாலுபேர் நாலிடத்தி லிருந்தார்கள்.

பிற்பாடு அந்தப்பிராமணன் பசுவைப் பிடித்துக் கொண்டுபோகிறதைப்பார்த்து, முன்னாக விருந்தவன் ஓய் பிராமணா! பிராமணர்களுக்கு நாய்வளர்ப்பது உசித மல்லவே; அதிலும்மனுஷரைக் கடித்துக் கொல்லப்பட்ட

பேய்நாயை வளர்க்கலாமா, உமக்குத் தெரியாதா, ஒரு நல்லநாயகப்படாமற்போச்சுதாவென் றிப்படியனேகமாகச் சொல்லி, மேலுமிதுவெல்லாரையுங் கடிக்கிறதாகத் தோற் றுகிறது; என்னிடங்கொண்டு வரவேண்டாமென்று சொல் லிப் பயந்தவனைப்போ லோடிப் போனான். அதுகேட்ட பிரா மணன் ஓ! ஓ! இவனுக்குப் பயித்தியம்போற் காண்கிறது. இவ்வளவு லட்சணமுள்ள பசுவைப் பார்த் திப்படியேன் சொல்லுகிறானென்று அவன் சொல்லைச் சட்டைபண்ணமற் செவ்வையாய்ப் போகிறபோது,

அவ் விரண்டா மனுஷனு மந்தப் பிராமணனைக்கண்டு, பேய்நாயென்று முன்சொன்னவனைபோலவே சொல்லி யோடிப்போனான். அதுகேட்டு அந்தப் பிராமணனுந் திடுக்கிட்டு, ஐயோ! இதுவென்ன ஆச்சரியம்! நாம் பேய் நாயைத்தான் வாங்கி மோசம் போனோமோவென்று மனத் திற் சம்சயமுண்டாகி, இந்தப் பேய்நாய் நம்மை யெங்கே கொல்லுகிறதோவென்று, பதறிப் பதறி, அடிக்கடி யந்தப் பசுவைப் பார்த்துக்கொண்டு, மகா பயத்துடன் அப்பால் நடந்துபோகும்போது மூன்றாமிடத்திருந்தவ னிவனைக் கண்டு, இவன் தூரத்தில் வரும்போதே ஓய் பிராமணரே யென்றுகூவி, நீர் பிடித்துவருகிற பேய்நாயை நம்மிடத்திற் கொண்டுவரவேண்டாமென்று தானுமோடித் தன்பக்கத் திருந்தவர்களையு மோடும்படி செய்தான்.

அதைக்கண்டு அந்தப் பிராமணன் திகிலடைந்து, ஓ! ஓ! நாம் பேய்நாயைத்தான் யுக்தமாய் வாங்கிவந்தோம், இதிற் சந்தேகமேயில்லையென்று விசனத்தையடைந்து நாம் இந்தப் பேய்நாயை விட்டுவிட்டுப் போகலாமென்று நினைத் தால், இது பிறகே துறத்திவந்து கடிக்குமே யென்கிற நிச் சயங்கொண்டு அந்தப் பசுவை விட்டுவிடுகிற வுபாயசிந்தை

யுடன் யோசித்துக்கொண்டு, அப்பால் போகும்போது நாலாமிடத்தி லிருந்தவன், இவனைப்பார்த்து, ஓய் பிராமணா! வுமக்குப் பயித்தியமோ தெரியவில்லை யென்காணும் இந்தப் பேய்நாயைப் பிடித்துக்கொண்டு வருகிறீர்? இது எவர்களையுங் கடித்துக் கொல்லுமே, யுமக்குத் தெரியாதா வென்றுசொல்லி விலகிப்போனான்.

அதுகேட்டு அந்தப்பிராமணன் பயந்து,அப்பா, நான் தெரியாமல் இதை வாங்கிவந்தேன், இதை என்னிடத்தி லிருந்து விடுவித்தால் உனக்கு வெகு சுகிர்தமுண்டாகு மென்று பரிதாபமாய்க் கெஞ்சினான். அப்படிகெஞ்சின சொல்லைக்கேட்டு, ஐயா! எனக்கு உன்னிடத்தில் வரப் பயமாயிருக்கின்றது,அதை விடுகிற வுபாயமாத்திரஞ் சொல்லுகிறேன், என்னவென்றால், உன்கைக் கயிற்றைப் பேய் நாயுடனே கூட்டி அதோவிருக்கிற மரத்தடியிற் கொண்டு போய் நிறுத்தி, அந்தக்கயிற்றை விடாமல் அந்தமரத்தை மூன்று பிரதட்சணஞ்செய்து முடிபோட் டோடிப்போ மென்று சொன்னான்.

அதுகேட்ட பிராமணன் அப்படியே செய்துவிட்டு இப்பால் வந்து அப்பா, உன்னுடைய சகாயத்தினு லின்று பிழைத்தேன், நீ இன்றைக்குப் பிராமணனை ரட்சித்தாய், துன்மரணத்தினால் நான் இறவாதபடி யென்னைக் காப்பாற்றினாயே யென்று பலவாகத் தோத்திரஞ்செய்து, அவனிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு, இன்றைக்கு நமக்குப் புனர்ஜனனமாச்சுது, இனிமேற் பசுக்கொள்ளப்போகப் படாதென்று நிச்சயித்துக்கொண்டு தன்னுடைய ஸ்தானம் போய் சேர்ந்துவிட்டான்.

இந்தப்படி அந்தவஞ்சகர்கள் பிரத்தியட்சமாப்ப் பரிக்ஷித்துக்கொண்ட பசுவாயிருக்க அதை தாங்கள் கிர

கிக்கிற நிமித்தம் பேய் நாயாக்கிப் பிராமணனது புத்தியை வெருட்டி மாறுபடுத்தினது போலத் தார்க்கிக சப்த மீமாம்ச கர்மிகள் முமூட்சுக்களை யழைத்து அடா, கீதை களை நீயேன்படிக்கிறாய்? சந்நியாசிகளிடத்தி லுனக்கென்ன காரியம்? உபநிஷத்தேன் சொல்லிக்கொள்ளுகிறாய்? உனக் கெந்தப் பாவ கர்மமோ ஸ்திரமாயிருக்கின்றது? நாரதர் முதலிய ரிஷியீஸ்வரர்களுக்கும் இந்திரன்முதலிய தேவர் களுக்குங் கூட ஞானமில்லையென்று புராணசித்தமிருக் கின்றது; ஏக ஜீவபட்சமாகியபேர்களுக்குச் சர்வாத்மனை ஞானங்கூடாதென்றும், சந்நியாசம் வாங்கிக் கெட்டுப் போகிறார்களென்றும், கலியுகத்திற் சந்நியாசமே கூடா தென்றுஞ் சாஸ்திரசித்தமிருக்கின்றது; இவர்களெல்லாந் திரவிய மார்ச்சிக்கிற நிமித்தம் சந்நியாசம்பெற்றார்கள்.

நீயாவதேது உனக்கு ஞானமேது? நாம் சகலசாஸ் திரமும் படித்தோம், படித்தநமக்கும் ஞானங்கிட்டா தென்று தீர விசாரித்தறிந்து கர்மமே பண்ணிவருகிறோம். உனக்கு முத்திவேண்டுமானால் தர்க்கம்படி, இல்லாவிட் டால் சப்தம்படி, இல்லாவிட்டால் காவியநாடக கர்மங் கள்படி, கீதைகளையு முபநிஷத்துக்களையுஞ் சர்வாத்மனை ஸ்மரிக்கவேண்டாம், உனக்கு ஞானம் போதிக்கிறோ மென்கிற பேர்களை மகா வஞ்சகரென்றேயறி, அவர்களுக்கு ஞானமுண்டாயிருந்தல்லவா உனக்கு மூலமான ஞானத் தைச் சொல்லவேண்டும், அவர்களுக்கு முதலாய் ஞான சாதனமே யில்லையே, அவர்கள் க்ஷணகாலம் வெய்யிலிற் பொறுக்கமாட்டார்கள், க்ஷணமாத்திரஞ் சீதஞ்சகிக்க மாட்டார்கள்.

அவர்கள் நாங்களே ஞானிகளென்று பெயரிட்டுக் கொண்டு திரிகிறார்களே யல்லாமல் ஞானலட்சணமாகிய திடப்பிரக்ஞைக ளவர்களிடத்திற் சற்றுங் காணோம்;

கோபதாபங்களே யதிகமாயிருக்கின்றது, ஒருசுலோகத்துக் கர்த்தங் கேட்டால் தெரிந்து சொல்லமாட்டார்கள், இவர்களது வஞ்சகத்துக்குள்ளா யனேகம் புருஷர்கள் கெட்டுப் போனார்கள், நீயு மெங்கே கெட்டுப் போகிறாயோ வென்றுன்பேரில் தயவுபிறந்து இத்தனைதூரஞ் சொன்னோம், நீயும் எங்களைப்போல் நன்றாய் விசாரித் தறிந்து இதுமுதல் வேதாந்திகளுடைய சங்கத்தை விட்டுவிடவேண்டியது.

உனக்கு முத்திவேண்டியதாயிருந்தால் நா மறிந்திருக்கிற ரகசியமான மந்திரங்களி லொன்றை யுபதேசிக்கிறோம், அந்த மந்திர மாத்திரஞ் சார்வதா ஜபம்பண்ணிக் கொண்டுவந்தால் இகத்தில் சர்வாபீஷ்டமு முண்டாகிறதன்றிக் கடைசியில் மோட்சமுஞ் சித்திக்கும், உனக்கு நூறுவிதத்திற்சொன்னோம், எங்கள்சொற்படி கேட்டால் பிழைக்கலாம், கேளாவிட்டாற் சந்தேகமில்லாமற்கெட்டுப் போவாயென்று இந்தப்படியே பலபலவிதமாக அவ்வஞ்சகமான சுங்கக்காரர்களைப்போல வஞ்சகமுள்ள விவர்களும் முமூட்சுக்களை வெருட்டிக் கெடுப்பார்கள்.

ஆதலால் முமூட்சுவானவர்கள் நன்றாய் விசாரித்த யுக்திபுத்திகளால் சுருதி குருவாக்கொத்த வேதாந்த சாஸ்திரமே தனக்குத்தாரக மென்றும், மற்றைச் சாஸ்திரங்களை விட்டுச் சம்சயமறச் சுவரூபலட்சணத்தை யுபதேசஞ் செய்யப்பட்ட குருநாதனே தனக்குச் சற்குருவென்றும், மற்றவர்களெல்லாம் வஞ்சகரென்றும் விசாரித் தறிந்து, வேதாந்த சாஸ்திரத்தினிடத்தும்; ஆத்மாவினிடத் தத்தியாசமும், பிரதிவிம்ப லட்சணமும் ஆத்மநிச்சயசொரூபமு முபதேசம்பண்ணப்பட்ட ஸ்ரீசற்குருவினிடத்திலும் விசுவாசம்வைத்து, குருபணிவிடைசெய்து, சிரவணாதிகளை யையமறக்கேட்டு, ஞானத்தைச் சம்பாதித்துக் கிருதார்த்த

ளுக வேண்டுமென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதி களிற் சொல்லப்படுகின்றது இதிற் சம்சயமில்லை சித்தம்.

## தார்க்கிகாதிபேதநிரூபகம் முற்றிற்று.

---

முப்பந்துமூன்றாவது

# பஞ்சவிதமுத்தி நிரூபகம்.

---

சங்கை. சுருதியாதிகளிற் சொல்லப்படுகிற பஞ்சவித முத்தியாவ தேதென்னில்,

உத்தரம். சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய, கைவல்யமென் றைந்துவிதம்.

ச-கை. சாலோகமுத்தியாவ தேதென்னில்,

உ-ம். உபாசனுமகிமையினாற் பிரமலோகம்போய்ப் பிரமதேவர் சமுக மில்லாம லொரு பிறதேசத்திலிருந்து கொண்டு சமஸ்த போகங்களையு மனுபவித்துக்கொண் டிருப்பது.

ச-கை. சாமீபமுத்தியாவ தேதென்னில்,

உ-ம். பிரமதேவர் சமுகங் கிடைத்துச் சமஸ்த போகங்களையு மனுபவித்துக்கொண்டிருப்பது.

ச-கை. சாரூபமுத்தியாவ தேதென்னில்,

உ-ம். பிரமதேவருடைய ரூபத்தைப் பெற்றுச் சமஸ்த போகங்களையு மனுபவிக்கிறது.

ச-கை. சாயுச்சியமுத்தியாவ தேதென்னில்,

உ-ம். பிரமதேவருக்குண்டான அதிகார ஐசுவரியம் பெற்று சமஸ்த போகங்களையு மனுபவித்துக்கொண்டிருக்

கிறது. இந்த நாலுபேருக்கும் முத்தியேகரூபமா யிருந்த போதிலும் உபாசனு தாரதன்மியத்திஞு லவாந்திரபல தார தன்மியங்களுண்டு.

ச-கை. கைவல்யமாவ தேதெதென்னில்,

உ-ம். முமூட்சுவானவர்கள் சாந்திபாதி குணங்க ளுடன் கூடிக் குருநாதனிடத்தில் சம்சயமின்றிச் சிரவணுதி களைச்செய்து ஞானவடிவமென்கிற தன்னைத்தானே சம் பாதித்துச் சச்சிதானந்த சொரூபமான வாத்மாவை நானென்றறிந்த பிறகு சொரூபமாத்திரமா யிருக்கிறதே கைவல்யமென்று சொல்லப்படும். இந்தக் கைவல்யமுத்தி தனது விசாரத்திஞற் பிறந்த ஞானத்திஞல் வரவேண்டு மன்றிக் கர்மவுபாசனைகளால் வரமாட்டாது. ஸ்ரீசற்குரு தரிசனத்திஞல் மலமாயை கன்மங்கள் நீங்குமேயல்லது வேறே ருபாயத்திஞு மெவ்வளவு நீங்காது பிரமலோகத் திலிருக்கிறவர்களும் பிரமதேவரிடத்திற் கேட்டு விசா ரத்திஞலேயே ஞானஞ் சம்பாதித்து மோட்சமடைந்தார்க ளென்று சுருதிகளிற் சொல்லப்படுகின்றது.

ச-கை. இதனு லென்ன சித்தித்ததென்னில்,

உ-ம். சமஸ்தபிராணிகளுக்கும் ஞானத்திஞல் முத்தி யன்றிக் கர்மயோக வுபாசனைகளால் முத்தியில்லையென்று சித்தித்தது. ஆதலால் சமஸ்தமான பேர்களுக்கும் ஞானத் திஞலேயே முத்தியென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

## பஞ்சவிதமுத்திநிரூபகம்

முற்றிற்று.

---

முப்பத்துநான்காவது.

# பிரமவித்தாதிசதுஷ்டய நிரூபகம்.

---

சங்கை. உலகத்தில் ஞானியானவர்கள் சார்வதா சமாதி நிஷ்டையிலிருக்கவேண்டுமென்றும், யோகமில்லாவிட்டால் சிரவணத்தினுல் வருகிற ஞானந் திடமாகாதென்றும், விவகாரத்துடன் கூடியிருப்பவர்களுக்கு ஞானங் கூடாதென்றும், அவிவேகிகளுக்குள் சிலருக் கிப்படிப் பட்ட சம்சயமுண்டாகும். அந்தச் சம்சயமும் நிவிர்த்திக்கும்படி பிரமவித்தாதி சதுஷ்டயருடைய திதிப்பிரகாரமும் விசாரித் தறியவேண்டுமென்று பெரியோர்கள் சொல்லுகிறபடியால் பிரமவித்துவின் திதியெப்படிப்பட்டதென்னில்,

உத்தரம். தனக்குக் காலத்திரயத்திலு மொன்றிலும் பாத்தியத்வமில்லாமல் பாத்தியத்வமும் சொப்பனம்போற் சார்வதா பார்த்துக்கொண்டிருந்து யெக்கியாதி கர்மங்களும், அதிதி பூசைகளும், சுதர்மமான சந்தியாவந்தனக் கிரியைகளும், விடாமற் பண்ணிக்கொண்டிருந்தபோதிலுந் தான் சாட்சியே; தானொரு கர்மமும் பண்ணுகிறவனல்ல; அகங்காராதிக ளதனதன் விஷயஙகளிற் பிரவிர்த்திக்கின்றதல்லது, தான் அசங்கனே, உபரதியைக் குறித்துத் தனக்குச் சாட்சித்வமுங் கற்பிக்கப்பட்டதென்கிற திடசித்தத்துடன் சகல விவகாரங்களுஞ் செய்துவருகின்றவனுக்குப் பிரமவித்தென்று சொல்லப்படும்.

ச-கை. பிரமவரன் தன்மை யெவ்வகைப்பட்டதென்னில்,

உ-ம். பாகியவிவகாரமெல்லாந் துக்கமென்றறிந்து விவகாரங்களில் நமக்கெவ்வளவும் பிரயோசனமில்லையென்று யூகித்துணர்ந்து, முன்பிருந்த விவகாராதிகளை விட்டொழிந்து, அந்தர்முக நாட்டமாய் நித்திரைசெய்பவன்போலிருந்து காலத்திரயத்திலும் பிரபஞ்சமேயில்லை; தோற்றினபோதிலு மித்தையே எனக்குச் சாட்சித்வமுங் கற்பிதமே யென்கிற நிச்சயத்துடன் தன்னைவந் தடுத்த முமுட்சுக்களுக் குபதேசம்பண்ணிக்கொண்டு, அநிர்வாச்சியமான சவுச அன்னபானாதிக் கிரியைகளில் மாத்திரம் பிரவிருத்தியுடையவனாய், சகலமு மகங்கார வியாபாரங்களென்று திடசித்தனாய் தானொரு கர்மங்களுஞ் செய்தவனல்லவென்று சம்சயமின்றி நிச்சயங்கொண்டவனாய் பாகியவியாபாரமின்றிச் சார்வதா ஏகாந்த நிஷ்டையிலிருக்கின்றவனுக்குப் பிரமவரனென்று சொல்லப்படும்.

ச-கை. பிரமவரியான் தன்மை யெப்படிப்பட்டதென்னில்,

உ-ம். பாகியமெல்லாந் துக்கமென்ற திடங்கொண்டு பாகிய ஸ்புரணத்தைவிட்டுச் சார்வதா நிதித்தியாசனபரனாயிருந்து ஒருவராற் பிரேரிக்கப்பட்டு அன்னபானாதிக் கிரியைகளைச் செய்தபோதிலுஞ் சகல விவகாரமு மகங்காரமே செய்கிறதென்றும், தானொரு வியாபாரமுஞ் செய்யவில்லையென்றும், சாட்சியுஞ் சாட்சித்வமுங் கற்பிதமேயென்றும், அசங்கனாகிய தனக்கு ஒன்றிலுஞ் சம்பந்தமில்லையென்றுந் திடநிச்சயங்கொண்டு, சகல சம்சய ரகிதனாய் சார்வதா நிதித்தியாசன பரனாயிருப்பவனுக்குப் பிரமவரியானென்று சொல்லப்படும்.

ச-கை. பிரமவரிட்டன் தன்மை யெத்தன்மைத்தென்னில்,

உ-ம். பாகியமெல்லாந் துக்கமென்று விட்டுவிட்டுச் சகல சம்சய ரகிதனாய் சார்வதா நிருவிகற்ப சமாதிபரனாய் அந்தர்வியாபாரமும் பாகியவியாபாரமு மறந்து, சுவரூபத்தில் மக்கினசித்தமாய் சுதந்தரத்திலாகிலும் பிறரைக்குறித்தாகிலும் ஒரு பிரவிர்த்தியில்லாமல் சுகமாயிருப்பன். அவனுக்குச் சர்வார்த்மனாய் அன்னபானாதிக் கிரியைக ளில்லை. அனேக புண்ணியகர்ம பரிபாகத்தினாற் சமாதி சித்தித்தபடியினாலும், சகல துக்கங்களும் நசித்துப்போனபடியினாலும் சதா நிருவிகற்பசமாதி நிஷ்டையிலிருப்பன். அந்த மகாத்மாவுக்குப் பிரமவரிட்டனென்று சொல்லப்படும். இவர்கள் நால்வருக்குந் தாரதன்மியத்தினால் யுக்தமான சுகமுண்டாயிருந்த போதிலும் முத்தி மாத்திரஞ் சமானமாகும்.

——ச-கை. ஆனா லிவர்களிப்படி யிருப்பதற்குப் பிரயோசனமேதெனில்,

உ-ம். கர்மம் நானாவிதமாகையால் திர்ஷ்டசவுக்கியப் பிரயோசன மெப்படியோ, அப்படியே யிருப்பார்கள். ஞானிகள் இந்தப் பிரகார மிருக்கவேண்டுமென்று ஒரு நியமமுஞ் சொல்லக்கூடாது.

ச-கை. இதற்குப்பிரமாண மேதென்னில்,

உ-ம். ஜனகர் அரசாட்சி செய்து கொண்டிருந்தாரென்றும், ஜட பரதர் அசங்கனாய்ச் சஞ்சரித்தாரென்றும், சுகர் உபநயன தற்பூர்வமே கிரகத்திலிருந்து வெளிப்பட்டாரென்றும், தூருவாசர் சிலரைச் சபித்தார், சிலரை யனுக்கிரகித்தாரென்றும் சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிகளிற் சொல்லப்படுகின்றன. கர்மங்களும் நானாவிதமானதால் ஞானிக ளொருவரிருந்தபடி யொருவ ரிரார்களென்பதற்குச் சுருதியாதிகளுஞ் ஜனகாதிகளுமே பிர

மாணம். விவேகிகளானவர்கள் ஞானிகளிப்படியிருக்கிறார்கள், அப்படியிருக்கவில்லை, இப்படியிருக்கவேண்டும், அப்படியிருக்கக் கூடாதென்று சந்தேகிக்க வேண்டுவதில்லை. கர்மத்துக்கன்னியமாய் அவரவர்களுடைய கர்மம் எப்படி நடத்துவிக்குமோ, அப்படியே யிருப்பார்களென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

பிரமவித்தாதிசதுஷ்டய நிரூபகம்
முற்றிற்று.

---

முப்பத்தைந்தாவது

# சப்தாவஸ்தை நிரூபகம்.

---

சங்கை. உலகத்தில் சாஸ்திரிகளாகிய சிலபேர் சமஸ்த வாக்கியங்களும் பரோட்சஞான வுற்பத்தியேயன்றி, அபரோட்ச ஞானவுற்பத்தியல்லவென்றும், சார்வதா அபரோட்ச ஞானங்களுக்கு விஷய னல்லவென்றும், சொப்பிரகாசனாகிய வாத்மாவுக்கு ஞானஞ்ஞான வாசிரயங்களான யுக்தங் கூடாதென்றுஞ் சொல்லுவார்கள். அவர்களது வார்த்தையைக்கேட்டு அனேகர் பிரமிப்பார்கள். அப்படி பிரமிக்காதபடி சபதாவஸ்தைகளை விசாரித்தறிய வேண்டுமென்று பெரியோர்கள் சொல்லுகிறபடியால் ஆத்மாவுக்குச் சப்தாவஸ்தைகளாவ தேதென்னில்,

உத்தரம். அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம், பரோட்சம், அபரோட்சம், துக்கநிவிர்த்தி, தடையற்ற வானந்தமென்று சொல்லப்படும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் பரமஹீம்பரென் றொரு சந்நியாசியுண்டு. அவருக் கனேகஞ் சிஷர்களிருந்தார்கள்: அவர்களிற் பதின் மரை யழைத்து ஒருகாரியநிமித்தம் ஒருவூருக் கனுப்பிவைத்தார். அவர்கள் போகும்போது மார்க்கத்தில் குறுக்கேயிருக்கிற வொரு ஆற்றிலிறங்கி அந்தக்கரை யேறியபிறகு, அவர்களிற் பிரதானமானவன் சம்சயங்கொண்டு, நாம் பத்துப்பேரும் கரையேறினோமோ, இல்லையோவென் றெண்ணிப் பார்த்துத் தன்னை யெண்ணாமல் ஒன்பதுபேரிடத்திற் சித்தம் வைத்தவனாய், அவர்களைப் பிரத்தியட்சமாகப் பார்த்திருந்தும் அஞ்ஞானத்தினால் கணிதகர்த்தாவாகிய தன்னைத் தசமனென்றறியாமல் மறந்து நிற்பதே யஞ்ஞானம்.

ச-கை. ஆவரணமாவ தேதென்னில்,

உ-ல். அசத்தாவரணம், ஆபாசாவரணம் என்றிரண்டு விதம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். தசமனானவன், தான் சுயந் தசமனா யிருந்து கொண்டே, தசமனிருக்கிறானோவென்று கேட்டது அசத்தாவரணம். தசமனைக்காணோம்; இருந்தால் தோற்றலாமே; தோற்றவில்லை யாகையினால், தசமனில்லையென்றே சொல்லுகிறது ஆபாசாவரணம். இவ்விவகாரத்திற்குக் காரணமாயிருக்கிறதெதுவோ, அதுவே யஞ்ஞானகாரியமான வாவரணம்.

ச-கை. விட்சேபமாவ தேதென்னில்,

உ-ம். தசமன் ஆற்றிலிறந்தானென்று நிச்சயித் தழுகிறதே விட்சேபம்.

ச-கை. பரோட்சமாவ தேதென்னில்,

உ-ம். தசமனிப்படி யழும்போது ஆப்தன்வந்து ஏனழு கிறாய், அழாதே தசமன் செத்துப்போகவில்லை, இருக்கிறா னென்று சொல்லச் சாஸ்திராதிகளாற் சொர்க்காதிகளை யறிந்ததுபோல அவ் வாப்தவாக்கியத்தினால் பரோட்ச மாகத் தசம னிருக்கிறானென் றறிந்ததே அசத்தாவரண நிவர்த்தகமான பரோக்ஷ ஞானம்.

ச-கை. அபரோக்ஷமாவ தேதென்னில்,

உ-ம். அவ்வாப்தன் தசமனுக்கு ஒன்பதுபேரையு மெண்ணிக்காட்டிப் பத்தாவான் நீயேயென்று காட்ட, அவனு மப்படியே யெண்ணித் தானே தசமனென்பதிற் சந்தேகமில்லை யென்றறிந்து, அஞ்ஞானத்தினாற் பிரமித்தே னென்றுங் காலத்திரயத்திலுந் தான் தசமனென்பதிற் சந்தேக மில்லையென்றுந் தன்னை யுள்ளபடி யறிந்ததே ஆபா சாவரண நிவர்த்தகமான அபரோக்ஷஞானம்.

ச-கை. துக்கநிவிர்த்தியாவ தேதென்னில்,

உ-ம். முன்னிருந்த ரோதனாதிகளைவிட்டதே துக்க நிவிர்த்தி.

ச-கை. தடையற்ற வானந்தமாவ தேதென்னில்,

உ-ம். அந்தத் துக்கம் நீங்கினவுடனிருந்த சுதாசவுக்கிய சுகமே தடையற்ற வானந்தம். இதுகளே சப்தாவஸ்தை களாகும்.

ச-கை. ஆனால் தாஷ்டாந்தத்தி லெப்படியென்னில்,

உ-ம். சிதாபாசன் சமுசாரத்தி லாசத்தியுடையவனாய் ஒரொரு பொழுதானாலுந் தன் சுவரூப பூத சொப்பிரகாச னாகிய கூடஸ்தனை யறியாதிருப்பதே யஞ்ஞானம்.

ச-கை. ஆவரணமாவ தேதென்னில்,

உ-ம். ஒருவன் கூடஸ்தனை யறிவையாவென்று கேட்க, கூடஸ்தனென்றொருவனிருக்கிறானோ? இல்லையே, உண்

டாயிருந்தால் தோற்றவேண்டுமேயென்று சொல்லுவதே யஞ்ஞானகாரியமான வாவரணம்.

ச-கை. விட்சேபமாவ தேதென்னில்,

உ-ம். நான் கர்த்தா, போக்தா, சுகி, துக்கி, மனுஷன், பிராமணனென்கிறது இந்தத் தேகமேயன்றி, வேறே கூடஸ்தனில்லையென்று சொல்லுகிறதே விட்சேபம்.

ச-கை. பரோக்ஷமாவ தேதென்னில்,

உ-ம். ஸ்ரீசற்குரு வுபதேசத்தினால் கூடஸ்தனொருவ னுண்டென்றறிகிறதே பரோக்ஷஞானம்.

ச-கை. அபரோக்ஷஞானமாவ தேதென்னில்,

உ-ம். ஸ்ரீசற்குரு சந்நிதானத்தில் சிரவணாதிகள் செய்து அதனாலுண்டான பரஞானத்தினால், தான் கூடஸ்த னென்பதிற் சம்சயமில்லையென்று பிரத்தியட்சமாய்க் காண் பதே அபரோக்ஷஞானம்.

ச-கை. துக்கநிவிர்த்தியாவ தேதென்னில்,

உ-ம். இப்படி நிருவிகாரனாய், அசங்கனாகிய கூடஸ்த சொரூபமேதானென் றறிந்தபிறகு கர்த்ருத்வாதி சோக முதலானதுகள் விட்டிருப்பதே துக்கநிவிர்த்தி.

ச-கை. தடையற்ற ஆனந்தமாவ தேதென்னில்,

உ-ம். கர்த்தவ்ய வுற்பத்தி யெம்மாத்திர மிருக் கின்றதோ, அதுகளெல்லா மென்னாலேயே செய்யப்பட்ட தென்றும், அதனாலடையப்பட்ட பல வுற்பத்திக ளெவ் வளவிருக்கின்றதோ, அதுகளெல்லாம் என்னாலேயே யடை யப்பட்டதென்றுஞ் சந்தோஷப்படுகிறதே தடையற்ற வானந்தமென்றுஞ் சொல்லப்படும். இவற்றுள் ஆதியான மூன் றவஸ்தையும் பந்தத்திற்கு ஏது; மற்ற நான்கவஸ்

தையும் மோட்சத்திற்கு ஏதுவென்று விசாரித்தறிந்து இந்தச் சப்தாவஸ்தைகளும் என்னிடத்தி லாரோபிக்கப் பட்ட அகங்காரத்துக் கன்றிச் சாட்சியர்கிய வெனக்கில்லை யென்று ஸ்ரீசற்குருமுன்னிலையில் சம்சயவிபரீதமற விசாரித்தறிந்தவனே சீவன்முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணகமாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

சப்தாவஸ்தை நிரூபகம்
முற்றிற்று.

---

முப்பத்தாறவது.

# தாதாத்மியத்திரய நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளில் தாதாத்மியத்திரயங்களை விசாரித்தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியால் அவை யேதென்னில்,

உத்தரம். சகஜ தாதாத்மியம், கர்மஜ தாதாத்மியம், பிராந்திஜ தாதாத்மியம் என மூன்றுவிதமாயிருக்கும்.

ச-கை. ஆனற் சகஜதாதாத்மிய மெப்படியென்னில்,

உ-ம். சித்து அகங்காரத்திற் பிரதிபிம்பித்து, அந்தப் பிரதிபிம்பமும் அகங்காரமுங் கூடித் தப்தாய பிண்டம்போலேகரூபமாய் அந்தச் சித்தைப்போலவே தோற்றும். அந்தச் சிற்பிரதிபிம்பத்துடன் கூடிக்கொண்டிருக்கு மகங்காரத்திற்கே சகஜ தாதாத்மியமென்று சொல்லப்படும்.

ச-கை. சகஜ தாதாத்மியமென்று பெயரேன் வந்ததென்னில்,

உ-ம். பிறக்கும்போதே யிரண்டுங் கூடப் பிறந்தபடி யினு லிவ்விரண்டினுடைய தாதாத்மியமே சகஜ தாதாத்மியமென்று பெயராயிற்று.

ச-கை. கர்மஜ தாதாத்மிய மெப்படி யென்னில்,

உ-ம். சிற்பிரதிபிம்பத்துடன் கூடிக்கொண்டு சித்தைப் போலவே தோற்றப்பட்ட வகங்காரத்திற்குத் தூலசரீரத்துடன்கூடச் சம்பந்தம்வந்தபோது கர்மஜ தாதாத்மியமென்று சொல்லப்படும்.

ச-கை. கர்மஜ தாதாத்மியமென்று பெயரேன் வந்ததென்னில்,

உ-ம். சாக்கிரபோகப் பிரதானமான கர்மம் பிறந்தபோது அந்தக்கர்மஜ தாதாத்மியம் பிறக்கின்றது. அந்தக் கர்ம நசித்தாலந்தக் கர்மஜ தாதாத்மியமும் நசித்துப் போகின்றது. அதனுற்சிற்பிரதிபிம்பத்துடன் கூடியிருக்கிற வகங்காரத்திற்குத் தூலசரீரத்துடன் கூடிய தாதாத்மியமே கர்மஜ தாதாத்மியமென்று பெயராயிற்று. கர்மமுண்டானுற் கர்மஜ தாதாத்மியமுண்டு. கர்மமில்லாமற்போனல் கர்மஜ தாதாத்மியமில்லை யென்பதற்குச் சாக்கிர்த்திலுஞ் சுழுத்தியிலும் பார்த்துக்கொள்ள வேண்டியது. இந்தத் தாதாத்மியத்தினுலேயே தூலதேகமுஞ் சேதனம்போலவே தோற்றுகின்றது.

ச-கை. பிராந்திஜ தாதாத்மிய மெப்படி யென்னில்,

உ-ம். நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரமசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி யென்கிற சித்தவிருத்தியுடன் கூடியிருக்கிற வகங்காரத்திற்கு அகஞ் சத்தார்த்தமான சாட்சியோடுங் கூடிய தாதாத்மியம் பிராந்திஜ தாதாத்மியமென்று சொல்லப்படும்.

ச-கை. பிராந்திஜமென்று பெயரேன் வந்ததென்னில்,

உ-ம். சர்வாபீஷ்டமான வாத்மசொரூபத்தை நானென்றறியாமல் இப்படி பிராந்தியினுல் வந்தபடியா லிதற்குப் பிராந்திஜ தாதாத்மியமென்று பெயராயிற்று.

ச-கை. இதுகளுக்கு நிவிர்த்தி யெப்போது வருமென்னில்,

உ-ம். சம்பந்தங்களான சிற்சாயாவகங்காரமா யெந்தமட்டு மிருக்கின்றதோ அந்தமட்டுஞ் சகஜ தாதாத்மியம் பிராந்திஜ தாதாத்மிய மிரண்டுக்கும் நிவிர்த்தி வரமாட்டாது. விதேக கைவல்பத்தில் அத்தியந்த நிவிர்த்திவரும். கர்மஜ தாதாத்மியமோவென்ருல் பிரதிதினமும் போகப் பிரதானமான கர்மத்தினுற் பிறக்கிறபடியினுலும், அந்தக் கர்மமுஞ் சுழுத்தியில் நாசப்படுவதினுலும் இதற்குப் பிரதி தினமுஞ் சர்வானுபவமாய் சுழுத்தியில் நாசங் கண்டு கொள்ளவேண்டியது. பிராந்திஜ தாதாத்மியமும் நானே பிரமமென்கிற ஞானமுண்டான தக்ஷணம் நசித்துப்போம்.

ச-கை. இதற்குப் பிரமாண முண்டோவென்னில்,

உ-ம். வித்தியாரண்ய சுவாமிகள் திருக்கு திரிசிய விவேகமென்கிற கிரந்தத்தில் இப்படியே நிரூபித்திருக்கின்ருர். நம்மால் நிரூபிக்கப்பட்டதெல்லாம் நமது சுவானுபவமும், ஈஸ்வரவாக்கியமாகிய வேதாந்த வுபநிஷத்துகளும் பூர்வாசாரியார்கள் நிரூபித்திருக்கிற சாஸ்திரங்களும் ஒன்றுபட வனுபவத்திற் கண்டே நிரூபித்ததென் றறியத் தக்கது. இந்தத் தாதாத்மியத் திரயங்களை ஸ்ரீசற்குரு நாதன் முன்னிலையில் நன்ருய் விசாரித்தறிந்து, இந்தத் தாதாத்மியத் திரயங்க ளகங்காரத்திற்கேயல்லது, சாட்சியாகிய நமக்கில்லையென்று எவ னறிகிருனே, அவனே

யசங்களுகிய பரமுத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுகமாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

தாதாத்திரய நிரூபகம்
முற்றிற்று.

---

முப்பத்தேழாவது

# ஜீவேஸ்வரசொரூப நிரூபகம்.

---

சங்கை. ஜீவனுவ தாரென்னில்,

உத்தரம். அந்தக்கரணம். அதிஷ்டான சைதன்யம், அந்தக்கரண பிரதிபிம்ப சைதன்னியம் இம்மூன்றுங் கூடிச் ஜீவனென்று சொல்லப்படும்.

ச-கை. அப்படி சொல்லுவானேன்? கேவல மந்தக் கரணத்திற்கே ஜீவத்துவஞ் சொல்லுவோமே யென்னில்,

உ-ம். கடத்துக்குஞ் ஜீவத்துவம் வரவேண்டும். அப்படி கூடாததால் கேவலமான வந்தக்கரணத்திற்குச் ஜீவத் வஞ் சொல்லக்கூடாது.

ச-கை. கடஞ் சொச்ச திரவிய மல்லாதபடியினுலும், அந்தக்கரணஞ் சொச்ச திரவியமானபடியினுலும் அந்தக் கரணத்திற்குச் ஜீவத்துவஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். தர்ப்பணுதிகள் சொச்ச திரவியமானதா லது களுக்குள் ஜீவத்துவம் வரவேண்டும். அப்படி கூடாத படியினுல் அந்தக்கரணஞ் சொச்ச திரவியமானபோதிலுங் கேவலம் அந்தக்கரணத்திற்குச் ஜீவத்வஞ் சொல்லக் கூடாது.

ச-கை. தர்ப்பணுதிகள் பாகியபதார்த்த மானதி ஞலும், அந்தக்கரணம் அந்தர்பதார்த்த மானதிஞலும் அந்தக்கரணத்திற்குச் சீவத்துவஞ் சொல்லலாமே யென் னில்,

உ-ம். இந்திரியங்களு மந்தர்பதார்த்தமானதா லது களுக்குஞ் சீவத்துவம் வரவேண்டும். அப்படி கூடாத படியினுல் அந்தக்கரணத்திற்குச் சீவத்துவஞ் சொல்லக் கூடாது.

ச-கை. அந்தக்கரணம் இந்திரியத்தைப்பார்க்கிலும் அந்தரானதிஞல் அந்தக்கரணத்திற்குச் சீவத்துவஞ் சொல் லலாமேயெனில்,

உ-ம். அஞ்ஞானம் அந்தக்கரணத்திலும் அந்தரமான தால் அஞ்ஞானத்திற்குஞ் சீவத்துவங் கூடவேண்டும். அப்படி கூடாதபடியினுல் அந்தக்கரணத்திற்குச் சீவத்து வஞ் சொல்லக்கூடாது. அல்லாமலும் சீவன் சேதன மானதிஞ லசேதனமான வந்தக்கரணத்திற்குச் சீவத்துவங் கூடாதென்பதிற் சந்தேகமேயில்லை.

ச-கை. ஆனுற் கேவலம் பிரதிபிம்பத்திற்குச் சீவத்வஞ் சொல்லுவோமே யென்னில்,

உ-ம். அந்தக்கரண மில்லாமற் பிரதிபிம்பமில்லை யாகை யினுற் கேவலம் பிரதிபிம்பத்திற்கே சீவத்துவஞ் சொல்லக் கூடாது.

ச-கை. ஆனுல் பிரதிபிம்பநிமித்தம் அந்தக்கரணத் தையு மங்கீகரித்துக் கேவலம் பிரதிபிம்பத்திற்குச் சீவத்து வஞ் சொல்லுவோமே யென்னில்,

உ-ம். பிரதிபிம்பத்திற்குச் சுயம்விகார முண்டா யிருந்தபோதிலுங் கர்த்ருத்வாதி விகார மில்லாதபடியினுல் பிரதிபிம்பத்திற்கே சீவத்துவஞ் சொல்லக்கூடாது.

ச-கை. ஆனால் அதிஷ்டான சைதன்னியத்திற்குச் சீவத்துவஞ் சொல்லுவோமேயென்னில்,

உ-ம். அந்தச் சைதன்னியம் நிருவிகாரமானபடியி னால் விகாரரூபமான சீவத்துவஞ் சொல்லக்கூடாது.

ச-கை. அந்தக்கரணமும் பிரதிபிம்பமுங் கூடினது சீவனென்று சொல்லுவோமே யென்னில்,

உ-ம். இவ்விரண்டுங் கற்பிதமானபடியினாற் சீவனுக்கு நித்தியத்துவஞ் சித்தியாது.

ச-கை. சித்தியாமற்போனாற் போகட்டுமேயென்னில்,

உ-ம். முத்தரானவர்கள் யாருமில்லாமற் போக வேண்டும். ஆதலால்அந்தக்கரணமும் பிரதிபிம்பமுஞ் சீவ னென்று சொல்லக்கூடாது.

ச-கை. அதிஷ்டான சைதன்னியமும் பிரதிபிம்ப சை தன்னியமும் கூடினது சீவனென்று சொல்லலாமே யென் னில்,

உ-ம். கேவலஞ் சைதன்னியமாத்திரம் நிருவிகாரமான படியினால் கர்த்ருத்வ போக்த்ருத்வாதி விகாரலட்சணமான சீவத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை. ஆனால் அதிஷ்டான சைதன்னியமு மந்தக் கரணமுங் கூட்டிச் சீவனென்று சொல்லுவோமே யென் னில்,

உ-ம். தர்ப்பணமும் தர்ப்பணவதிஷ்டானமுங் கூடிச் சீவனாகவேண்டும். அதுகளுக்குச் சீவத்துவம் வரவில்லை. ஆகையால் அதிஷ்டான சைதன்னியமும் அந்தக்கரணமுங் கூட்டிச் சீவனென்று சொல்லக்கூடாது. ஆதலால் அந்தக் கரணம், அதிஷ்டான சைதன்னியம், அந்தக்கரண பிரதி பிம்ப சைதன்னியம் ஆகிய மூன்றுங் கூடிச் சீவனென்று

சொல்லவேண்டும். இதுவுமல்லாமல் கர்த்ருத்வ போக்த்ருத்வாதி விசிஷ்டத்துவமே சீவத்துவம் ஆனபடியினால், கர்த்ருத்வ போக்த்ருத்வஞ் சித்திக்கும்பொருட்டு அந்தக்க்ரணத்துடன் கூடப்பட்ட சூட்சுமசரீரமும் அத்தியந்தம் வேண்டும்.

மேலும் சூட்சுமசரீரந் தூலசரீரத்தை விட்டிராதபடியினாலும், அந்தத் தூலசரீர கோளகம் வினாவாய் அவ்விந்திரியங்களுக்கு விஷயங்களைக் கிரகிக்கும் வகைகள் கூடாதபடியினாலும், பிராமணத்வாதி யபிமானமில்லாமற் கர்த்ருத்வங் கூடாது ஆனதினாலுந் தூலசரீரமும் வேண்டும். அசங்கனாகிய வாத்மாவுக்கு அஞ்ஞானமில்லாமல் சரீரத்துவய வத்தியாசங்கூடாது. ஆனதினாலும், காரியங்காரணத்தை விட்டிராதபடியினாலுங் காரணசரீரமும் வேண்டும். ஆகையா லதிஷ்டான சைதன்னியமும், பிரதிபிம்ப சைதன்னியமும், சரீரத்திரயமும், இவைகளிடத்தி லத்தியாசமுங் கூடிச் சீவனென்று சொல்லப்படும்

ச-கை. ஈஸ்வரனாவ தாரென்னில்,

உ-ம். மாயையும், மாயா வதிஷ்டான சைதன்னியமும், மாயையிற் பிரதிபிம்பித்த சைதன்னியமுங்கூடி யீஸ்வரனென்று சொல்லப்படும்.

ச-கை. இம்மூன்றுங்கூட்டி யேன் சொல்லவேண்டும்? கேவலம் மாயைக்கே யீஸ்வரத்துவஞ் சொல்லுவோமே யென்னில்,

உ-ம் அப்போது ஆகாசத்திற்கு ஈஸ்வரத்வம் வரவேண்டும். அப்படி கூடாததினாற் கேவலம் மாயைக்கு ஈஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை. ஆகாசத்திற்கு உற்பத்திநாச மிருக்கிறபடியினால், ஈஸ்வரத்வஞ் சொல்லக்கூடாமற்போனாலும் அனாதியா

யிருக்கப்பட்ட மாயைக்கு ஈஸ்வரத்வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். அத்தியந்தமாகிய அபாவனைக்கும் ஈஸ்வரத்வம் வரவேண்டும். அபாவனைக்கு ஈஸ்வரத்வங் கூடாதபடியி னால் அனாதியாகிய மாயைக்கு மீஸ்வரத்வஞ் சொல்லக் கூடாது.

ச-கை. அபாவனை பாவபதார்த்த மல்லாதபடியின லும், மாயை பாவபதார்த்த மாகையினலும் மாயைக்கு ஈஸ் வரத்வஞ் சொல்லலாமேயென்னில்,

உ-ம். சாதிகளும் பாவபதார்த்தமானதா லவைகளுக்கு மீஸ்வரத்வம் வரவேண்டும். அப்படி வராதபடியினல் மாயை பாவபதார்த்தமானபோதிலு மதற் கீஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை. மாயை யனிர்வ ஜன்னியமானதால் மாயைக்கு ஈஸ்வரத்வஞ் சொல்லலாமோயென்னில்,

உ-ம். அனிர்வஜன்யமான கிளிஞ்சல் வெள்ளிக்கு மீஸ் வரத்வம் வரவேண்டும். அங்ஙனம் வராத படியினல் அனிர்வஜன்யமான மாயைக்கு மீஸ்வரத்வஞ் சொல்லக் கூடாது. இதுவுமல்லாமல் ஈஸ்வரன் சேதனனானபடியால் அசேதனமான மாயைக் கீஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை. ஆனல் கேவலம் பிரதிபிம்பத்திற்கு ஈஸ்வரத் வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். மாயையில்லாமற் பிரதிபிம்பமில்லை யாதலால் அந்தப் பிரதிபிம்பத்திற்கு மீஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை. பிரதிபிம்ப நிமித்த மாயையை யங்கீகரித்துப் பிரதிபிம்ப மாத்திரத்துக் கீஸ்வரத்வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். மாயை யில்லாமற் கேவலம் பிரதிபிம்பத்திற்குச் சர்வக்ஞத் வாதிகள் கூடாது. ஆனபடியினு லிந்தப் பிரதிபிம்பத்திற்கு மாத்திர மீஸ்வரத்வஞ் சொல்லக் கூடாது.

ச-கை. அப்படியானல் அதிஷ்டான சைதன்னியத்திற் கீஸ்வரத்வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். அதிஷ்டான சைதன்னியம் நிருவிகாரமானபடியினுலும், கேவலம் நிருவிகார சைதன்னியத்திற்குச் சகத் சிருஷ்டியாதிகள் கூடாதபடியினுலு மதற்கு மீஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை. அதிஷ்டான சைதன்னியமு மாயையுங்கூட்டி யீஸ்வரத்வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். ஆகாசம், ஆகாசசைதன்னிய மிரண்டுக்கு மீஸ்வரத்வம் வரவேண்டும். அப்படியில்லாதபடியினுல் மாயைக்கு மதிஷ்டான சைதன்னியத்திற்கு மீஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது.

ச-கை. மாயையும் பிரதிபிம்பமுங்கூட்டி யீஸ்வரத் வஞ் சொல்லலாமே யென்னில்,

உ-ம். இரண்டுங் கற்பிதமாயிருக்கிறபடியினுல் இதற் கீஸ்வரத்வஞ் சொல்லுவோமேயானுல் நித்தியத்துவஞ் சித்தியாது.

ச-கை. சித்தியாமற்போனுற் போகட்டுமேயென்னில்,

உ-ம். ஈஸ்வரனுக்கு நித்தியத்துவம். பிரதிபாதிக்கப் பட்ட சுருதியாதிகளுக்கு விரோதம்வரும். ஆதலால் மாயைக்கும் மாயாப்பிரதிபிம்பத்திற்கு மீஸ்வரத்வஞ் சொல் லக்கூடாது.

ச-கை. ஆனால் அதிஷ்டான சைதன்னியத்திற்கும் பிரதிபிம்ப சைதன்னியத்திற்கு மீஸ்வரத்வஞ் சொல்ல லாமேயென்னில்,

உ-ம். கேவலம் பிரதிபிம்பமும், அதிஷ்டான சைதன் னியமும் நிருவிகாரமாகையினால் நிருவிகார சைதன்னிய மிரண்டுக்கும் விகாரமான ஈஸ்வரத்வஞ் சொல்லக்கூடாது. ஆதலால் மாயையும், அதிஷ்டான சைதன்னியமும், மாயையிற்பிரதிபிம்பித்த சைதன்னியமுங் கூட்டி யீஸ்வரத் வஞ் சொல்லவேண்டும்.

ச-கை. இந்தப்படி சீவேஸ்வரர்களை யெங்கே நிரூபிக்கப் பட்டிருக்கின்றதென்னில்,

உ-ம். வித்தியாரண்ணிய சுவாமிகள் பஞ்சதசப் பிரகர ணத்தில் நிரூபித்திருக்கின்றது.

இந்தப்படி சீவேஸ்வரனுடைய சொரூபத்தை விசா ரித்தறிந்து சீவேஸ்வராதிகள் மாயாகற்பிதரென்று நிச்ச யித்து, இவர்களுக் கதிஷ்டான பூதனாய், நிருவிகாரனாய், நிர்ச்சங்கனாய், நிரவயவனாய், சொப்பிரகாசனாய், சர்வசாட்சி யாய் விளங்கப்பட்ட பிரத்தியேகாத்மாவே நானென்று ஸ்ரீ சற்குருவினால் தெளிந்து சீவேஸ்வர பிம்பமும், பிம்பப்பிரதி பிம்பலட்சணமும், சுயசொரூப லட்சணமும், உபாதிபேத மும், தாதாத்மியவத்தியாச தாரதன்மிய லட்சணங்களும், சம்சய விபரீதமற வெவ னறிகிறானோ, அவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

## சீவேஸ்வரசொரூப நிரூபகம்.

முற்றிற்று.

முப்பத்தேட்டாவது

# சித்தநிரோத நிருபகம்.

சங்கை. சித்த நிரோதமாவ தேதென்னில்,

உத்தரம். மனம் ஒருநிலையாயிராமல் சகலமான பதார்த்தமா யிருக்கிறபடியினால் தன்னுடன் கூடி யிருக்கிற புருஷனையு மிகவுந் தாபப்படுத்தும். அதுபோய் ஒருவிஷயத்தில் விழுந்தால் அதைத் திருப்பவே கூடாது. மேலும் வேகமான வாயுவைத்திருப்ப வசமல்லாதுபோலும், கொலுசிலிருந்து விடுபட்டுப்போகிற மதயானையைத் திருப்ப வசமல்லாதுபோலும், மனதையுந் திருப்பி நிறுத்த வசமல்லவென்று அருச்சுனன் ஸ்ரீகிருஷ்ண பகவானைக் கேட்டதாகவும்; சமுத்திரத்தையுங் குடிக்கலாம், மேருவையும் பிடுங்கலாம், காட்டுத்தீயையும் விழுங்கலாம், காற்றையும் பிடித்துச் சுமையாய்க்கட்டலாம், சித்தநிரோதம் பெறுவதுமாத்திரம் வெகுபிரயாசமென்று ஸ்ரீராமருக்கு ஸ்ரீவசிட்டமுனிவருபதேசித்ததாகவும் கீதை வாசிட்டங்களிற் சொல்லப்படுகின்றது. அப்படி சொன்ன வசிட்டமுனிவரே திரும்பவும் சித்தநிரோதம் வருவது வெகு சுலபமென்றுந் திருவுளம்பற்றியிருக்கிறார்.

இதை மறந்துவிட்டு உலகத்திற் சிலபேர் சித்தநிரோதங் கடினமென்ற வாக்கியத்தை மாத்திரம் பற்றிக்கொண்டு, யாருக்குஞ் சித்தநிரோதம் சர்வாத்மனாய் வராதென்றே நிச்சயித்து, வேதாந்த விசாரத்துக் கதிகாரிகளே யில்லையென்று சொல்லுகிறார்கள். ஸ்ரீசற்குரு கடாட்சத்தினால் பிறிவுபட வறிவிக்க நன்றாயறிந்தும், பிறிந்தும் பிறிபட்ட பதார்த்தமில்லாமல் சித்த நிரோதம்வந்து முத்தரானவர்களும் அப்படியே உலகத்திற் சித்தநிரோதம் பண்ண வெதி

காரிகளே யில்லையென்று சொல்லுகிறார்கள். இவர்கள் சொல்லைக்கேட்டுச் சிலர் பிரமை கொண்டார்கள். அவர்களது பிரமையைப் போக்கடிக்கிற நிமித்தம் அவர்கள் நினைவின்படியே சித்தநிரோதம் வருவது வெகு சுலபமென்பதைத் திருஷ்டாந்த பூர்வகமாய் நிரூபிக்கிறோம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். மனம் பட்டிமாட்டைப்போ லொத்தது. அந்தப் பட்டிமாடு சார்வதா பயிரைக்குறித்துக்கொண்டே போகும். பிடித்துக் கட்டப்போனு லோடிப்போம். அதைப் பிரயாசத்தினல் பிடித்துக் கட்டி வீட்டுக்குள் கொண்டு வந்தாலும அதின் முன் வைக்கோலாதிகளைப் போட்டாலும் அதுகளை முகந்து விட்டு முன்மேய்ந்த பயிர்களையே சிந்தித்துக்கொண்டிருக்கும்.

பிற்பாடு அவிழ்த்துவிட்டால் திரும்பவும் அந்தப் பயிரை நாடிக்கொண்டே போய்விழும். மறுநாளு மிந்தப் படியே பிடித்துக் கட்டி வீட்டுக்குள் வைக்கோல் தவிடு முதலானதுகள் போட்டாலும் அதைச் சற்றுநேரந்தின்று விட்டுப் பிறகு எப்போதும்போ லந்தப் பயிரையே சிந்தித்திருக்கும். இந்தப்பிரகாரம் நாள்தோறும் விடுவித்தும் கட்டுவித்துத் தீனிபோட்டும் பழக்கிக்கொண்டு வரவர, வீட்டுத்தீண்டி யப்பியாசமாய் வெளியி லோட்டிவிட்டாலும், அது தானே போனலும் மறுபடியும் வீட்டுக்கே வரும். பிறகு அதை யோட்டினலும் போகாது.

அந்தப் பட்டிமாடு அப்பியாசத்தினல் வீட்டுக்குள்ளே தானே கட்டுப்பட்டதுபோல, இந்த மனதையும் அப்பியாசத்தினலும் வயிராக்கியத்தினலும் நிறுத்திக் கொள்ளலாம்.

ச-கை. அவ்வப்பியாசமாவ தேதென்னில்,

உ-ம். நித்தியமும் தனக்கு அபீஷ்டமான மூர்த்தியைத் தியானம் பண்ண வுட்கார்ந்தால், அம்மனம் அகமுகப்படாமல் முன்போலவே பகிர்முகப்பட்டு விஷயங்களிற் போய் விழும். அப்படி விழுகின்ற மனதைத் திருப்பித் திருப்பி யகமுகப்படுத்தி மூர்த்தி சொரூபத்தில் நிறுத்தினால் சற்றே நிற்கும். திரும்பவும் பழக்கப்படியே போய்விழும். மறுநாளிரண்டுநாழிகை, மறுநாள் நாலு நாழிகை, மறுநாள் எட்டுநாழிகை இந்தப்படியே அப்பியாசப்படுத்திக்கொண்டு வரவர, இந்த அப்பியாசத்தினால் முன் போடிய மனம் எங்கே நிறுத்தினாலு மங்கே நிற்கும். இதுவே யப்பியாசமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

ச-கை. வயிராக்கியமாவ தேதென்னில்,

உ-ம். அனேக ஜன்மத்திற்செய்த விகிர்த கருமங்களெல்லா மீஸ்வரார்ப்பணமாகவே செய்துவருகிறபோது, அப்படிசெய்த புருஷனுக்கு ஒருஜன்மத்திற் சித்தசுத்தி வரும். அதனா லெந்த விஷயத்திலுந் தோஷதிருஷ்டி வரும். அதனால் பிரமலோகாதிகளும் திரணீகரமா யெண்ணுகிற திடசித்தம்வரும். இதுவே வயிராக்கியமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். இப்படிப்பட்ட அப்பியாச வயிராக்கிய புருஷர்களுடைய சித்தம் சிரவணாதிகளிலெங்கே நிறுத்தினபோதிலும் அங்ஙனே நிலையாகநிற்கும்.

ஆதலால் சித்தநிரோதம் சர்வத்திரா கூடாமற்போனபோதிலும் ஈஸ்வரா னுக்கிரகமும், குருகடாக்ஷமு முண்டானவர்களுக்கு அப்பியாச வயிராக்கியங்களினால் வெகு சுலபத்திலுண்டாகும். ஆகையால் வேதாந்தவிசாரத்திற் சாதனசதுட்டய சம்பன்னர்களாகிய வதிகாரிக ளில்லையென்று பிரமிக்கத் தேவையில்லை. இந்த வியாபாரத்தில்

சித்தநிரோதக் கடினத்தையுஞ் சுலபத்தையும் விசாரித்து அப்பியாச வைராக்கியஞ் சம்பாதித்த பூர்வகமாகவே சிரவணுதிகள் பண்ணிச் சித்தநிரோதம்பெற்று, ஆசாரியரால் பரஞானத்தைக் கரதலாமலகம்போற் பெற்றவனெவனே, அவனே கிருதகிருத்தியனுன சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுகமாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

சித்தநிரோத நிரூபகம்
முற்றிற்று.

---

முப்பத்தோன்பதாவது

# தேகாத்மவைலக்ஷண நிரூபகம்.

---

சங்கை. தேகேந்திரியாதிகளுக்குமாத்மாவுக்கும் பேதலக்ஷணமாவ தேதென்னில்,

உத்தரம். தேகேந்திரியாதிகள் அநித்தியம், அசுத்தம், சடரூபம், துக்கரூபம், திரிசியம், சவிகாரம், நாநாரூபம், சாபேட்சை, அப்பிரகாசம், பரிச்சின்னம், சகம்பம், ஆதேயம், சரவயம், ஆதியந்த சகிதம், சுசாதி விசாதி சுகத பேத சகிதம், காரியம், குணம் என்று சொல்லப்படும்.

ஆத்மாவோவென்றுல் நித்தியம், சுத்தம், சித்ரூபம், சுகரூபம், திருக்கு, நிர்விகாரம், ஏகரூபம், நிராபேட்சை, பிரகாசம், அபரிச்சின்னம், நிஷ்கம்பம், ஆதாரம், நிரவயவம், ஆதியந்தரகிதம், சுசாதி விசாதி சுகத பேத ரகிதம், காரணம், நிர்க்குணம் என்று சொல்லப்படும்.

இந்தப்பிரகாரத்தில் தேகேந்திரியாதிகளுக்கு மாத்மாவுக்குமுள்ள வைலக்ஷணியங்களை ஸ்ரீ சற்குருமுன்னிலையில் நிரைநிரையாய் யூகபுத்தியினால் நன்றாய் விசாரித்தறிந்தவனெவனோ, அவனே ஜீவன்முத்தனென்றும், திடப்பிரக்ஞனென்றும் சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

தேகாத்மவைலக்ஷண நிரூபகம்
முற்றிற்று.

---

நாற்பதாவது

# ஆத்மானாத்ம நிரூபகம்.

---

சங்கை. சுருதியாதிகளில் ஆத்மானாத்ம விவேகம் பண்ணவேண்டு மென்கிறபடி ஆத்மாவாவ தேதென்னில்,

உத்தரம். ஸ்தூலசூட்சும காரணசரீரமான பஞ்சகோசங்களுக்கும் வெதிருத்தனாய், அவஸ்தாத்திரய சாக்ஷியாய், நித்தியனாய், நிருவிகாரியாய், நிஷ்கிரியனாய், நிருபாதிகனாய், நிர்லேபனாய், நிச்சம்பந்தனாய், நிரந்தரியனாய், நிருமலனாய், அசங்கனாய், அனந்தனாய், அகர்த்தாவாய், அபோக்தாவாய், அசரீரியாய், அப்பிராணனாய், அமனசனாய், அசலனாய், அபோதசுவரூபனாய், சுவயம்பிரகாசனாய், சொப்பிரகாசனாய், சுத்தனாய், சர்வக்ஞனாய், அசித்தனாய், புண்ணிய பாவத்தினாற் பரிசிக்கப்படாதவனாய், சர்வ சம்பந்தனாய், சத்தியனாய், காலத்திரயத்திலும் பாத்தியனாய், பரமானந்த சொரூபனாய், விளங்கப்பட்டவனே யாத்மாவென்று சொல்லப்படும்.

ச-கை. அனாத்மாவாவ தேதென்னில்,

உ-ம். வியஷ்டி, சமஷ்டி சொரூபமான தூலசூட்சும காரணசரீராதிப் பிரபஞ்சங்களே யனாத்மாவென்று சொல்லப்படும்.

ச-கை. தூலசரீரமாவ தேதென்னில்,

உ-ம். பஞ்சீகிருத பூதகாரியமாய் பிராரத்தத்தினாற் சம்பாதிக்கப்பட்டதாய் சீவகர்மங்களுக்குப் பலரூபமான சுகதுக்க போகங்களுக் காசிரயஸ்தானமா யிருக்கப்பட்டதே தூலசரீரம். இதையே அன்னமய கோசமென்றுஞ் சொல்லப்படும்.

ச-கை. அன்னமயகோசமாவ தேதென்னில்,

உ-ம். தாய்தகப்பன் புசிக்கப்பட்ட அன்னத்தினாற் பிறக்கப்பட்டதாயும், தாய்தகப்பன் சுரோணிதசுக்கிலத்தினாற் பிறக்கப்பட்டதாயும், பாலன்னத்தினால் விர்த்தி பொருந்தினதாயும் இருக்கின்ற தேகமே யன்னமயகோசமாகும். இந்தத் தூலமானது பிறப்பதற்கு முன்னும் மரணாந்தத்தினு மில்லாதபடியினாலும், பஞ்சமகா பூதகாரியமாகையினாலும், கிரியமாகையினாலும், சடமாகையினாலும், பரிச்சின்னமாகையினாலும், சுவர்கள்போலிருக்கிறபடியினாலும் இது ஆத்மா வாகமாட்டாது.

அந்தச்சுவரைப் பார்க்கமாட்டாதவன அந்தச் சுவருக் கெப்படி யன்னியனோ, அப்படியே தாஷ்டாந்தத்தினுந் தூலதேக திருஷ்டாவானவன் தூலதேகத்திற் கன்னியனென்றே விசாரித்து முமூட்சுவானவர்கள் தூலதேகசாட்சியும் சேதனனுமாகிய வாத்மாவே நானென் றறியவேண்டும்.

ச-கை. இனி சூட்சுமசரீரமாவ தேதென்னில்,

உ-ம். அபஞ்சீகிருத பூதகாரியமான பதினே ழவயத்துடன் கூடியிருக்கப்பட்டதே சூட்சுமசரீரமென்று சொல்லப்படும்.

ச-கை. பதினே ழுவயவமாவ தேதென்னில்,

உ-ம். ஞானேந்திரியபஞ்சகம், கர்மேந்திரியபஞ்சகம், பிராணாதிபஞ்சகம், மனம், புத்தி இதுகளே பதினே ழுவயவ மென்று சொல்லப்படும்; இது கோசத்திரயாத்மகமாயிருக்கும்.

ச-கை. கோசத்திரயமாவ தேதென்னில்,

உ-ம். பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமய மென்று சொல்லுவார்கள். இதிற் பிராணமயகோசமாத்திரம் பத்தவயவத்துட னிருக்கும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். அபஞ்சீகிருத பூதகாரிய பஞ்சமகா பூதங்களின் ஆதியாகிய ரஜோபாகத்திலிருந்து பிரத்தியேகம் பிரத்தியேகமாய் கிரமமாகப் பிறக்கப்பட்ட வாக்காதியான கர்மேந்திரிய மைந்தும், ரஜோகுண சமஷ்டியினாற் பிறக்கப்பட்ட பிராணாதிவாயுக்களைந்துங் கூடினது பிராணமய கோச மென்று சொல்லப்படும்.

ச-கை. மனோமயகோசமாவ தேதென்னில்,

உ-ம். ஆறவயவத்துடன் கூடியிருக்கும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். முற்சொல்லிய அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களி னாதியான சத்துவகுண பாகங்களினாற் பிரத்தியேகம் பிரத்தியேகமாய் கிரமத்துடன் பிறக்கப்பட்ட ஸ்ரோத்திராதியான ஞானேந்திரிய மைந்தும், சத்துவகுண சமஷ்டியினாற் பிறக்கப்பட்டதாய் சம்சயாத்மகமாய் அந்தக்கரண விருத்திரூபமாயிருக்கிற மனதொன்றும் கூடி மனோமய கோசமென்று சொல்லப்படும்.

ச-கை. விஞ்ஞானமயகோசமாவ தேதென்னில்,

உ-ம். அதுவு மாறவயவத்துட னிருக்கும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம் முற்சொல்லிய சுரோத்திராதியைந்தும், சத்துவ குண சமஷ்டியினுற் பிறந்து நிச்சயாத்மகமாய் அந்தக் கரண விருத்திரூபமான புத்தியொன்றுங் கூடி விஞ்ஞான மயகோசமென்று சொல்லப்படும். இந்தக் கோசத்திரய மூம் லிங்கசரீரத்தி லந்தர்ப்பூதம். இந்த லிங்கசரீரமும் திரிசியமாய் சடமாயிருக்கிறபடியினுல் தூலசரீரத்தைப் போலவே யாத்மாவாகமாட்டாது.

ச-கை. ஆனுலிந்த லிங்கசரீரத்திற்குப் பூதகாரிய மெப்படியென்னில்,

உ-ம். இதற்கர்த்தஞ் சுருதியினுலேயே பூதகாரிய நிச்சயிக்கிறபடியினுல் தூலசரீரத்தைப்போ லிதற்கும் திரிசியத்துவமுஞ், சடத்துவமும், பரிச்சின்னத்துவமும், விகாரங்களும் நிச்சயிக்கப்படுகின்றது. அந்தத் தூலதேக வதிஷ்டாவானவன் தூலதேகத்திற்கெப்படி யன்னியனே, அப்படியே இந்த லிங்கதேக வதிஷ்டாவாகிய நான் இந்த லிங்கதேகத்திற் கன்னிய னென்றும், இதற்குச் சாட்சியாகிய வாத்மாவே நானென்றும் முமூட்சுக்க ளறியத் தக்கது.

ச-கை. காரணசரீரமாவ தேதென்னில்,

உ-ம். தூலசூட்சும சரீரத்துவயத்திற் கேதுவாய், ஆதியாய், அநிர்வசன்னியமாய், சடமாய், மோகாத்மகமாய் ஆத்மாவே யாசிரயமானதா யிருக்கிற பிரம வாவரகமான வஞ்ஞானமே காரணசரீரமென்று சொல்லப்படும். இதற்கே யானந்தமயகோசமென்று பெயர்.

ச-கை. ஆனந்தமயகோசமாவ தேதென்னில்,

உ-ம். பிரியமோதப் பிரமோத விர்த்திமத்தும் அந்தக் கரண வுபசர்ச்சனமும் ஆகிய விவையே ஆனந்தமயகோச மென்னப்படும்.

ச-கை. பிரியமோதப் பிரமோத விர்த்தியாவ தேதென்னில்,

உ-ம். இஷ்டமான வஸ்துவைப் பார்த்தமாத்திரத்தில் வந்த சந்தோஷமே பிரியம்; அவ்வஸ்து லபித்தபின்பு வருகிற சந்தோஷமே மோதம். அவ்வஸ்துவை யனுபவித்தபின்பு வருகிற சந்தோஷமே பிரமோதமென்று சொல்லுவார்கள்.

ச-கை. இவ் வஞ்ஞானத்திற்குப் பாவரூபத்வ மெப்படியென்னில்,

உ-ம். நான் அஞ்ஞானி, சடன், மோகிதன், அசத்தனென்று சமஸ்த பிராணிகளாலும் அஞ்ஞான மனுபவிக்கப் படுகிற படியினு லிதுவே பாவரூபத்வம்.

ச-கை. திரிசியத்துவ மெப்படியென்னில்,

உ-ம். சடத்துவமும், மோகத்துவமும் நிச்சயிக்கிற படியினுலும் காரணசரீரமுஞ் சரீரமானதினுலுந் தூலசூட்சுமம் போலவே சடமானபடியினுலும் கடகுட்டியாதிகள் போலவே யாத்மாவாகமாட்டாத படியினுலும் நா னஞ்ஞானி, என் அஞ்ஞான மென்னை வாதிக்கின்றது, என் அஞ்ஞானம் முன்பின்தோற்றமற் பண்ணுகின்றதென்று சாட்சியினு லறியப்படுகிற படியினுலும் இவ்வஞ்ஞானத்திற்குத் திரிசியத்துவமுங் கூடும். இப்படி சொல்லப்பட்ட யுக்தியினுற் பஞ்சகோச சரீரத்திற்கு அனுத்மத்வஞ் சித்தித்து.

இந்தச் சரீரத் திரயத்திற்கும் விலட்சணனுகிய பிரத்தியேகாத்மாவே தாமென்று முமூட்சுக்கள் நிச்சயித்துக்

கொள்ளத் தக்கது. பஞ்சகோசாத்மகமாகிய சரீரத்திரயத்துக்கு மாத்மத்வங் கூடாதபடியினால் தேகேந்திரியாதி விலட்சணனாகிய வாத்மாவே நானென்று ஸ்ரீ சற்குரு சந்நிதானத்தில் எவன் சந்தேக விபரீதமின்றி விசாரித்தறிகிறானோ, அவனே சீவன் முத்தனுஞ் சகல சாஸ்திர சம்பன்னனுமென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

ஆத்மானாத்ம நிரூபகம்.
முற்றிற்று.

---

நாற்பத்தோராவது.

# அவஸ்தாத்திரய நிரூபகம்.

சங்கை. அவஸ்தாத்திரயமாவ தேதென்னில்,

உத்தரம். சாக்கிர, சொப்பன, சுழுத்தி என்று மூன்றுவிதம்.

ச-கை. சாக்கிரமாவ தேதென்னில்,

உ-ம். சுரோத்திராதி யிந்திரியங்களினாற் சத்தாதி விஷயஞான மெந்த மட்டும் வருகின்றதோ, அந்தமட்டுஞ் சாக்கிராவஸ்தை. இவ்வவஸ்தையில் தூலசரீரத்தி லபிமானிக்கப்பட்ட வாத்மாவை விசுவன், வியவகாரிகன், சிதாபாசன் என்று சொல்லப்படும்.

ச-கை. இம்மூன்று பெயரெப்படி வந்ததென்னில்,

உ-ம். சமஸ்தத்திலு மபிமானிக்கின்றபடியினால் விசுவனென்றும், சமஸ்த விவகாரமும் பண்ணுகிறபடியால் விவகாரிகனென்றும், சித்துப்போலவே தோற்றப்பட்டுச்

சித்துலட்சண மில்லாத படியினால் சிதாபாசனென்றும் பெயர்வந்தது. இந்தத் தூலசரீரமுஞ் சமஷ்டி, வியஷ்டி பேதத்தினா லிரண்டுவிதம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சாக்கிராவஸ்தையில் தூலசரீர சமஷ்டியில் அபிமானிக்கப்பட்ட வாத்மாவை விராட்டு வைசுவானரன், வைராஜசன் என்று சொல்லப்படும்,

ச-கை. இம் மூன்றுபெய ரெப்படி வந்ததென்னில்,

உ-ம். நானாவிதமாய்த் தோற்றுகிறபடியால் விராட்டென்றும், சமஸ்த பிராணிகளிடத்திலும் நானென் றபிமானஞ் செய்வதினால் வைசுவானரனென்றும், விசேஷமாய்த் தோற்றுவிப்பவ னாதலால் வைராஜசனென்றும் பெயர்வந்தது.

ச-கை. சொப்பனமாவ தேதென்னில்,

உ-ம். சாக்கிர வாசனையாற் பிறக்கப்பட்ட விஷயத்துடன் கூடின ஞானமே சொப்பனவவஸ்தை. இவ்வவஸ்தையில் சூட்சுமசரீரத்தி லபிமானிக்கப்பட்ட வாத்மாவைத் தைசதன் பிராதிபாதிகன் சொப்பன கற்பிதனென்று சொல்லப்படும்.

ச-கை. இம்மூன்று பெயரேன் வந்ததென்னில்,

உ-ம். தேஜோமயமான அந்தக்கரண விருத்தியுடன் கூடிக்கொண்டிருப்பதால் தைசதனென்றும், தோற்றுகின்ற காலத்தில் மாத்திரமிருப்பதால் பிராதிபாதிக னென்றும், அஞ்ஞானகாரியமான நித்திராசத்தியினாற் கற்பிக்கப்பட்டுச் சொப்பனத்தை யபிமானித்தபடியினால் சொப்பன கற்பிதனென்றும் பெயர் வந்தது. இந்தச் சூட்சுமசரீரமும் சமஷ்டி, வியஷ்டி பேதத்தினா லிரண்டுவிதம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சொப்பனவஸ்தையில் சமஷ்டி சூட்சுமசரீரத்தி லபிமானிக்கப்பட்ட வாத்மாவை இரணியகர்ப்பன், சூத்தி ராத்மா, பிராணன் என்று சொல்லப்படும்.

ச-கை. இம்மூன்று பெயரேன் வந்ததென்னில்,

உ-ம். ஞானசத்தி யுண்டாயிருப்பதால் இரணிய கர்ப்ப னென்றும், நானுவித மணியினிடத்தில் சூத்திரங் கோத் ததுபோல நானுவித பிரபஞ்சங்களிலு மனுசூதனுயிருப்ப தால் சூத்திராத்மா வென்றும், கிரியாசத்தியுடன் கூடியிருப் பதினுல் பிராணனென்றும் பெயர்வந்தது.

ச-கை. இனி சுழுத்தியாவ தேதென்னில்,

உ-ம். சமஸ்த விஷய ஞானங்களு மில்லாதிருக்கின்ற தெதுவோ அதுவே சுழுத்தியவஸ்தை. இவ்வவஸ்தை யில் காரணசரீரத்தி லபிமானிக்கப்பட்ட வாத்மாவைப் பிராஞ்ஞன், பாரமார்த்திகன், அவிச்சின்னனென்று சொல் லப்படும்.

ச-கை. இம்மூன்று பெயரேன் வந்ததென்னில்,

உ-ம். சொப்பிரகாச சொரூபனுகையால் பிராஞ்ஞ னென்றும், அவஸ்தாத்திரயத்தி லனுசூதனு யிருக்கிறபடி யால் பாரமார்த்திகனென்றும், தேகேந்திரியாதி யுபாதியி ஞற் பரிச்சின்னனுகிய படியால் அவிச்சின்னனென்றும் பெயர்வந்தது. இந்தக்காரண சரீரமுஞ் சமஷ்டி, வியஷ்டி பேதத்தினு லிரண்டுவிதம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சுழுத்தியவஸ்தையில் சமஷ்டி காரணசரீரத்தி லபிமானிக்கப்பட்ட வாத்மாவை ஈஸ்வரன் அந்தரியாமி அவ்வியாகிருதன் என்று சொல்லப்படும்.

ச-கை. இம்மூன்று பெயரேன் வந்ததென்னில்,

உ-ம். சமஸ்த பிராணிகளையுஞ் சிருஷ்டிக்கிறபடியினால் ஈஸ்வரனென்றும், சமஸ்த பிராணிக ளிருதயத்திலு மிருந்து பிரேரிப்பிக்கிறபடியினால் அந்தரியாமியென்றும், நாமரூபரகிதமா யிருக்கிறபடியால் அவ்வியாகிருதனென் றும்பெயர்வந்தது. இதுவே வியட்டி சமட்டி சாக்கிர சொப் பனசுழுத்தி யவஸ்தாத்திரயங்களும் அபிமானிகளுமாகும்.

ச-கை. இந்தச் சரீரத்திரயங்களுக் கன்னியமாய் முப் பத்தாறு தத்துவங்க ளிருக்க, அதுகளைச் சொல்லாமற் சரீ ரத்திரயங்களை மாத்திரஞ் சொன்ன தேதென்னில்,

உ-ம். அந்த முப்பத்தாறு தத்துவங்களு மிந்தச் சரீ ரத்திரத்தி லந்தர்ப்பூதமா யிருக்கிறபடியினால், இதுகளைச் சொன்ன போதே அந்தத் தத்துவங்களையுஞ் சொன்ன தாயிற்று.

ச-கை. ஆயினும் முப்பத்தாறு தத்துவங்களாவ தேதென்னில்,

உ-ம். ஆகாசாதி பூதமைந்தும், சத்தாதி விஷயமைந் தும், ஸ்ரோத்திராதி ஞானேந்திரியமைந்தும், வாக்காதி கன்மேந்திரியமைந்தும், பிராணாதி வாய்வுக்கள் பத்தும், மனாதிநான்கும், அஞ்ஞானமொன்றும், பசுவாகிய சீவ னென்றும் கூடினது முப்பத்தாறு தத்துவங்களென்று சொல்லுவார்கள். இந்தத் தத்துவங்களுக்கெல்லா மன் னியமாய் விளங்குவது ஜகத்காரண பூதமாகிய பரமாத்மா வான பரப்பிரமமென்று சொல்லப்படும்.

இந்த முப்பத்தாறு தத்துவமு மிருபத்துநான்கு தத் துவத்தி லந்தர்ப்பூதமென்று நிச்சயித்து இருபத்துநான்கு தத்துவமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது இப்படி சொல்லப்பட்ட வவஸ்தாத்திரயங்களையுஞ் சரீரத்திரயங்

களையும் ஸ்ரீ சர்குரு முன்னிலையில் விசாரித்து அகண்ட சச்சிதானந்த சொரூபமாகிய பிரத்தியேகாத்மாவே நானென் றறிகிறவ னெவனோ, அவனே பிரமவித்தென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமாதிகளிற் சொல்லப் படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

## அவஸ்தாத்திரய நிரூபகம்.

முற்றிற்று.

---

நாற்பத்திரண்டாவது.

# பிரளயசொரூப நிரூபகம்.

சங்கை. பிரளயசொரூபமாவ தேதென்னில்,

உத்தரம். நித்தியப்பிரளயம், அவாந்தரப்பிரளயம், தினப்பிரளயம், பிரமப்பிரளயம், அத்தியந்தப்பிரளயம் என்றைந்து விதமாயிருக்கும்.

ச-கை. நித்தியப்பிரளயமாவ தேதென்னில்,

உ-ம். சமஸ்த பிராணிகளுடைய சுழுத்தியே நித்தியப்பிரளயம்.

ச-கை. அவாந்தரப்பிரளயமாவ தேதென்னில்,

உ-ம். கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம், ஆகிய அவ்வவ் வாதிபத்தியம் வருகிறமட்டும் அவாந்திரப் பிரள்யமென்று சொல்லப்படும். பிரமதேவருடைய மத்தியானத்தில் பதினான்கு அவாந்தரப்பிரளயம் வரும். அதுகளுக்கு நைமித்தியப் பிரளயமென்றும் மனுவாந்தரப் பிரளயமென்றுஞ் சொல்லப்படும். அதற்குள் யுகப்பிரளயம் அந்தர்ப்பூதமாயிருக்கும்.

ச-கை. தினப்பிரளயமாவ தேதென்னில்,

உ-ம். பிரமதேவருடைய சுழுத்தியே தினப்பிரளயம்.

ச-கை. பிரமப்பிரளயமாவ தேதென்னில்,

உ-ம். பிரமதேவருடைய நாசவவஸ்தை. அவ்வவஸ்தையில் ஆகாசாதிப் பிரபஞ்சங்கள் சர்வாத்மனுயில்லை. அஞ்ஞானமாத்திர மிஞ்சியிருக்கும். அதற்கு மகாப்பிரளயமென்றும், பிராகிருதப் பிரளயமென்றும், மகாசுழுத்தியென்றும் மூன்றுபெயர்.

ச-கை. அத்தியந்தப்பிரளயமாவ தேதென்னில்,

உ-ம். முத்தி; அவ்வவஸ்தையில் அஞ்ஞானஞ் சர்வாத்மனுயில்லை. இப்படி பஞ்சப்பிரளயங்களையும் ஸ்ரீசற்குரு முன்னிலையில் விசாரித்து இதுகளுக்கெல்லா மாதாரமாய் அனுசூதனுய் அசங்கனுயிராநின்ற வாத்மாவே நானென்று எவனறிகிருனே, அவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுகமாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

பிரளயசொரூப நிரூபகம்
முற்றிற்று.

---

நாற்பத்துமூன்றவது

# வேதாந்தவெதிருத்தமன நிரூபகம்.

சங்கை. உலகத்தில் வேதாந்தசாஸ்திர வெதிருத்தர்களாகிய சிலவித்துவான்களும், லௌகீகர்களும், சில பாமரர்களும் ஆகிய இவர்கள் ஆபாச சாஸ்திர புராணுகமாதிகளைக் கேட்டு, அவற்றி னபிப்பிராயந் தெரியாமல் அது

களையே சத்தியமென்றெண்ணிப் புத்திராளுண்டானவர்களுக்கே இகபர சவுக்கிய முண்டென்றும், புத்திரா ளில்லாதவர்களுக்கு இகலோக பரலோக துக்கமுண்டென்றுஞ் சொல்லியிருக்கிறார்கள். அதைக்கேட்டு யதார்த்தமென்றெண்ணிப் பிரமைகொண்டவர்களுடைய பிராந்தி நீங்கும்படி புத்திரா ளுண்டானவர்களுக்கே யதிக துக்கமென்று சொன்ன பிரபல சுருதிவாக்கியங்களை விசாரித்து முமூட்சுவானவர்கள் அந்தப் புத்திராதிகளிடத்திற் பிரியங்களை விட்டுவிட்டு, ஆத்மசொரூபமாகிய தன்னிடத்திலேயே பரமப்பிரீதியாய் சதாநிஷ்டனு யிருக்கவேண்டுமென்று பெரியோர்கள் சொல்லுகிறபடியினுல் புத்திராளுண்டானவர்களுக் கதிக துக்கமென்பது தெப்படியென்னில்,

உத்தரம். புத்திரனில்லாத தாய்தந்தைகள் புத்திரசோகங்கொண்டு சாஸ்திரிகளை யழைத்து, சுவாமீ! எங்களுக்குப் புத்திரனில்லாமையாற் கதியில்லையென்று புராணுதிகளிற் சொல்லுகின்றதே. அந்தத்தோஷ நீங்கப் புத்திர னுண்டாகும்வகை சொல்லவேண்டுமென்று கேட்க,

அவர்களும் சந்தோஷகரமாய் நீங்கள் புண்ணியதீர்த்தயாத்திராதி விரதாதிகளை யனுஷ்டித்தீர்களானு லுங்களுடைய் பாவ நீங்கிப் புத்திரோச்சவ முண்டாகுமென்று சொல்ல; அந்தப்படியே தீர்த்தயாத்திரை முதலிய விரதாதிகளைப் பிரயாசை வகித்து வெகுநா ளனுஷ்டித்தும் புத்திரனுண்டாகாமையினுலுந் துக்கம்; அப்படி யிருக்கத் தெய்வகதியாய் ஒருகாலத்திற் கர்ப்பமுண்டாகி அஃதுங் கர்மசம்பந்தத்தினுற் சேதப்பட அதனுலுந் துக்கமே; திரும்பவுந் தெய்வகதியாய்க் கெர்ப்பந்தரித்துப் பத்து மாதஞ் சென்றபிறகு பிரசவகாலத்திலுந் துக்கம்; பிரசவித்தபிறகு மந்திராதி, ஔஷதாதி, தேவதாதி பிரார்த்தனைகளினுலுந் துக்கப்பட்டவர்களாய் புத்திராபேட்சையினுற்

பிராணஹானி யெங்கே நேரிடுகிறதோ வென்று தாபப்படு வதினாலுந் துக்கம்; மாந்தம், சுரம், பட்சிதோஷ முண்டா தலினாலும் சதா துக்கம்; இதுகளுக்கெல்லாந் தப்பிப் பிழைத்தால் வித்தியாப்பியாசாதிகளினால் துக்கம்; அப்படி வித்தை வந்தபின்னும் விஷயவிச்சை சம்பந்தாதி துர் நடத்தைகளினா லதிகதுக்கம்.

பின்னும் விவாக காரியாதி செலவுகளினாலும் அப்படி விவாகமாகிக் குழந்தைக ளதிகரித்து தரித்திரப்படுவதி னாலுந் துக்கம்; ஒருவேளை தரித்திரநீங்கி யயிசுவரியம் வந்தகாலத்திலும் இந்தப் புத்திராளுடைய ஐசுவரிய வாரோக்கிய சம்பத்தைக் கூடவிருந் தனுபவியாமல் தாய் தந்தைகளாகிய நாம் செத்துப்போகிறோமே யென்பதில் அதிக துக்கம்; இந்தப் பிரகாரம் புத்திரா ளுண்டானவர் களுக்குச் சார்வதா துக்கமேயன்றி, அந்தப் புத்திரர்களா லிகலோக பரலோக சவுக்கியம் எள்ளளவுமில்லை.

இது வீணை பிராந்தியென்று நன்றாய் விசாரித்து முமூட்சுவானவர்கள் புத்திர களத்திராதிக ளிடத்திலிருக் கும் பிரியமோதப் பிரியத்தைச் சர்வாத்மனாய் விட்டுவிட்டு, அருளே திருமேனியாகிய ஆசிரியர் முன்னிலையில் விவே கித்து சார்வதா ஆத்ம சொருபமாகிய தன்னிடத்திற் பரமப் பிரீதிவைத்துச் சதா நிஷ்டனாயிருக்கவேண்டுமென் கிற வேதாந்த சித்தாந்தத்தைத் தெளிந்தவ னெவனோ, அவனே மெய்ஞ்ஞானி யென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணகமாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

## வேதாந்தவெதிருத்தமன்ன நிரூபகம் முற்றிற்று.

---

நாற்பத்துநான்காவது.

# பிரியத்துவ நிரூபகம்.

சங்கை. உலகத்திற் பிரியத்துவமாவ தேதென்னில்,

உத்தரம். திரவியம், அந்தத் திரவியத்திலும் புத்திரனே பிரியம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். புத்திரன் ஓர் அகந்தைசெய்ய அவனை ராஜன் தண்டனை பண்ணத்துடங்கினால் அதற்கு எவ்வளவு திரவியஞ் செலவான போதிலு முன்பின் பாராமற் செலவழித்து புத்திரனை விடுவிக்கிறபடியினால் திரவியத்திலும் புத்திரனே பிரியவஸ்துவாகும். இந்தப் புத்திரனிலுந் தனது சரீரமே பிரியம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். புத்திரன்செய்த குற்றங்கண்டு ராஜன் தகப்பனைப் பிடித்து தண்டிக்கத் துடங்கினால் புத்திரனைக் காட்டிக் கொடுத்து, எனக்கு மவனுக்குஞ் சம்பந்தமில்லையென்று தகப்பன் தப்பித்துக்கொள்ளுகிற படியினால், புத்திரனிலுந் தன் சரீரமே பிரியமாகும். இந்தச் சரீரத்திலு மிந்திரியமே பிரியம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம. ஒரு புருஷன் ஒரு தகாத காரியஞ்செய்ய அதற்கு ராஜன் கண், காது, மூக்குகளை யறுக்கத் தொடங்கினால் அப்போது தன் அங்கத்தி லேதாவ தறுக்கக்கொடுத்து இந்திரியங்களைத் தப்பித்துக்கொள்ளுகிற படியினால் சரீரத்திலு மிந்திரியமே பிரியமாகும். இவ் விந்திரியத்திலும் பிராணனே பிரியம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஒரு புருஷன் குற்றஞ்செய்து அவனை யரசன் பிராணச்சேதம் பண்ணத் தொடங்கினால் இந்திரியங்களை யாவது கொடுத்துப் பிராணனைத் தப்பித்துக் கொள்ளுகிற படியால், இந்திரியத்திலும் பிராணனே பிரியமாகும். இந் தப் பிராணனிலும் ஆத்மாவே பிரியம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். ஒரு புருடன் தான் தேவனாகவேண்டுமென்று பரலோகத்தை யிச்சித்துக் கங்காப்பிரவேசம் பண்ணிப் பிராணனை விடுகிறபடியினால் பிராணனிலும் ஆத்மாவே பிரியமாகும்.

இந்தப்படி ஸ்ரீ சற்குரு சன்னிதானத்தில் நன்றாய் விசாரித்துப் புத்திர மித்திர களத்திராதி தேகேந்திரிய பிராணாதிகளுந் துக்கசொரூபமென்றறிந்து அதுகளிடத்தி லிருக்கிற பிரியாபிமானங்களை விட்டுவிட்டு, நீங்காப் பிரி யத்துவமாகிய வாத்மாவே தானென்று அவ் வாத்மாவினி டத்தி லெப்போதும் பிரியம் வைத்திருக்கிறவ னெவனோ, அவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சமசய மில்லை சித்தம்.

## பிரியத்துவ நிரூபகம்.

முற்றிற்று.

---

நாற்பத்தைந்தாவது.

# மகாவாக்கிய நிரூபகம்.

சங்கை. சுருதியாதிகளில் மகாவாக்கிய ஜென்னிய ஞானமே ஞானமென்றும் மற்ற ஞானமெல்லாங் குஞ்ஞான மென்றுஞ் சொல்லுகிறபடியினால் மகாவாக்கியமாவ தே தென்னில்,

உத்தரம். கூர்மையான புத்திசாதகமிருந்தால் மோக்ஷ லட்சுமியை யெளிதிற் கூடலாம். உலகத்தில் யாருக்காகி லும் பிரயாசை யில்லாமல் புழுதியி லமிழ்ந்து கிடக்கிற மாணிக்க மகப்பட்டால் அதைப் பதனம்பண்ணுவார்க ளன்றி மேலசாய் விட்டுவிடமாட்டார்கள். எருக்கன்செடியில் தேன் குடங்குடமா யகப்பட்டால் காடுகள் தோறும்போய் வீணாய் அலைந்து திரியமாட்டார்கள். அதுபோல முமூட் சுக்களும் மகா வாக்கியார்த்த விசார ஞானமிருக்கச் சரிதையாதிகளை யபேக்ஷித்து விருதாவில் அலைந்து திரிய மாட்டாகள்.

ச-கை. ஆனால் அதை விசாரிக்கு முறைமை யெப்படி யென்னில்,

உ-ம். அனேக ஜன்மாந்தரங்களி லீஸ்வரார்ப்பண மாகச் செய்யப்பட்ட நித்தியநைமித்திய கன்மங்களினா லும் சகுண வுபாசனையினாலும் சித்தசுத்தியுண்டாகி மனுஷ லோகமுதல் பிரமலோக பரியந்தமான சர்வமும் அநித் தியமென்றுந் துக்கமென்று மறிந்து, இந்த ஜனன மரண துக்கமான சம்சாரத்திற்குப் பயந்து நித்தியாநித்தியவஸ்து விவேகம் இகமுத்திரார்த்த பலபோக விராகம், சமாதிஷட்க சம்பத்தி, முமூட்சுத்வம் என்கிற சாதனசதுஷ்டயமும்

இயற்கையி லுண்டானவனுப், இந்தத் தேகத்தில்தானே பிரயாசையில்லாமல் முத்திகாந்தையைக் கூடுகிறமார்க்க மிருக்க, நாம் விருதாவாகப் பத்திவயிராக்கிய கன்மக்குழி களில் விழுந்து, ஏன் இளைத்துப்போகவேண்டும்? தேகம விழுந்துபோன பிறகு முத்தியுண்டாகுமென்பதிற் பிர மாணமே காணேம்; இநதச் சரீரத்தில்தானே முத்திசுகத் தைக்காணும்வழி சொல்லமாட்டாமல், இறநதுபோன பின்பு முத்தியுண்டென்று சொல்லுகிற அனுசாரியர்களை நம்பிச் சேவைபண்ணுகின்றவர்கள் இந்தச் சம்சார சமுத் திரத்தை யெப்படி கடக்கப்போகிறார்கள்.

ஞானதிருஷ்டியினு லகங்காரத்தை வேறுபடுத்தி அந்த க்ஷணமே பிரமசுகத்தை யபரோட்சமா யனுபவிக்கச் செய் யப்பட்ட சற்குரு சேவையினுல் இந்தச் சம்சாரதுக்க நீங்குமென்பதிற் சநதேகமில்லை யென்று சிந்தித்துக் கொண்டு, சம்சாரத்திலிருந்து மில்லாமல் விடுபட்டவரும், ஞானவயிராக்கிய முடையவரும், பிரமானந்தானுபவத்தில் ரமித்திருக்கிறவரும், காமக்குரோதாதி ரகிதரும், தானென் றீஸ்வரனென்றென்கிற துவைதபாவமில்லாதவரும், விதிமார்க்கமாய் கோடானுகோடி சற்கன்மங்கள் பண்ணு கிறவரும், அப்படி செய்தபோது மவற்றிற் பற்றின்றி யிருப்பவரும், ஒருக்காலுஞ் சொரூபஸ்திதியை மறவாத வரும், அந்தரங்க மக்கினரும், நினைப்பு மறப்பில்லாத வரும், எப்படிப்பட்ட அபக்குவர்களையும், ஒருநிமிஷமாத் திரத்தில் தமது சந்நிதானவிசேஷத்தினுல் பரிபக்குவப்படு த்திப் பரஞானத்தைக் கொடுத்தருளப்பட்ட மகாத்மாவு மாகிய ஞானுசிரியரெங்கே யெழுந்தருளி யிருக்கிறாரோ வென்னுந் தேட்டரவுடன் அகத்தில் விரத்தியையும், புறத் தில் ஆராதனைக் குரிய பத்திரபுஷ்பாதி வஸ்துக்களையுங் கைப்பற்றிக்கொண்டு,

காடு, நாடு, மலை, குகை முதலிய ஸ்தானங்களெல்லாஞ் சுற்றித் திரிந்து ஓரிடத்தில் சமஸ்த வேதாந்தசாஸ்திர பூரணக்கியரும், சொப்பிரகாச வானந்தமே திருமேனியாயெழுந்தருளி விளங்கப்பட்ட வனுபவசிகாமணியுமாகிய ஸ்ரீசற்குருவைக்கண்டு சரணாகதியென்றடைந்து, அடியற்ற மரம்போல்விழுந்து சாஷ்டாங்க பஞ்சாங்க அஷ்டாங்க முதலிய நமஸ்காரங்கள்செய்து ஆனந்தபரவசனாயெழுந்து நின்று, கைகட்டி வாய்பொத்திக்கொண்டு, சைதன்யம், சாஸ்வதம், சாந்தம், வியோமாதீதம், நிரஞ்சனம், நாதபிந்துகளாதீதம், தஸ்மை ஸ்ரீகுரவேநமா என்று பலவாருகத் துதித்து,

ஓ சுவாமீ! கிருபாநிதீ! அடியேன் சம்சாரபந்தத்திலுண்டான தாபத்திரயங்களினின்று நீங்கி, இந்தச் சரீரத்தில்தானே பிறப்பிறப் பில்லாத மோக்ஷானந்தத்தைப் பெறும்படி அனுக்கிரகஞ் செய்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தான். அதுகேட்டு அவ்வாசிரியரும் கிருபைகூர்ந்து அப்படியே நல்லதென்று அபயாஸ்தங் கொடுத்து, அவனை யாதரித்துச் சிலகாலந் தமது சந்நிதானத்திலிருக்கும்படி செய்தருளிய பிற்பாடு ஆலசியன், நிஷ்டூரன், குருசேவை, வஞ்சகன், ஸ்தம்பன மாதிமாரண மாதமான அஷ்டவித கர்மங்களைச் செய்கின்றவன், விஷயாசத்தியுடையவன், பாஷாண்ட மதஸ்தன், சோம்பன், பொய்யன், ஞானசோரன், சாரவிசாரன், கோபன், மூர்க்கன், டம்பன், கோளன், காமுகன், சித்தசுத்தி யில்லாதவன், அனாசாரன் ஆகிய இவர்களைத்தள்ளி ஞானவயிராக்கிய யுத்தன், சிவபாவமில்லாதவன், சித்தசுத்தியுடையவன் ஆசாரன், சத்தியன், திடவிரதன், குருபத்தியுள்ளவன் ஆகிய இவர்களுக்கே யுபதேசிக்க வேண்டுமென்றும,

அனதிகாரிகளும் மோட்சவிச்சை யுண்டாய் வருவார்களானல், அவர்களையும் தமது சந்நிதான விசேஷத்தினுல் லோகத்தைப் பொன்னுகச்செய்கின்ற பரிசனவேதிபோலக் கிருபாலோசனத்தினுல் தரிசனவேதிசெய்து பரிபாகப்படுத்தி மந்திரபாவ தியானயோகங்களினு லவர்கள் சித்தத்தை நிருமலம்பண்ணி, அத்தியாரோப வபவாதயுக்திகளையும், அத்துவாவிருத்திலட்சணை, தடஸ்தலட்சணை, சொரூபலட்சணையாகிய லட்சணுத்திரயங்களை கிரமமாக வெடுத்துப்போதித்துத் தேகாதியனுத்மபுத்தியை நேதி பண்ணி, நீயே பரப்பிரமமென் றுள்ளபடி சகல சம்சயமுமறக் குருசாம்பிரதாயக்கிரமத்தினுல் சொரூபஞானத்தைத் தெரிவிக்கவேண்டுமென்றும், சொல்லுகின்ற வுபதேசக்கிரமவிதிப்படி தம்மைவந்தடுத்த சீடனது பக்குவத்தை தினேதினே பரிக்ஷித்து அதிதீவிரபக்குவனென்றறிந்து உத்தேசம், இலக்ஷணம், சோதனையோடுங் கூடிய மகாவாக்கியத்தை யனுக்கிரகஞ்செய்யும்படி திருவுளங்கொண்டு அனைதுசஞ்சித கன்மமெல்லாம் அடியோ டறும்படி ஆமைபோற் றிருவுள்ளத்திற் சிந்தித்து, ஆகாமியகன்மமெல்லா நீங்கும்படி மீனைப்போற் கிருபாதிருஷ்டிவைத்து, பிராரத்தகன்மமும் பிரமானந்தரசமாய் ரமிக்கும்படி பறவைபோல் அஸ்தமஸ்தக சையோகஞ்செய்து, பஸ்மகவசமிட்டு விதிநிஷேதரகிதமாகிய சாமவேத மகாவாக்கியார்த்தத்தை யுபதேசஞ்செய்தருளினுர்.

ச-கை. ஆனுல் அத்தியாரோபமாவ தேதென்னில்,

உ-ம். ரச்சு, சுத்திகை, ஸ்தாணுவாதியில் கிரமத்தி யில்லாத சர்ப்பரஜித சோராதி கற்பிதம்போற் சத்ரூபப் பிரமத்தி லில்லாதமாயாப் பிரபஞ்ச கற்பிதமே அத்தியாரோபம்.

ச-கை. அபவாதமாவ தேதென்னில்,

உ-ம். இது சர்ப்பமல்ல, ரச்சுவே; இது ரசிதமல்ல, கிளிஞ்சலே; இது சோரனல்ல, ஸ்தாணுவே யென் றறிவிப்பதுபோலும்; ஒரு விருட்சத்தில் இலை, பூ, பிஞ்சு, காய், பழம், பட்டை, நார், வேர், கிளை, கொம்பு, ருசிகளாகிய இதுகள் பேதமானாலும் காரணமாகிய வித்து ஒன்றேயென் றறிவிப்பது போலும் இது பிரபஞ்சமல்லை, பிரமமேயென் றறிவிப்பது அபவாதமாகும்.

ச-கை. ஆனால் அத்துவாவிருத்தி லட்சணையாவதேதென்னில்,

உ-ம். தேகாதி யனாத்மவர்க்கங்களை யுத்தியினால் நேதி பண்ணி, நின்ற ஆத்மாவை யறிவிப்பதே அத்துவாவிருத்தி லட்சணை.

ச-கை. தடஸ்தலட்சணையாவ தேதென்னில்,

உ-ம். விருட்சத்தின்மேல் சந்திர னிருப்பா னென்பதுபோலப் பூதாதி ஜகத்காரணங் கொண்டு ஆத்மாவை யறிவிப்பதே தடஸ்தலட்சணை.

ச-கை. சொரூபலட்சணையாவ தேதென்னில்,

உ-ம். பிரகாசசொரூபமே சூரியனென்பதுபோல ஆத்மாவி னிஜசொரூப மறிவிப்பதே சொரூபலட்சணையென்று சொல்லப்படும். இதுவுமல்லாமல் அந்த மகாவாக்கியார்த்த விசாரத்தினா லுண்டாகிற கூடஸ்த பிரமாயிக்ய ஞானமே மோட்சமென்று சகல வேதாந்த சாஸ்திரங்களிலும் சொல்லப்படுகின்றது. பெரியோர்களுடைய வநுபவமும் நமது சுவானுபவமும் அதுவேயாகும்.

ச-கை. ஆனா லடியேனுக்கு அந்த மகாவாக்கியத்தை யுபதேசித்துக் கூடஸ்த பிரமாயிக்ய ஞானத்தையும் நன்றாய் சம்சய விபரீத மறும்படி யனுக்கிரகஞ் செய்தருள

வேண்டும். ஆயினும் அதற்கு மகாவாக்கியமென்கிற சிலாக்கியமேன் வந்ததென்னில்,

உ-ம். வேதத்தில் விதிவாக்கியம், நிஷித்தவாக்கியம், அவாந்தரவாக்கியம், ஆப்தவாக்கியம் என்று சொல்லப்படுகிற வாக்ய சதுஷ்டயத்தில் ஆப்தவாக்கியம் அவாங்மனோ கோசரமாயிருக்கிற சைதன்யவஸ்துவைக் கரதலாமலகம்போற் காட்டுகிறபடியினால் அதற்கு மகாவாக்கியமென்று பேராயிற்று.

ச-கை. மற்ற மூன்றில் விதிவாக்கியமாவ தேதென்னில்,

உ-ம். பிராமணனைக்குறித்து காலை மாலைகளி லனுஷ்டான சந்தியா வந்தனைகளும், மரணபரியந்தம் அக்கினிஹோத்திரமும் பண்ணவேண்டுமென்கிறது விதிவாக்கியம்.

ச-கை. நிஷித்தவாக்கியமாவ தேதென்னில்,

உ-ம். சுராபானாதிகளைப் பண்ணக்கூடா தென்கிறது நிஷித்தவாக்கியம்

ச-கை. அவாந்தரவாக்கியமாவ தேதென்னில்,

உ-ம். ஜோதிஷ்டோமாதிகளைப் பண்ணினால் சீவனுக்குச் சொர்க்காதிபல னுண்டாகுமென்றது அவாந்தரவாக்கியம். இம்மூன்று வாக்கியமும் அதுபோலப் பிரத்தியேகாத்ம சொரூபத்தைத் தெரிவிக்கமாட்டாது. ஆதலால் அதற்கு மகாவாக்கியமென்பது பிரமாணசித்தமே.

ச-கை. காண்டத்திரயமென்று சுருதிகளிற் சொல்லப்படுகிற தேதென்னில்,

உ-ம் கன்மம், உபாசனை, ஞானம் என்று மூன்றுவிதமா யிருக்கும்.

ச-கை. கன்மகாண்டமாவ தேதென்னில்,

உ-ம். வேதபுருஷனுடைய நாபிக்குக்கீழ் சொர்க்க லோகபரியந்தங் கன்மகாண்டம்.

ச-கை. உபாசனகாண்டமாவ தேதென்னில்,

உ-ம். வேதபுருஷனுடைய நாபிக்குமேல் கழுத்துக் குக்கீழ்ப் பிரமலோகபரியந்தம் உபாசனகாண்டம்.

ச-கை. ஞானகாண்டமாவ தேதென்னில்,

உ-ம். வேதபுருஷனுடைய கழுத்துக்குமேல் சிரசுபரி யந்தம் ஞானகாண்டம்; அந்த ஞானகாண்டத்தில் இந்தத் தத்துவமசியென்னு மகாவாக்கியமானது நாலு வர்ணமும், மூன்று பதமும், மூன்று பதார்த்தமும், மூன்று லக்ஷணையு மாக விளங்கும்.

ச-கை. நாலுவர்ணமாவ தேதென்னில்,

உ-ம். சத்தியம், ஞானம், அனந்தம். ஆனந்தம் என் பதே நாலு வர்ணம்.

ச-கை. மூன்று பதமாவ தேதென்னில்,

உ-ம். தத்பதம், துவம்பதம், அசிபதம் என்பதே மூன்றுபதம்.

ச-கை. மூன்று பதார்த்தமாவ தேதென்னில்,

உ-ம். அது, நீ, ஆனாய் என்பதே மூன்று பதார்த்தம். இவற்றுள் அதுவென்பது பரம், நீ என்பது சீவன், ஆனா யென்பது சிவம்.

ச-கை. மூன்றுலக்ஷணையாவ தேதென்னில்,

உ-ம். விட்டலக்ஷணை, விடாதலக்ஷணை, விட்டுவிடாத லக்ஷணை என்பதே மூன்று லக்ஷணை இதற்குச் சங்சர்க்க வாக்கியம், விசிட்டவாக்கியம், அகண்டவாக்கியமென்று சொல்லப்படும். இப்படி சொல்லப்பட்ட வேதாந்த சித் தாந்தத்திற்குத தத்துவம் இருபத்தெட்டென்று சொல்லு

வார்கள். அசித்துருவமாகிய தத்துவம் இருபத்துநாலும் ஜகமாகவும், சித்துருவமாகிய தத்துவம் நாலில் புருடன், காலபரம், வியோமம் ஆகிய மூன்றும் சீவனுகவும், பரம் ஒன்றும் பரமாகவும் விளங்கும். இதுவுமல்லாமல் மேற் சொல்லிய சத்தியம் பரமாகவும், ஞானம் சீவனுகவும், அனந்தம் சராசரமாகவும், ஆனந்தம் சகல புவனமாவும் விளங்கும்.

நீ யென்னும் பதத்திற்கு அபரோக்ஷமாகிய காரியவுபாதி - 7, அதுவென்னும் பதத்திற்குப் பரோக்ஷமாகிய காரணவுபாதி - 7, அவத்தை-9, அபிமானி-9, முகவிய லக்கியம்-2, அசுத்த சுத்தம்-2, இவைகளை யறியுமிடத்துச் சிரவண மனன நிதித்தியாசனமாகிய மூவகையினுல் விளங்கப்படும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சற்குரு சன்னிதானத்தில் வேதாந்த சாஸ்திரார்த்தங்களையைத் திரிபறக்கேட்டறிவது சிரவணமென்றும், அங்ஙனங் கேட்ட சிரவணுர்த்தத்தினுல் உபாதியை யன்னியப்படுத்தி அவத்தையை யநித்தியமாக்கிச் சொரூப நிச்சயஞ் செய்து, அதை மனத்திற் சிந்தித்துத் தரிப்பதே மனனமென்றும், அங்ஙன மனனஞ் செய்தபொருளைச் சுவானுபூதியிற் காக்ஷிப்படுவதே நிதித்தியாசனமென்றும் சொல்லப்படும். இந்தச் சிரவணுதிகளினுல்தான் அந்தப் பொருள் விளங்கப்படும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சிரவணமானது காரியகாரண வுபாதிகளை நீக்கிச் சீவனிது, பரனிதுவென்னக் கேள்வியினுற் றெரிசிக்கப் பண்ணும்.

ச-கை. அஃதெவ்வா றென்னில்,

உ-ம். காரியவுபாதியென்பது சீவவுபாதி; அதற்கு வாக்கியம் சங்சர்க்கவாக்கியமென்று சொல்லப்படும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். மஞ்சாக் குரோசந்திகங்காயாம் கோஷப்பிரதி வசதி யென்பது.

ச-கை. அதற்கர்த்த மேதென்னில்,

உ-ம். மஞ்சங் கூப்பிடுகிறதென்றும், கங்கை சத்திக் கிறதென்றுஞ் சொல்வது. அப்படி சொல்லுமிடத்து மஞ்சம் சடம்; அது கூப்பிடுமா? கூப்பிடவறியாது. மஞ் சத்தினு ளொருபுருஷனிருந்து கூப்பிட்டானென் றறிய வேண்டிற்று. கங்கையாவது ஜடம். அது சடமாதலால் கோஷிக்கவறியாது. அதன்கரையிலிடைச்சேரி யிருக்கிற தென்று கொள்ளவேண்டிற்று. இதுபோலேழுபாதிக்குஞ் சீவனே சாக்ஷியாய் நின்று சேட்டிப் பிக்கிறானென் றறிய வேண்டியது. இது விட்டலக்கணை.

ச-கை. காரணவுபாதி யேதென்னில்,

உ-ம். காரணவுபாதி யென்பது பரவுபாதி; இதற்கு வாக்கியம் விசிட்டவாக்கியமென்று சொல்லப்படும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சுரோணத் திஷ்டதி சுவேதோதாவதி என்பது.

ச-கை. அதற் கர்த்த மேதென்னில்,

உ-ம். ஒரு சிவப்புக்குதிரையும், வெள்ளைப்பசுவுங் கண்டாயோ வென்பது. அப்படிச் சொல்லுமிடத்து சிவப்பு நிற்கிறது. வெள்ளை போகிறதென்றால் சிவப்பு நிறம்வேறுபட்டுக் குதிரை யன்றித் தனியேநில்லாது; வெள்ளை நிறம் வேறுபட்டுப் பசுவையன்றித் தனியே போகாது.' ஆதலால் சிவப்புநிறமுள்ள குதிரை நிற்கிறதென்

றும், வெள்ளைநிறமுள்ள பசு போகிறதென்றும் கொள்ள வேண்டிற்று. இதுபோல சர்வஞ்ஞத்வாதி காரணோபாதியாகிய துரியத்தை விடாமல் பரனே சாட்சியாய் நின்று சிவனும்பரனு மன்னியமாகாமல் மகா மாயையினால் அன்னியோன்னிய ஏகமாயிருக்கிறானென் றறியவேண்டியது. இது விடாதலக்கணை.

ச-கை. அசிபதமாவ தேதென்னில்,

உ-ம். மனனத்திலற்ற விருவகைப் பொருளையுங் காட்சியி லயிக்கம் பண்ணுவதே அசிபதம். இதற்கு வாக்கியம் அகண்டவாக்கியமென்று சொல்லப்படும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். சோயந் தேவதத்தகா வென்பது.

ச-கை. அதற் கர்த்த மேதென்னில்,

உ-ம். அவனே யிவன், இவனே அவனென்பது. அப்படிச் சொல்லுமிடத்துச் சர்வ சராசரப் பிரபஞ்சமுந் தன் வடிவாகக்கண்டு விளங்கியபரன், எல்லாந்தானாய் விளங்குகிறோமென்பது மறந்து, தன்னையு மிழந்து பரமாதீதமாய் சாந்தமான வுபசாந்தத்தை யயிக்கமென் றறியவேண்டியது. இது விட்டு விடாதலக்கணை.

ச-கை. நாலுவேதத்திலுஞ் ஞானகாண்டத்தில் நான்கு உபநிஷத்திலிருந்து நான்கு மகாவாக்கிய முண்டாயிற்றென்ப தெப்படி யென்னில்,

உ-ம். இருக்குவேதத்தில் அயித்திரிய வுபநிஷத்திற் பிரஞ்ஞானம் பிரமமென்னும் வாக்கியமும், யசுர்வேதத்தில் தைத்திரிய வுபநிஷத்தில் அகம்பிரமாஸ்மி யென்னும் வாக்கியமும், சாமவேதத்தில் சாந்தோக்கிய வுபநிஷத்தில் தத்துவமசியென்னும் வாக்கியமும், அதர்வணவேதத்தில் மாண

டோக்கிய வுபநிஷத்தில் அயமாத்மாப்பிரமமென்னும் வாக்கியமு முண்டாயிற்று. இந்த நான்குவாக்கியமும் பதிஞெரு பதமாயிற்று.

ச-கை. சீவ பரங்களுக் கயிக்கியத்தைப் பிரதிபாதிக்கிறதற்கு ஒருவாக்கியம்போதாதோ? நாலுவாக்கிய மேதுக்கென்னில்.

உ-ம். இந்த நாலுவாக்கியங்களிலும் பிரயோசன முண்டு.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். தத்துவமசி வாக்கியம் குருவின் உபதேசவாக்கியமும், அகம்பிரமாஸ்மி வாக்கியம் சீஷனநுபவ வாக்கியமும், பிரஞ்ஞானம் பிரமமென்னும் வாக்கியம் லட்சண வாக்கியமும், அயமாத்மாப் பிரமமென்னும் வாக்கியம் சாட்சாத்கார வாக்கியமுமாகும்.

ச-கை. இதுகளுக் கர்த்த மெப்படி யென்னில்,

உ-ம். வாக்கியங்களுக்குக் காரணம் பதமும், பதார்த்தமு மாதலால், பூர்வம் சாமானியமாய் விசாரித்திருந்த போதிலும், இன்னும் விசேஷமாகவே விசாரித்தறியவேண்டும்.

ச-கை. ஆனல் பதமும், பதார்த்தமுமாவ தேதென்னில்,

உ-ம். தொம்பதம், தத்பதம், அசிபதம் என மூன்று பதம். தொம்பதார்த்தம் சீவன், தத்பதார்த்தம் ஈஸ்வரன், அசிபதார்த்தம் அயிக்கம். இதுவே பதார்த்தமென்று சொல்லப்படும்.

ச-கை. தொம்பதார்த்த பூதனுன சீவசொரூப மேதென்னில்,

உ-ம். அவித்தையும், அதிஷ்டான சைதன்னியமும், சைதன்யகற்பிதமான அபஞ்சீகிருத பூதகாரிய லிங்கசரீரமும், அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசனும், சிதாபாச தர்மமான கிஞ்சிக்ஞத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வாதிகளுங் கூடிச் சீவசொரூபமென்று சொல்லப்படும்.

ச-கை. தத்பதார்த்த பூதனான பரசொரூப மேதென்னில்,

உ-ம். மாயையும், அதிஷ்டான சைதன்யமும், அதிற் பிரதிபிம்பித்த ஈஸ்வரனும், ஈஸ்வரதர்மமான சர்வக்ஞத்வாதி குணங்களுங்கூடி, ஈஸ்வரசொரூபமென்று சொல்லப்படும்.

ச-கை. அசிபதசொரூப மேதென்னில்,

உ-ம். கூடஸ்தனே பிரமம், பிரமமே கூடஸ்தனென்னும், அயிக்கியார்த்தமா யறிவதே அசிபதசொரூபமென்று சொல்லப்படும்.

ச-கை. ஆனல் கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுடன் கூடியிருக்கிற சீவனுக்கும், சர்வக்ஞத்வாதி குணங்களுடன் கூடியிருக்கிற ஈஸ்வரனுக்கும் அயிக்க மெப்படி கூடும்? இப்படி விரோதமான அர்த்தத்தைச் சுருதிகளில் எப்படி சொல்லுகின்றது? இதுகளைச் சந்தேக விபரீதமற அடியேனுக்குப் போதித் தருள வேண்டுமென்னில்,

உ-ம். முன் சொல்லிய லக்ஷணத்திரயங்களில் விட்ட லக்ஷணையாகிய ஜகர்லக்ஷணையிற் சொல்லுகிறேம். நீ சாவதானமாய்க் கேள்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். கங்காதீரத்தி லிருந்தொரு பிராமணன் வர, அவனைக்கண்டு மற்றொரு பிராமணன் சுவாமீ! கங்காதீரத்

தில் விசேஷமென்னவென்று கேட்க, அந்தப் பிராமணன் கங்காயாங் கோஷவதி யென்றான்.

ச-கை. ஆதற்குத் தாற்பரிய மேதென்னில்,

உ-ம். கங்கையென்கிற பதத்திற்குப் பிரவாகம் அர்த்தமாகையினால் பிரவாகத்தி லிடைச்சேரி யிருக்குமென்று கொள்ளப்படாது; அப்படி கொள்ளுமிடத்துப் பிரத்தியட்ச விரோதமாயிருக்கும். ஆதலால் கங்கைக்கர்த்தமான பிரவாகத்தைச் சர்வாத்மனாய் விட்டுவிட்டு, அப்பிரவாகத்தோடுங் கூடியிருந்த கரையினிடத்தி லிடைச்சேரி யிருக்கிறதென்று கொள்ளுவதே தாற்பரியமாயிற்று.

ச-கை. ஆனா லிந்தப்படியே மகாவாக்கியத்திலுஞ் ஜகர் லட்சணை சொல்லலாமா வென்னில்,

உ-ம். சொல்லப்படாது.

ச-கை. அதேனென்னில்,

உ-ம். தொம்பதார்த்த பூதனான கூடஸ்த சைதன்னிய பரியந்தமும் விட்டுவிட்டால், முமுட்சுக்கள் சொரூபமேயில்லாமற் போகின்றது. அதனால் பிரத்தியட்ச விரோதம் வரும். ஆதலால் இந்த ஜகர்லட்சணங்கூடாது.

ச-கை. ஆனால் எந்த லட்சணத்தினா லெந்தவாக்கியம் பிரமத்தைப் போதிக்கின்றதென்னில்,

உ-ம். அன்னமயகோசமுதல் விஞ்ஞானமயகோச மட்டும் இந்த நாலு கோசமும் பரப்பிரமமென்கிற வாக்கியத்திற்குச் சடமான கோசங்கள். அவைகள் பிரமமல்லாதபடியினா லவைகளை விட்டு விட்டு அவைகளுக் கதிஷ்டான பூதமான சைதன்னியத்தினிடத்திலேயே தாற்பரியம்.

ச-கை. ஆனால் அஜகர்லட்சணையாவ தேதென்னில்,

உ-ம். மஞ்சாக் குரோசந்தி யென்கிற வாக்கியத்தில் மஞ்சங் கூப்பிடுகிறதென்று அர்த்தமாகின்றது. அந்த

அர்த்தத்தை யங்கீகரித்தால் பிரத்தியட்ச விரோதம்வரும். ஆதலால் மஞ்சத்தை விடாமல் அதிலிருக்கும் புருஷன் கூப்பிடுகிருனென்று கொள்ளுகிறதே தாற்பரியம். இப்படி போல வேதத்தில் சத்தியஞான வனந்தானந்தமென்னும் வாக்கியத்தில் ஆனந்தமயத்துடன் கூடியிருக்கிற வாத்மா வுக்குச் சச்சிதானந்த லட்சணத்தை விடாமல் ஆனந்தமய கோசத்தைச் சொல்லுகின்றது.

ச-கை. ஆனு லிந்த அர்த்தத்தை மகாவாக்கியத்தி லங்கீகரிக்கலாமே யென்னில்,

உ-ம். அப்படி யங்கீகரிக்கப்படாது.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுடன் கூடியிருக்கிற சைதன்னியமே சீவன், ஆகையினுல் குணவிசிஷ்டனை வனுக்கு அயிக்யஞ் சொல்லக்கூடாது. ஆதலாலிந்த அஜ கர்லட்சணையுங் கூடாது.

ச-கை. ஜகத ஜகர்லட்சணையாவதேதென்னில்,

உ-ம். சொயந் தேவதத்தகா என்கிறவாக்கியத்தில் கங்காதீரத்தில் அஞ்சாம்வருஷம் தேவதத்தனைப் பார்த் தோம். அவனையே இந்தக் காவேரிதீரத்தில் ஐம்பதாம் வருஷங்கண்டோமென்கிற விவகாரத்தில் அந்தத்தேசமும் அந்தக்காலமும் இந்தத்தேசமும் இந்தக்காலமும் ஆகிய புருஷனை வாச்சியார்த்தமென் றங்கீ கரித்தோமானுல்; வெகுவிரோதமுண்டு. எப்படி யென்ருல், கங்காதீரங் காவேரிதீரமாகாது; காவேரிதீரங் கங்காதீரமாகாது; அந் தக்கால மிந்தக்காலமாகாது; இந்தக்கால மந்தக்கால மாகாது. அதனுல் பிரமாணுந்தரமான பிரத்தியட்சனுக்கு விரோதமாயிருக்கின்றது. ஆதலால் அந்தத்தேசம், அந்தக் காலம், இந்தத்தேசம், இந்தக்காலமாகிய வாச்சியார்த்

தத்தை விட்டுவிட்டு, லட்சியார்த்த பூதமான தேவதத்தனை யறிந்துகொள்வதே தாற்பரியம்.

அதுபோல மகாவாக்கியத்தில் தற்பத வாச்சியார்த்த மான மாயைக்கும், மாயாப் பிரதிவிம்பனுன ஈஸ்வரனது சர்வக்ஞத்வாதி குணங்களுக்கும், தொம்பத வாச்சியார்த்த மான அவித்தைக்கும், அவித்தையாப் பிரதிவிம்பனுன சிதாபாசனது கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுக்கும் அன்னி யோன்னிய அயிக்கியம் அங்கீகரித்தால் பிரத்தியட்ச விரோதம்வரும்.

ஆதலால் விரோதமான மாயா சர்வக்ஞத்வாதி குணங் களும், அவித்தையா கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுமாகிய இருவகையுந் தள்ளிவிட்டு, விம்பத்தோற்றவொடுக்கமும், விம்பப் பிரதிவிம்பத் தோற்றவொடுக்கமும், அஞ்ஞானமும் அஞ்ஞானகாரியத தோற்ற வொடுக்கமு மறிவித்து, லட் சியபூதமான சைதன்னிய மாத்திரத்தைப் பற்றிச் சச்சி தானந்த பிரமமே நீ; நீயே அந்தச் சச்சிதானந்த பிரம மென்று மகாவாக்கியத்தில் ஜகத ஜகர்லட்சணையினுல் போதிக்கப்படுகின்றது.

ஆதலால் நீயே பிரமம்; உன்னுடைய சித்தவிருத்தி யில் நீயே யவதானித்துப் பார்க்கவேண்டும். இதிற் சம்சய மில்லை. இவற்றுள் வாச்சியார்த்தம், இலட்சியார்த்த மென்னு மிருவகையில் வாச்சியார்த்த மங்கீகரித்தா லெங்கே பிரத்தியட்ச விரோதமாய்த் தோற்றுகின்றதோ, அங்கே லட்சியார்த்த மங்கீகரிக்கவேண்டும். ஆனபடியினுல் மகா வாக்கிய லட்சணத்தினு லயிக்கியம் போதிக்கப்படுகிற தென்று லட்சணையை யங்கீகரிக்கத்தக்கது. ஆயினும் இந்த மகாவாக்கியத்தையே கிரமப்படி இன்னமொரு பிரகாரமாய் உனக்குப் புத்தியி லமையும்படி போதிக்கின் ருேம்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ர். இருக்குவேதத்தில் பிரஞ்ஞானம் பிரமமென்கிற வாக்கியத்தில் பிரஞ்ஞானமென்றும், பிரமமென்று மிரண்டுபதம்.

ச-கை பிரஞ்ஞானபதத்திற் கர்த்த மேதென்னில்,

உ-ம். வாச்சியார்த்தம், லக்ஷியார்த்தமென் றிரண்டு விதம். அவற்றில் வாச்சியார்த்தமானது பிரத்தியேகாத்மாவின் சாயை அந்தக்கரணத்திற் பிரதிபிம்பித்துத் தற்பிரகாசத்தை யகங்காரனுக்குக் கொடுத்து அகங்காரதர்மத்தைத் தான் மேல்போட்டுக்கொண்டு, சித்துஞ் சடமுமாயன்னியோன்னிய வத்தியாசத்தைப் பண்ணிக்கொண்டு, தப்தாயபிண்டம்போல நான் கர்த்தா, போக்தா, சுகி, துக்கியென் றபிமானிக்கிற போது. சிதாபாசனுக்கு மகங்காரனுக்கும் சகச தாதாத்மியமென்றுஞ் சிற்சடக்கிறந்தியென்றுஞ் சொல்லப்படும்.

ஸ்தூலசரீரத்தை யத்தியாசம் பண்ணிக்கொண்டு அதனது ஷட்பாவ விகாரங்களெல்லாந் தான் மேற்போட்டுக்கொண்டு; உண்டானேன், பிறந்தேன், வளர்ந்தேன், பருத்தேன், இளைத்தேன், நசித்தேன், கறுப்பு, சிவப்பு, குட்டை, நெட்டை யென் றபிமானிக்கிறபோது சிற்சாயை யகங்காரனுக்கும், ஸ்தூலசரீரத்திற்கும் கர்மஜ தாதாத்மியமென்று சொல்லப்படும்.

சரீரதர்மங்க ளெல்லாம் சாட்சியினிடத் தாரோபிக்கும்போது அவ் வகங்காரனுக்குஞ் சாட்சிக்கும் பிராந்திஜ தாதாத்மியமென்று சொல்லப்படும். இந்தப்பிரகாரம் சரீரத்திரயத்திற் கூடியிருக்கிற சிதாபாசன், ஞாதுரு, ஞான, ஞேயமாகிய திரிபுடி வியாபாரம் பண்ணுவன்.

ச-கை. ஞாதுரு ஞான ஞேயமாவ தேதென்னில்,

உ-ம். அந்தக்கரண பிரதிபிம்ப சைதன்னியமே சிதாபாசன். அவனையே ஞாதுருவென்றும், அவன்விருத்தியுடன் கூடும்போது ஞானமென்றும், அவன் விஷயங்களுடன் கூடும்போது ஞேயமென்றுஞ் சொல்லப்படும். இந்தத் திரிபுடியுடன் கூடியிருக்கிற சிதாபாசனே தசேந்திரிய வியாபாரத்தைச் செய்வன்.

யாதொரு சைதன்னியம் அந்தக்கரண விருத்தியோடு கூடிச் சுரோத்திரேந்திரியத்துவாரா சத்தங்களையெல்லா மறிகின்றது. அதுவே தொக்கிந்திரியத்துவாரா பரிசங்களையும், சட்சிந்திரியத்துவாரா ரூபங்களையும், சிங்ஙுவையிந்திரியத்துவாரா ரசங்களையும், கிராணேந்திரியத்துவாரா கந்தங்களையும், வாக்கிந்திரியத்துவாரா வசனங்களையும், பாதேந்திரியத்துவாரா கமனங்களையும், பாணீந்திரியத்துவாரா தானங்களையும், பாயுரிந்திரியத்துவாரா மலவிசர்க்கத்தையும், உபஸ்தேந்திரியத்துவாரா ஆனந்தத்தையும் அறிகின்றது. இப்படி தசேந்திரிய வியாபாரவிஷயங்களையறிகிற சீவனையே வாச்சியார்த்தமென்று சொல்லப்படும்.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம் லட்சியார்த்த பிம்பவாச்சிய மகங்காரத்திற் பிரதிபலித்து இரண்டுங் கூடினபோது லட்சியமாகிய சாட்சியசைவற்றிருக்க, அகங்காரந் தொழிற்படுகிறதே வாச்சியார்த்த மென்னப்படும்.

ச-கை. இனி லட்சியார்த்த மேதென்னில்,

உ-ம். அவ்வந்தக்கரணத்தையும், அதுகளின் விருத்திகளையும், தேகேந்திரியாதி வியாபாரங்களாகிய வாச்சியத்தையுந் தள்ளி, மஞ்சாக்குரோச விலட்சணம்போல அவஸ்தாத்திரய சாட்சியாய் கூடஸ்தனாய் நிர்விகாரியாயிருக்கிற பிரத்தியேகாத்ம சைதன்னியமே லட்சியார்த்தமென்று சொல்லப்படும்.

ச-கை. இனி பிரமபதத்திற்கு வாச்சியார்த்த மே தென்னில்,

உ-ம். உத்தமமாயிருக்கிற இந்திராதி தேவதை சரீரங் களிலும், மத்திமமாயிருக்கிற மனுஷாதி சரீரங்களிலும், அதமமாயிருக்கிற பசுவாதி சரீரங்களிலும், அபஞ்சீகிருத பூத பஞ்சீகரண பூதங்களிலும் யாதொரு சைதன்னிய மானது ஏகமாயிருக்கின்றதோ அதுவே வாச்சியார்த்த மென்று சொல்லப்படும்.

ச-கை. லட்சியார்த்தமாவ தேதென்னில்,

உ-ம். மாயாகாரியங்க ளனைத்தையுந் தள்ளிவிட்டுப் பிரபஞ்ச விலட்சணமாய் பிரபஞ்ச வதிஷ்டானமாய் மாயா தற்காரியாதீதமாய் திரிவித பரிச்சேத சூனியமாய் சர்வத் திரா அனுசூதமாயிருக்கிற பரமாத்ம சைதன்னியந் தானே லட்சியார்த்தமென்று சொல்லப்படும். அஃதே பிரத்தி யேகாத்மாவாயிருக்கிற கூடஸ்தசைதன்னியம். அதுதான் என்னிடத்திலிருக்கிற பிரக்ஞை. இந்தப் பிரக்ஞையே பிரமாவினிடத்திலுமிருக்கிறது. பிரமாவினிடத்திலிருக் கின்ற பிரக்ஞைதான் என்னிடத்திலு மிருக்கிறது. ஆத லால் சைதன்யமென்றாலும், பிரக்ஞானமென்றாலும், பிரம மென்றாலும், ஆத்மாவென்றாலும் பேர்மாத்திரம் வேறே யல்லாமல், வஸ்து ஒன்றானபடியினாலேகமென்கிற பதத் தினாலயிக்கியஞ் சொல்லப்பட்டது.

ச-கை. யசுர்வேதத்தில் அகம்பிரமாஸ்மி யென்னும் பதத்தில் அகமென்கிற பதத்திற் கர்த்த மேதென்னில்,

உ-ம். பரிபூரணமாய் தேசகால வஸ்து பரிச்சேத சூனியமாயிருக்கிற பிரத்தியேகாத்ம சைதன்னியந் தானே பிரமவித்தைக் கதிகாரியாயிருக்கிற மனுஷ சரீரத்தில் புத்திக்குச் சாக்ஷியா யிருதயகமலத்தில் அகமகமென்று ஸ்மரித்துக்கொண்டிருக்கும்.

ச-கை ஆனால் பரிபூரணமாயிருக்கிற வாத்மாவுக்குத் தேகசம்பந்தஞ் சொல்லுகையினால் பரிச்சின்னத்துவம் வாராதோ வென்னில்,

உ-ம். சூட்சுமசரீர விலட்சணமாயிருக்கிற படியினாலபரிச்சின்னத்வமாகிய பரிபூரணனென்பதிற் சம்சயமில்லை.

ச-கை. சூனிய பூரணத்தைப்போலேயோ வென்னில்,

உ-ம். சூனிய பூரணம்போ லன்று; சுதா பூரணனே.

ச-கை. அஃதெப்படி யென்னில்,

உ-ம். அகமென்னும்போது சைதன்னியம் அது நிர்விகாரமாகையினா லகமென்று விகாரஞ் சொல்லக்கூடாது. அகங்காரஞ் சடமாகையா லிதுவும் அகமென்று தோற்ற மாட்டாது. பதமோவென்றால் பரமாத்ம பூதமான சைதன்யமே அகங்காரத்துடன் கூடிக்கொண் டகமென்று விளங்குகின்றது. ஆனபடியினால் சடமான வாச்சியத்தைத் தள்ளிச் சைதன்ய மாத்திரமே அகமென்கிற சத்தத்திற் கிலட்சியார்த்த மென்று சொல்லப்படும்.

ச-கை. பிரமபதத்துக் கர்த்த மேதென்னில்,

உ-ம். சுதா எப்போதும் பூரணமாய் தனக்கு முந்தி ஒருவஸ்துவுங் காரணமாயில்லாமல் தனக்குப் பிந்தியொரு வஸ்துவுங் காரியமாயில்லாமல் தன்னிடத்திலொருவஸ்துவுமில்லாமல் தனக்கன்னியமாய் ஒருவஸ்துவு மில்லாமல் யாதொரு சைதன்னியம் ஏகமாயிருக்கின்றதோ, அது தான் பிரமபதத்துக்கு லட்சியார்த்தம்.

ச-கை. அஸ்மியென்கிற பதத்திற் கர்த்த மேதென்னில்,

உ-ம். அவ்விருபதத்தின் லட்சியார்த்த வயிக்கியமே அஸ்மியென்னும் பதார்த்தமென்று சுருதியிற் சொல்லப் படுகின்றது.

ச-கை. சாமவேதத்தில் தத்துவமசி வாக்கியத்தில் தத் பதத்திற் கர்த்த மேதென்னில்,

உ-ம். ஏகமேவாத்வைதம் பிரமமென்று சொல்லப் படும்.

ச-கை. ஏகமென்றால் போதாதோ? ஏகமே வாத் வைதம் பிரமமென்று சொல்லுவானே னென்னில்,

உ-ம். ஏகமென்பதிற் சுசாதி சூனியமும், ஏவவென் பதில் விசாதி சூனியமும், அத்வைத மென்பதில் சுவகத பேத சூனியமும் விளங்குகின்றது. அதனால் அப்படி சொல்லவேண்டிற்று.

ச-கை. உலக பதார்த்தங்களிற் சுசாதிக விசாதிக சுவ கத பேதங்கள் பிரத்தியட்சமாக விளங்கப்படுகின்றது. எப்படியென்றால் விருட்சங்களெல்லா மேகமாயிருந்தாலும் ஆலமரம், அரசமரம் என்கிற பேதமிருக்கின்றபடியால் சுசாதிபேதமும், பாஷாணாதிகள் விருட்சங்களுக் கன்னி யமா யிருக்கிறபடியால் விசாதிபேதமும், பத்திரபுஷ்ப பலாதிகள் விருட்சத்திற்குப் பேதமாய்த் தோற்றுகிறபடி யால் சுவகதபேதமுங் கண்டோம். அதுபோல ஆத்மா விலும் அந்தப் பேதங்கள் கண்டோம். எப்படியென்றால் ஒருவஸ்துவில் சீவனென்றும் ஈஸ்வரனென்றும் பேத மிருக்கிறபடியால் சுசாதிபேதமும், சீவேஸ்வரானைப் பார்க் கிலும் சடப்பிரபஞ்ச மன்னியமாயிருக்கிற படியினால் விசாதிபேதமும் சச்சிதானந்த குணங்களிருக்கின்றபடி யால் சுவ்கத பேதமுங் கண்டோமேயென்னில்,

உ-ம். ஒருவஸ்து தானே யபின்னமாய் நிமித்த வுபாதான காரணமாயிருந்துகொண்டு தான்தானே சிருஷ்டித்துத் தான்தானே பிரவேசித்ததென்று சுருதி சொல்லுகிற படியினால் சீவேஸ்வர பேதமாகிய சுசாதி பேதமில்லை. சீவேஸ்வரரைப் பார்க்கிலுஞ் சடப்பிரபஞ்சத்திற்குச் சுதாசத்தை யில்லாதபடியினால் சுத்திகாரசிதம் சொப்பனப் பிரபஞ்சம் ரச்சுசர்ப்ப முதலானதுகளைப்போல் மித்தையாபூதமாய் வாதிக்கப்படுகின்றது. ஆதலால் விசாதிபேதமில்லை. ஆத்மாவுக்குச் சச்சிதானந்த மெல்லாஞ் சொரூபமா யிருக்கிறபடியினால் சுவகதபேதமில்லை. ஆனபடியினாலாத்மா சுசாதிக விசாதிக சுவகத பேத ரகித சொரூபமென்று தத்பதத்துக் கர்த்தமாயிற்று

ச-கை. இனி தொம்பதத்திற் கர்த்த மேதென்னில்,

உ-ம். தேகேந்திரியாதி களுக்கெல்லா மதீதமாய் சிரவண மனன நிதித்தியா சனத்துடன் கூடியிருக்கிற பிரத்தியேகாத்ம சைதன்னியமே தொம்பதத்திற் கர்த்தமென்று சொல்லப்படும்.

ச-கை. அசிபதத்திற் கர்த்த மேதென்னில்,

உ-ம். அவ்விருபதத்தின் லட்சியார்த்த் வயிக்கியமே அசியென்னும் பதத்திற் கர்த்தமென்று சொல்லப்படும்.

ச-கை. அதர்வண வேதத்தில் அயமாத்மாப் பிரமமென்னும் வாக்கியத்தில் அயமென்னும் பதத்திற் கர்த்த மேதென்னில்,

உ-ம். ஆத்மா அபரோட்சசொரூபமென்று சொல்லப்படுவது.

ச-கை ஆத்மா அபரோட்சசொரூபமானால் கடாதிகளைப்போல் திரிசியமாய்க் காணப்பட்டுச் சடமாயிற்றோவென்னில்,

உ-ம். திரிசியமாய்க் காணப்படுஞ் சடமாயிருக்கிறது மல்ல.

ச-கை. சொர்க்காதிகளைப்போற் பரோட்சமாய்க் காணப்படாததோவென்னில்,

உ-ம். சொர்க்காதிகளைப்போற் பரோட்சமாய்க் காணப் படாததுமல்ல. ஆதலால் அந்த நித்தியாபரோட்ச சொப் பிரகாச சொரூபத்தை யறிவாகவே யறியவேண்டும்.

ச-கை. ஆத்மாவென்னும் பதத்திற் கர்த்த மேதென் னில்,

உ-ம். அகங்கார முதல் ஸ்தூலதேக பரியந்தமான காரியகாரண சங்கவாதத்துக்கெல்லா மதிஷ்டானமாய் இருதயகமலத்தில் அகமகமென்று ஸ்மரித்துக்கொண் டிருக்கிற பிரத்தியேகாத்ம சைதன்னியமே யாத்மாவென் னும் பதத்திற் கர்த்தம்.

ச-கை. ஆனால் பிரமபதத்திற் கர்த்த மேதென்னில்,

உ-ம். திரிசியமாய்க் காணப்படுகிற ஜகத்துக் கதிஷ் டானமாயிருக்கிறபடியினால் தத்துவமாயிருக்கிற பரமாத்ம சைதன்னியமே பிரமமென்னும் பதத்திற் கர்த்தமான லட் சியார்த்தம். அங்ஙனமான வஸ்து வெதுவோ அதுவே, நித்தியாபரோட்ச சொப்பிரகாசமா யிருக்கிற பிரத்தி யேகாத்ம சைதன்னியமென்று சுருதியிற் சொல்லப்படுகின் றது. மேலும் முதல்வாக்கியந் தற்போதஞானமென்றும், இரண்டாம்வாக்கியஞ் சாட்சி ஞானமென்றும், மூன்றாம் வாக்கியஞ் சிவஞானமென்றும், நான்காம்வாக்கியம் பிரம ஞானமென்றுஞ் சொல்லப்படும்.

ச-கை. இப்படி வாக்கியங்க ளொன்றுக்கொன்று பேதம் வருவானே னென்னில்,

உ-ம். பேதமல்ல. ஆசிரியர் சீடனுக்குப் பிரஞ்ஞானம் பிரமமென்றுபதேசிக்கச் சீடனும் பிரஞ்ஞானமாவ தேதென்று வினவ, அகமென்றிருக்கிறதே யஃதென்று இரண்டாம் வாக்கியத்தை யுபதேசிக்க, சீடனும் அனேகமான அகத்திலெந்த வகமென்று வினவ, சிவேஸ்வரனுக் கப்பாற்பட்ட பிரமமென்று மூன்றும் வாக்கியத்தை யுபதேசிக்க, சீடனும் சுவாமீ! சிவேஸ்வரனும் உபாதியுந் தள்ளுபட்டபோதே துவைதமாச்சுதே யென்று வினவ, அன்னியமான துவைதமும் பிரமத்தைத் தவிரவில்லையென்று நான்காம் வாக்கியத்தை யுபதேசித்தருளினர். ஆதலால் சச்சிதானந்த அத்வைத சொரூபமே நீ; நீ சீவனல்ல; நான்கு வர்ணமும், நான்கு ஆசிரமமும், சட்பாவனையும், சட்கோசமும், சட்கோடியும், சட்ரமியும், சுகதுக்ககர்த்தவ்யமும், ஆகாமிய சஞ்சித பிராரத்தங்களு முனக்குக் காலத்திரயத்திலு மில்லையென் றறிக.

ச-கை. ஆனல் முன்போலவே நாமரூப பதார்த்தங்கள் தோற்றப்படுகின்றதே யென்னில்,

உ-ம். அப்படி தோற்றுதவகைக்கோ ருபாயஞ் சொல்லுகிறேம். அஃதென்னவென்று கேட்பாயாகில், எதினுல் பதார்த்தரூபந் தோற்றப்படுகின்றதோ, அதைப் பரிட்சித்தால் ஒருபதார்த்தமு மில்லாமற்போம். ஆதலால் எந்நேரமும் நீ நிராலம்ப சொரூபத்தில் திருஷ்டிமாறு திருப்பாயாகில், அகண்ட சமரச சுகசொரூபமான ஆத்மா வாவாயென்று, சீஷனது சிரசில் தமது திவ்வியாஸ்தத்தை வைத்துப் பூரணனுக்கிரகஞ் செய்தருளினர்.

அப்படி தரிசன பரிசனங்களினல் ஸ்ரீசற்குருவானவர் சம்சயமறவனுக்கிரகம்பண்ணி, நிருமலப்பாட்டையைக் காட்டிவிட்டபடியினல், அந்தச் சீடன் பாகியதிருஷ்டியை

மறந்து அந்தர்முகப்பட்டு ஸ்தூல சூட்சும காரணசரீர வுபாதிகளைக் கைவிட்டுச் சொரூபாகாரப் பட்ட மாத்திரத்தில் ஞானசத்தி பிரவேசமானாள்; அதனால் அஞ்ஞான சத்தி நாசமானாள் அதனால் சாத்விகபாவம் பிறந்தது. அதனாற் பதார்த்த வெதிருத்தமில்லாமற் போச்சுது. அதனால் ஞானசாம்பிராஜ்யபட்டம் வந்தது. அதனாலானந்த தீர்த்தமெழுந்து சீடனாகிய மடுவை மூடிக்கொண்டோடும் போது விவேகமென்கிற நீச்சுக்காரன் முழுகிப்போனான். ஆங்காரமாகிய கர்த்தவ்ய விருட்சம் வேரோடு பேர்ந்து போச்சுது ஆசையென்கிற பட்சிக்கூடு கலைந்தது. அப்போது சுவானுபூதியாகிய வரமனையில் முத்திகாந்தையை யாலிங்கனம் பண்ணிக்கொண்டு தன்னை யிழந்துவிட்டான் இந்திரியங்களெல்லாந் தன்னுடைய ஆதாரத்திற் பிரவர்த்தித்துக்கெண்டிருந்தது.

அப்பால் இத்தன்மையவான சுவானுபவம்பெற்ற சீடன் ஸ்ரீசற்குருநாதனுடைய பாதத்தில் விழுந்து நமஸ்கரித்தெழுந்து நின்று, ஓய் அனாதிபந்து கருணைசமுத்திரமான குருசுவாமீ! அனாதிகாலமே என் சொரூபத்தை யிழந்து என்னை நான் திருடிக்கொண்டு மூடனாயிருந்தேன். அப்படியிருந்த என்களவைக் கண்டுபிடித்து என் சொரூபத்தை யுள்ளபடி கரதலாமலகம்போல் சம்சயமறக் காட்டிக் கொடுத்த தேவரீரது பேருதவிக்கு அடியேன் செய்யுங் கைம்மாறு ஒன்றுக் காணேன். உமது கிருபாதரிசன மாத்திரத்தினால் அகங்கார மோகநீங்கிக் கிருதகிருத்தியனானேனென்று பலவாறாகத் துதித்து எப்போதும்போற் சமரசானந்த சுவானுபூதிநிலையில் ரமித்திருந்தான்.

ஆதலால் இந்த மகாவாக்கியத்தி னர்த்தத்தை ஸ்ரீசற்குரு சந்நிதானத்தில் சந்தேக விபரீதமற விசாரித்தறிந்தவனே சீவன்முத்தன்; அவனே பரமுத்தன். அவனே

பிரமசொரூபம் என்று சொல்லப்படும். வேனும் வேதத்தையும் பிராமணர்களையும் பிரமதேவரையும் பிரமமென்று சொல்வது கூடாது. ஏனென்றால் காணப்பட்டதெல்லா மழிந்துபோகிற படியினால் சர்வகாரணமான நிர்க்குணப் பிரமவஸ்துவை மாத்திரம் பிரமமென்று சொல்லவேண்டிய தென்று சகல சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணுகமாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சயமில்லை சித்தம்.

## மகாவாக்கிய நிருபகம்

முற்றிற்று.

ஆ பிரகரணங்கள்—45.

# வாசுதேவமனனம்.

முற்றுப்பெற்றது.



களையெல்லாம் யாவரும் நன்றாய் அறியுமாறு அநேக உபமான உபமேயங்களோடும், பொருத்தமுள்ள சிறு விநோதக் கதைகளோடும் மிகவும் தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது. இதனுடைய உண்மை புத்தகத்தைப் படிக்கும்போது தான் விளங்கும். இதன் விலை அணு **8.**

---

# தாயுமானவர் பாடல்.

## புதிய பதிப்பு.

அகண்ட பரிபூரண சச்சிதானந்த வடிவமாயுள்ள சொரூப நிலைமை மௌன சற்குரு கடாட்சத்தால் அடையப்பெற்ற ஸ்ரீ தாயுமானசுவாமிகள் உலகுய்ய வகுந்தருளிய பாடல்கள், படிப்போருடைய மனதையும், கேட்போரது சிந்தையையும் செவியையும் பிணிப்பதாயும், உள்ளுந்தோறும் உள்ளத்தை உருக்குவதாயும், புருஷார்த்தங்களை புத்தியில் அமையும்படி புகட்டுவதாயுமுள்ளன வென்பது பெரும்பாலர் அறிந்தவிஷயம். பவத்துன்பத்தை யகற்றி பரலோக சாதனமாயுள்ளவைகளைக் கைக்கொண்டொழுக விருப்பமுள்ளவர்கள் சீக்கிரத்தில் தாங் கோரியதற்கு மேம்பட்ட நித்திய பேரின்ப பதவியை எளிதில் அடைவதற்கு ஓர் இரகசியமான நெறியை தாம் குருவினிடத்துக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து அனுபவத்தில் கண்டு ஆனந்தித்தவாறு, எல்லோரும் அவ்வழியை யனுசரித்து நித்திய சுகத்தை அடையவேண்டுமென்னும் அருளுடன் தாயுமானவர் பலவிடங்களில் அடிக்கடி வற்புறுத்திக் கூறிய ஓர் அரிய பெரிய வொப்பற்ற விஷயத்தை, நமது ஆரிய சகோதரர்கள் மேற்படி பாடல்களைப் படிக்கும்போது தவறாமல் கவனிக்கும்படியாக ஓர் நூதன ஏற்பாடுசெய்து இப்புத்தகம் அச்சிடப்பட்டிருக்கிறது.

சென்னை

# திராவிட புத்தகடிபோ,

52, பூவிருந்தவல்லி ரோட், மதராஸ்.

---

## சுந்தரிமனோகரன்.

### ஓர் விநோத கதை.

மனோகரன் என்னும் ஓர் பிரபுவின் புத்திரன் இளமையிலேயே தாய்தந்தையற்று ஓர் பிரபுவீட்டில் வளர்ந்து, அறிவுமுதிர்ந்து யுக்த வயதடைந்தபோது, தன்னிஷ்டப்படி மகா சௌந்தர்யமும், கூர்மையான புத்தியும், நற்குண நற்செய்கையும் அமைந்த பதிவிரதா சிரோமணியாகிய சுந்தரியைக் காதலித்ததனால், அவன் யாவர் மனமும் உருகத்தகுந்த கொடிய துன்பங்கள் நேர்ந்ததை, அனுபவித்த மாதிரியையும், பிறகு தன் காதலியை மணம்புரிய அவன் மிகவும் ஆச்சரியப்படத் தக்கனவும் வியக்கத் தக்கனவுமான புத்தி யுக்திகளோடு முயன்றதையும், அதனால் அவனடைந்த சுக துக்கங்களையும் இக்கதையில் கூறப்பட்டிருக்கின்றன. இதை வாசிப்போர் யாவரும் அடிக்கடி அதிக ஆச்சரியத்தையும் உற்சாகத்தையும் அடைந்து, அவர் மனம் கதையிலேயே லயித்திருக்குமாறு அநேக இலௌகிக தந்திரம், யுக்தி, உபாயங்களுடன் எழுதப்பட்டிருக்கிறது. இதன்றியும இலௌகிக வைதீக சம்பந்தமான விஷயங்களும், இல்லறத்திற் குரித்தான அநேக சங்கதிகளும் அடங்கியிருப்பதால் இப்புத்தகம சகலருக்கும் நன்மையைப் பயக்கத்தக்கதாயிருக்கும். சிறிது கற்றோரும் பெண்பாலரும் எளிதில் வாசித்துணருமாறு சுலபமான தமிழ் வசனநடையில் எழுதப்பட்டிருக்கிறது. இது 200 பக்கங்களுடையதாய் வெண்மையான திக்கு சிமைச காகிதத்தில் பார்ப்போர் மனதைக் கவரும்படியாக அச்சிடப்பட்டு விற்பனைக்குத் தயாராயிருக்கிறது. இதன் விலை, அணா 12.

# வேதாந்தபோதினி

அல்லது

## நாலு சிஷ்யர்களின் கதை.

(மூன்றாவது பதிப்பு.)

நன்றாய் சீர்திருத்தப்பட்டு நூதன விஷயங்கள் அநேகம் சேர்க்கப்பட்டிருக்கிறது.

இப்புத்தகம் மிகச் சிறந்த வேதாந்த நூலென்று யாவராலும் புகழப்பட்டு வருகின்றது. இந்நூலையனுசரித்தே இரண்டாம்பாகம் ஒன்று எழுதினால் மாந்தர்களுக்குத் தற்காலத்தில் மிக்க உபயோகமாயிருக்குமென்று அநேகர் பன்முறை நூலாசிரியரைக் கேட்டுக்கொண்டபடியால், இதுகாறும் இரகசியங்களென வழங்கப்பட்டு சிலருக்கே பயன்பட்டுவந்த அரிய விஷயங்களையெல்லாம் திரட்டி நன்னடையில் யாவரும் அறியும்வண்ணம் எழுதி, மேற்கூறிய வேதாந்தபோதினியுடன் சேர்த்து அச்சிடப்பட்டுவருகிறது.

நற்குணம்வாய்ந்த சுமதி, சத்தியகாமி, சாந்தன், சுசாது என்னும் நான்கு சிறுவர்களும் உலகசிற்றின்பத்தை வெறுத்து, பேரின்பத்தையடைய, சற்குருவினிடத் திருந்தகாலத்து அக்குரு அவர்களுக்குக் கர்மம், பக்தி, யோகம், ஞானம் என்பவைகளைப்பற்றிச் செய்த உபந்நியாஸங்கள் மிக்கத் தெளிவாகவும் ஆச்சரியமாகவுமிருக்கும். அவ்வுபந்நியாஸங்களில் முக்கியமாய் இராஜயோகமும், ஞானயோகமும் அதிக விஷயங்களடங்கியதாய் வெகு நன்றாயிருக்கும். உலகம், மாயை, ஜீவன், ஈசுவரன், ஜீவேசுவர பேதாபேதங்கள், பிரம்மம் இவைகளைக்குறித்துப் புத்திமான்களுக்கு அடிக்கடியெழும் சந்தேகங்களைப் பரிகரிக்க, இந்த வேதாந்தபோதினியென்னும் புத்தகத்தைப்போல தெளிவாக எளிய தமிழ் வசன நடையில் எழுதப்பட்ட வேறு புத்தகம் கிடைப்பது அருமை. வேதாந்தத்தின் அதிக நுட்பமான பொருள்

பல விலக்குகளையும் தர்ம சாஸ்த்திரம் வற்புறுத்திக் கூறுவது எது பற்றியோ? மேற்கூறிய மறதியை நீக்கி எல்லா சீவர்களும் ஒரு சொரூபந்தானென்னும் ஞானத்தை உண்டாக்க கருதியல்லவா? அவ்வானந்த சொரூபத்தையன்றி யன்னியமொன்றுமில்லை யெனக்கூறுது கூறவல்லவோ தர்ம சாஸ்திரம் அவ்வாறு முறையிடுகின்றது.

மேற்கூறிய வேத உபநிஷத்துக்களின் சாரங்களையெல்லாம் உள்ளடக்கிக்கொண்டு, ஓதற்கெளிதாய், வேதப்பொருளாய், உள்ளுந்தோறும் மாந்தர் மனத்தை யுருக்கும் வலியுடைய 1330 குறள் வெண்பாக்களுடையதாய் ஜீவகாருணியத்துடன் ஈந்தருளிய திருவள்ளுநாயனாரது திருக்குறள், தர்ம சாஸ்திரங்களில் மிக்க சிறப்புடையதென்பது கூறுமலே விளங்கும். நன்னெறியை நாடும் நானுவருணத்தார்களும் பேதமின்றி அவாவுடன் அனவரதமும் படிக்கத்தகுந்த நூல் திருக்குறளைப்போலெங்குளது? ஆரிய சகோதரர்களின் விருத்திக்குச் சாதனமான நூல்களையே பதிப்பித்துவரும் சென்னை, திராவிட புத்தக டிபோவில், மேற்கூறிய அரிய திருக்குறள், நூலாசிரியர் சரித்திரத்துடனும், திருவள்ளுவ மாலையுடனும் சேர்த்து அச்சிடப்பட்டிருக்கிறது. தபாற்கூலி வி. பி. சார்ஜ உள்பட விலை அணு **4.**

---

# சுகர் கைவல்லியம்.

இது இந்து மதாபிமானிகளுக்கு இன்றியமையாத நூல். சுகப்பிரம்ம ரிஷிக்கும் ஜனகமகாராஜனுக்கும் தத்துவ விஷயமாய் நடந்த சம்பாஷணையை யாவரும் படித்தறிந்து உய்யும்வண்ணம் எளிய நடையில் தமிழ்ச் செய்யுள்களாக எழுதப்பட்டது. மிகச் சிறந்த வேதாந்த சாஸ்திரப் பயிற்சியில் அவாவுள்ளவர்களுக்கு மிக்க உபயோகமான வேதாந்தசார சங்கிரகமெனக் கூறத்தகுந்தது. உலகத்திருந்தும் உலகப் பற்றுச் சிறிதுமின்றி நித்திய முத்தர்களாய்

இதுகாறும் "தாயுமானவர் பாடல்" என்னும் புத்தகம் அநேக பதிப்புகளாக வெளிவந்திருப்பினும். தாயுமானவர் கருத்து, அவர் தெய்வம், அவர் நிஷ்டை, அவர் கொள்கை, அவர் உபதேசம் ஆகிய இவைகளை, பாடல்களுக்கு உரையில்லாமலே, ஆரிய பக்தசிகாமணிகளுக்கு அறிவிக்கும் நல்ல மூலபுத்தகம் இது வொன்றேயாம். இதன் விலை அணு **12.**

---

# திருக்குறள்.

---

துன்பத்தை யொழித்து இன்பத்தை யடையக்கருதியே உலகில் சகல ஜனங்களும் அவரவர்கள் நிலைமைக்கேற்ற வாறு முயன்று வருகிறார்கள். இது இயற்கையாகும். ஏனெனின், ஆனந்தமே சீவர்களின் சுயசொரூபமாதலின், அச்சுயசொரூபத்தின் மறதியே துக்க ஏதுவாகும். மாந்தர்கள் எத்தொழிலைச் செய்து எவ்வளவு பொருள் சேர்ப்பினும் அதனால் வரும் சுகம் அற்பமும் அநித்தியமேயாம். நித்திய சுகத்தை யடையவேண்டின் எல்லா துக்கமும் ஒருங்கே யொழியவேண்டும். 'சர்வ துக்க நிவர்த்தியைப் பெறவிரும்பின், துக்கத்திற்குக் காரணமாகிய மறதி நீங்கவேண்டும். மறதி நீங்கின் சுயசொரூபம் வாய்க்கும். அதுவே நித்திய பரமானந்தமாம். அதுவே முத்திநிலை. இந்நிலையில் எல்லா ஜீவர்களுடைய சொரூபமும் ஒன்றுதான். எல்லாம் ஆனந்தமயமன்றோ? இத்தகைய மேலான நிலையை யடைவதற்குச்சாதனமாகவே வேதங்களும் உபநிஷத்துக்களு மேற்பட்டன. அவைகள் நுண்ணறிவுடையோர்க்கே பயன்படுமாதலின், சர்வ ஜனங்களுக்கும் உதவியாகும் வண்ணம் மேற்கூறிய வேத உபநிஷத்துக்களை யாதரவாகக் கொண்டு மாந்தர்களுக்குண்டாயிருக்கும் மறதியைச் சுலபமாய் நீக்கி சுயசொரூப பிராப்தியை யடையச்செய்ய வெழுந்தது தர்மசாஸ்திரம். எவ்வுயிரையும் தன்னுயிர்போல் பாவிக்கவேண்டும். ஏழைகளுக்கிரங்கி அறஞ்செய்யவேண்டும் என்பனபோல பல விதிகளையும், கள்ளாமை, கொல்லாமை போன்ற

# நாஞ்ஜீவவாதக் கட்டளை,

## வேதாந்த தத்துவக் கட்டளை.

இவ்விரு புத்தகங்களும்

வேதாந்த விசாரணை செய்யப் புகுவோர் ஆரம்பத்தில் வாசிக்கவேண்டிய அரிச்சுவடிபோன்றவை. எடுத்த விசாரணை மேன்மேலும் நன்முய் நிகழச்செய்ய பலமான அஸ்திபாரத்தை போடும் நல்ல தத்துவக் கட்டளைகள் வேறில்லாமையால் இவை யிரண்டையுமே சேர்த்து ஒரு புத்தகமாக அச்சிடப்பட்டது. விலை அணா. 1½.

---

# பட்டினத்துப்பிள்ளையார்

## பாடல்

ஓட்டுடன்பற்றின்றி ஒரு கணத்திலுலகைத்துறந்த செல்வப் பட்டினத்தடிகள் பாடல்களைப்பற்றி விசேஷமாகக் கூறவும் வேண்டுமோ? உண்டு போவின்றும் உலகைத் திரமெனக்கண்டு மருண்டுழலும் சீவனது ஆபாச குணத்தை வெளிப்படையாய் நிந்தித்து, பரபக்தியையும் பர ஞானத்தையும் விரைவில் விர்த்திபாக்கி நித்திய சுகத்தை எளிதில் தாத்தகுந்த அவர் பாடல்களை நன்முகப் பரிசோதித்து யாதொரு பிழையுமின்றி வெண்மையான காகிதத்தில் முத்துபோன்ற சுத்தமான அச்செழுத்துக்களில் சென்னை திராவிட புத்தக டிபோவில் பதிப்பிக்கப் பட்டிருக்கிறது. சூட்சமத்திலிருப்பது மோக்ஷமென்னும் பழமொழியின் உண்மை இவாது சுருக்கமான நூலைப் படிப்பின் நன்கு விளங்கும். இதன் விலை அணா 2.

---

வாழ்ந்த இரண்டு பெரிய உத்தம ஞானிகளின் சம்பாஷணையாதலால், இச்சுகர்கைவல்லியமென்னும் புத்தகத்தைப் பன்முறை சிறப்பித்துக் கூறவேண்டியது வீணென விடப்பட்டது. உயர்ந்த காகிதத்தில் அச்சிடப்பட்டு இரண்டு அணா விலையுள்ள சிறிய புத்தகமாயினும் பெரிய விஷயங்களடங்கியிருப்பதால், சிறியோர் பெரியோர் யாவருக்கும் ஓர் பெருநிதிபோன்றதென தெரிவிக்கவேண்டியது மாத்திரம் கடமையாகும்.

---

# ஜன்மாந்திரம்

அல்லது

## இராமதாசர் உபதேசம்.

கடவுள் உண்டென்பதும், அவரால் சிருஷ்டிக்கப்பட்டது உலகமென்பதும், மனிதர்கள் அனுபவிக்கும் சுகதுக்கங்களுக்கு அவரவர் வினை காரணமென்பதும், வினையே பந்தம் அதன் ஒழிவே முத்தியென்பதும், சீவர்களுக்கு முன்னும் பின்னும் ஜன்மங்கள் உண்டென்னும் நம்பிக்கையை யாதாரமாகக் கொண்டெழுந்த கொள்கைகள். சிறிது யோசிக்கின் இதனுண்மை விளங்கும். ஆகையால் ஜகஜீவபரங்களின் உண்மையறிய விரும்புவோர், முன்னும் பின்னும் ஜன்மம் உண்டென்பதற்குப் போதுமான நியாயங்களை விசாரித்துத் தெளியவேண்டும். விசாரணைகளிலெல்லாம் மேம்பட்ட இச்சன்மாந்திர விசாரணையை ஒவ்வொருவரும் ஆரம்பத்தில் செய்தாகவேண்டியது. இதைக் கருதியே இராமதாசர் என்னும் ஓர் ஞானி சந்திரசேகரப் பிரபுவுக்கு வெகு காலங்களுக்குமுன் உபதேசித்தருளிய ஜன்மாந்திர நிரூபணத்தை இப்போது அச்சிடலாயிற்று. எளிய தமிழ் வசனநடையில் எழுதப்பட்டது. விலை அணா **2.**

---

324

# பஞ்சதந்திரக் கதை.

---o---

இது நீதிநூலாகும். தர்மாதர்மங்களைப் போதித்து அறிவை விளங்கச் செய்யும், புத்தியைக் கூர்மையாக்கும். இதிலுள்ள கதைகள் மனதை ரமிக்கச் செய்வதுடன் வெகு விநோதமாயிருக்கும். இதைப் படிப்பவர்கள் தமிழ்ப்பாஷையில் நல்ல ஞானமடைந்து நன்றாய்ப் பேசவும் எழுதவும் சக்தியைப் பெறுவார்கள். உயர்ந்த காகிதத்தில் ஓர் பிழையுமின்றி அச்சிட்டிருப்பதால், விலை அணா **5.**

---

# பத்திரகிரியார் புலம்பல்.

---o---

இப்பூவுலகில் குபேரனென விளங்கி, ஆதமானந்தத்தை நாடிய அநேக பெரியோர் அதிசயிக்க ஒரு கணத்தில் உலகைத்துறந்த உத்தமோத்தம பட்டினத்தடிகளுடைய திருவருளைப்பெற்றதால். அவருக்கு முன்கித்திய பேரின்ப முத்தியையடைந்த பத்திரகிரியார் என்னும் அரசன் மிக்குயர்ந்த அனுபவத்தையே அனவரதமும் நாடி சிவயோக மெய்ஞ்ஞானபாடிய பாடல்களை "பத்திரகிரியார் புலம்பல்" என்னும் பெயர் பெற்று வழங்குகின்றன. இவாது ஆசானே மிக்கச் செல்வவானாயிருக்கையில் சந்நியாசியானவர். இவரோ அரசனாயிருக்கையில் அவ்வாசிரமத்தை யடைந்தவர். இவர்களுடைய பாடல்களை அடிக்கடிப் படிக்கும்போது அவைகளின் பெருமை விளங்குமேயன்றி அவைகளைப் புகழ்ந்துபேசப் போதல்லவென்று கருதி அதிகம் புகழாது விடுத்தனம். "பத்திரகிரியார் புலம்பல்" சிறந்ததோர் இரத்தினமாகும். அதற்குத் தக்கவிலைகொடுப்பது அருமையானமையின் அச்சுகூலியும் காகிதச்செலவுமாகிய ஒரு அணாவையே விதிக்கப்பட்டது. உயர்ந்த காகிதம், அழகான பயிண்டு.

---

# வைராக்கிய சதகம்.

மதுவுண்ட பேய்க்குரங்குபோன்ற மனதிற்கும் முத்தி நெறியிலே முயன்று முக்காலமும் முக்கண்ணன் பதத்தையே விரும்பும் விவேகத்திற்கும் நடந்ததோர் திவ்ய சம்பாஷணையை சாந்தலிங்க சுவாமிகள் சதகமாகப் பாடியருளினார். இந்நூல் மாந்தரனைவர்க்கும் தெளிவை உண்டாக்குவதில் மிகச் சிறந்ததாதல்பற்றி, விஷயம் நன்றாய் விளங்கும்படி நல்ல விருத்திபுரையுடனும் அநேக மேற்கோளுடனும், அச்சுப்பிழை இலக்கணப் பிழையாதுமின்றிச் சுத்தமாய் அச்சிடப்பட்டிருக்கிறது. இதன் விலையோ மிகவும் குறைந்தது. அணா இரண்டே தான்.

---

# வள்ளலார்சாஸ்திரம்-20.

இது மேன்மைபெற்ற நூல்களிலொன்று. வேதாந்த சித்தாந்த சமரசமாகிய இந்நூலை, இருபது சாஸ்திரங்களாக சிவஞானவள்ளலார் எல்லோருக்கும் எளிதில் பொருள்விளங்குமாறு இனிய செய்யுட்களாக திருவாய்மலர்ந்தருளினர். நமது மதத்தின் இரகசியம், உண்மை, பெருமை இவைகளையறியவேண்டின் இப்புத்தகத்திலுள்ள சத்தியஞானபோதம், பதிபசுபாசவிளக்கம், ஞானவிளக்கம், அத்துவிதக்கலிவெண்பா, அதிரகசியம், கர்ணமிர்தம், சுருதிசாரவிளக்கம் என்னும் அதிகாரங்களைப் படிப்பாராயின் நன்றாக விளங்கும். இந்நூலின் கடையில் இந்துமதாபிமானிகளுக்கு அடிக்கடி யெழும் சங்கைகளை அறுபத்துநான்காக வகுத்து அவைகளுக்குத் தக்க சமாதானம் மேற்கோளுடன் எழுதியிருக்கிறது. இவ்வருமையான புத்தகத்தின் விலை ரூபா. **1-8.**

---

## சென்னை, திராவிட புத்தக டிபோ பதிப்புகள்.

# வாசுதேவமனனம்

என்று வழங்குகிற

## விவேகசாரம்.

---

ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூபமாகிய ஸ்ரீ வாசுதேவ யோகீந்திரர் தமது சுவானுபூதிப் பிரத்தியக்ஷத்தை உலகம் எளிதிலடைந்து ஆனந்தாதீதமாகும் பொருட்டுக் காருண்யத்தினாற் கிருபைகூர்ந்து வடமொழியில் நாற்பத்தைந்து சுலோகங்களாய்த் திருவாய்மலர்ந்தருளிய விவேகசார கிரந்தார்த்தத்தைத் தமிழில் மொழிபெயர்த்து நாற்பத்தைந்து பிரகாணங்களாகத் தொகுத்தது. வசனரூபமாய் சகல வேதாந்த சாஸ்திரார்த்தங்களு மடங்கியிருக்கின்றமையால் முமுட்சுகளிற் கற்றவர்களன்றி மற்றவர்களும் எளிதிலறிந்து மோட்சானந்தத்தைப் பெறும்படியான உபகாரார்த்தத்தைக் கருதி, சங்கை உத்தாரங்களாய் சுத்தப்பிரதியாக வெண்மையான திக்கு கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டுள்ளது. இதன் விலை ரூபா. **1.**

---

முக்கிய கவனிப்பு:—மேற்கண்ட புத்தகங்களும் இன்னும் வேறு புத்தகங்கள் வேண்டுபவர்கள் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதிக்கொள்ளலாம்.

மானேஜர்,

திராவிட புத்தக டிபோ,

நெ. 52, பூவிருந்தவல்லி ரோட், மதராஸ்.

PRINTED AT THE TAYLOR WORKS, MADRAS.

சென்னை, திராவிட புத்தக டிபோ பதிப்புகள்.

# ஸ்ரீ குமாரதேவர்

# சாஸ்திரக்கோவை.

[மஹாராஜா துறவு முதலிய 16—சாஸ்திரங்களடங்கியது.]

அகண்டபரிபூரண சச்சிதானந்த வடிவமாயுள்ள சொரூப நிலையைச் சற்குரு கடாட்சத்தினால் சாதன சதுஷ்டயமுடைய புருஷர்கள் எளிதில்டைவதற்குச் சாதனமாக வெளியாய ஞான சாஸ்திரங்களுள் ஸ்ரீ குமாரதேவ ரருளிச்செய்த சாஸ்திரக்கோவையும் ஒன்றுமென்பது வெள்ளிடைமலையாம். மகாராஜா துறவுமுதல் சிவசமாசவாத அகவலீறாயுள்ள இச்சாஸ்திரக்கோவை ஓதற்கெளிதாய், உணர்தற்கரிதாய், வேதப்பொருளாய், பிரமான்ம ஐக்கியத்தைக் கூறுவதிலேயே தாற்பரிய முடையதா யிருப்பதும் பிரசித்தம்.

துறவின் றன்மையையும், தேகம் சித்திபெற்றால் முத்தியுண்டாமென்பதன் றன்மையையும், சாதன சதுஷ்டயத்தின் றன்மையையும், மகா வாக்கியத்தின் பொருளையும், சொரூபானுபவத்தின் றன்மையையும், வேதாகமங்கள் கருத்துவகையால் வேறுபாடின்றி யிருக்கும் வகையையும், தத்துவஞானத்திற்குப் பரம்பரா சாதனமாயுள்ளவைகளின் றன்மையையும், நாமரூபத் தோற்றமின்றிச் சச்சிதானந்த வடிவபரம்பொருளாக நிலைத்தலே மோட்சமென்பதையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் செப்பமாக விளக்கியுள்ள இந்நூல் துக்கநிவர்த்தியிலும் பரமாநந்தப் பிராப்தியிலு மிச்சையுள்ள ஒவ்வொருவருக்கும் அத்தியாவசியமாய் அறியவேண்டற் பாலதாமென்பதும் குன்றின்மேலிட்ட விளக்காம்.

இத்தகைய அருமையும் பெருமையும் வாய்ந்த இச்சாஸ்திரக்கோவையைப் பலர்க்கும் உபயோகமாக்குவான் கருதித் தக்கவரைக்கொண் டாராய்ச்சி செய்வித்துச் சுத்தமாக்கி உயர்ந்த பள பளப்புள்ள கடிதத்தில் பைகா (பெரிய) எழுத்தில் அச்சிடப்பட்டு வருகின்றது.

சுவடிகள் பாதுகாப்பு மய்யம் அரியநூல்
தமிழ்த் தாய் 67 - வெளியீடு

# வாசுதேவமனனம் என்று வழங்கும் விவேகசாரம்

Pub No : 842
ISBN : 978-93-85165-53-5
வாசுதேவமனனம் என்று வழங்கும் விவேகசாரம்
220.00